





ஸ்ரீ:

ஸ்ரீமதே ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:
ஸ்ரீமதே ஆதிவண் சடகோப யதீந்த்ர மஹாதேசிகாய நம:
ஸ்ரீமதே ஸ்ரீவண்சடகோப ஸ்ரீ வேதாந்ததேசிக யதீந்த்ர மஹாதேசிகாய நம:

ஸ்ரீமதஹோபிலமடம் 40-வது பட்டத்தையலங்கரித்த
ஸ்ரீவண்சடகோப ஸ்ரீரங்கநாதசடகோப யதீந்த்ரமஹாதேசிகன்
பூர்வாச்ரமத்தில் அருளிய

# ஸ்ரீ பாஷ்யார்த்த மணிப்ரவாள தீபிகையின்,

தமிழ்க்கருத்தாக்கமான
சொக்கனூர் வித்வான் Dr. எஸ். வி. நரஸிம்ஹாச்சார்யர், M. A., Ph. D. இயற்றிய

# ஸ்ரீ பாஷ்யார்த்த தீபிகை

முதல் அத்தியாயம்

1989





ஸ்ரீ:

ஸ்ரீமதே ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

ஸ்ரீமதே ஆதிவண் சடகோப யதீந்த்ர மஹாதேசிகாய நம:

ஸ்ரீமதே ஸ்ரீவண்சடகோப ஸ்ரீ வேதாந்ததேசிக யதீந்த்ர மஹாதேசிகாய நம:

**ஸ்ரீமதஹோபிலமடம் 40-வது பட்டத்தையலங்கரித்த**
**ஸ்ரீவண்சடகோப ஸ்ரீரங்கநாதசடகோப யதீந்த்ரமஹாதேசிகன்**
**பூர்வாச்ரமத்தில் அருளிய**

# ஸ்ரீ பாஷ்யார்த்த மணிப்ரவாள தீபிகையின்,

**தமிழ்க்கருத்தாக்கமான**
**சொக்கனூர் வித்வான் Dr. எஸ். வி. நரஸிம்ஹாச்சார்யர், M. A., Ph. D. இயற்றிய**

# ஸ்ரீ பாஷ்யார்த்த தீபிகை

**முதல் அத்தியாயம்**

*1989*



ஸ்ரீ பாஷ்யார்த்த மணிப்ரவாள தீபிகையை

அருளிய

40-வது பட்டம் ஸ்ரீமத் அழகியசிங்கர்

ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்ய பாதுகா ஸேவக

ஸ்ரீவண்சடகோப ஸ்ரீரங்கநாதசடகோப யதீந்த்ர மஹாதேசிகன்



# ஸ்ரீ ப்ரஹ்ம ஸூத்ரார்த்த பத்யமாலிகையை

அருளிய

ப்ரக்ருதம் 44-வது பட்டம்

ஸ்ரீமத் அழகியசிங்கர்

**ஸ்ரீவண் சடகோப ஸ்ரீ வேதாந்த தேசிக யதீந்த்ர மஹாதேசிகன்**

ஸ்ரீ:

From:
**ஸ்ரீமத் அழகியசிங்கர்**
ஸ்ரீ அஹோபில மடம்
முகாம்: ஸ்ரீரங்கம்,
10—10—1988



To
**ஸ்ரீ உபய வேதாந்த,**
**Dr. S.V. நரஸிம்ஹாசார்யார்,** M.A., Ph.D.,
ஆஸ்தானவித்வான்
ஸ்ரீ அஹோபில மடம்,
ஸ்ரீரங்கம்.

    

|| श्रीमते श्रीलक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः ||

|| श्रीमते श्रीवण्शठकोपश्रीवीरराघवशठकोपयतीन्द्रमहादेशिकाय नमः ||

# ஆசாஸன ஸ்ரீமுகம்

———o———

**श्रीरंगनाथ शठकोप यतीशितारं श्रीभाष्यमन्त्रभगवद्विषयादिसक्तम् ।**
**सत्संप्रदायमुपदिश्य जनानवन्तं तत्सूक्तिदिव्यसुधया सततंस्मरामः ॥**

காருகுரிச்சிப் பெரிய அழகியசிங்கர் ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ திவ்ய பாதுகாஸேவக ஸ்ரீவண்சடகோப ஸ்ரீ ரங்கநாத சடகோப யதீந்த்ர மஹாதேசிகன் பரமக்ருபையாலே பூர்வாச்ரமத்திலே அருளிச்செய்த அருமையான க்ரந்தம்-ஸ்ரீபாஷ்யார்த்த மணிப்ரவாள தீபிகையாகும். நம் ஸந்நிதியில் வெளியிட்டு நீண்ட காலமானதால் ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபத்தில் ஈடுபடுவோருக்கு இந்நூல் கிடைப்பது அருமையாகிவிட்டது. ஆதலின், இதனை விரைவில் மறுபடி முத்ரணம் செய்ய நினைத்திருந்தோம். இந்த சமயத்தில், மதுரைக் கல்லூரியில் பேராசிரியராயிருந்து ஓய்வு பெற்றவரும், ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகிய சிங்கர் சந்நிதியில் க்ரந்த காலக்ஷேபம் செய்தவரும் பல மொழிகளில்

திறமையுள்ளவரும் நம் ஸந்நிதியின் ஆஸ்தான வித்வானுமான சொக்கனூர் நரஸிம்ஹாசார்யர் இந்த க்ரந்தத்திற்குத் தமிழில் ஸ்ரீபாஷ்யார்த்த தீபிகை யென்ற உரையை எழுதி அச்சிட எம்மிடம் அனுமதியும் வேண்டினர். அவரது உரையை மட்டும் வெளியிட்டால், மூலக்ரந்தம் லுப்தமாகவே அருகிவிடும் என்றெண்ணி அதனையும் சேர்த்து வெளியிடுமாறு அவரிடம் நியமித்தோம். அத்துடன் ஸ்ரீ பாஷ்யவித்யார்த்திகள் மனத்தில் ஸூத்ரங்களின் பொருளை நிலைநிறுத்துவதற்கென்றே ஒவ்வோர் ஸூத்ரத்திற்கும் ஒவ்வோர் ச்லோகம் வீதம் 562 ச்லோகங்கள் கொண்டதாய் நாம் எழுதியிருந்த ப்ரஹ்ம ஸூத்ரார்த்த பத்யமாலிகையையும் அவரையே தமிழில் உரை எழுதி ஒவ்வோர் ஸூத்ர வ்யாக்யானத்தின் முடிவிலும் வெளியிடுமாறு கூறினோம். அவரும் அதற்கிசைந்து அவ்வாறே க்ரந்தத்தை வெளியிட்டிருக்கிறார். அவ்வப்போது டி நூலைப் பார்த்தும், - கேட்டும் நாம் மகிழ்ந்து வருகிறோம். இந்த க்ரந்தம் - ஒவ்வோர் ஆஸ்திக வைஷ்ணவரின் க்ருஹத்திலும் வாங்கியும், வாசித்தும், சிந்தித்தும் போற்றத்தக்கது, இதன் மூலம் பூர்வாசார்யானுக்ரஹத்தையும் பெறலாகும். இந்த க்ரந்தத்தை ச்ரமம் பாராமல் ச்ரத்தையுடன் ப்ரசுரித்திடும் - ப்ரகாசகர், ஸ்ரீ உபயவே, வித்வான் - நரஸிம்ஹாசார்யருக்கு ஸகல ச்ரேயஸ்ஸுக்களும் ஏற்பட வேண்டுமென்று ஆசாஸனம் செய்கிறோம்.

जयतु यतिराजदर्शनमनन्तकल्याणगुणगणायतनम् ।
जयतु निगमान्तदेशिकदर्शितसद्वर्तनी प्रपञ्चेऽस्मिन् ॥

ஸ்ரீமாலோலஸ்ரீ:

H. H. The Jeear of Ahobila Mutt



ஸ்ரீமதே ராமானுஜாய நம:

ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன் (வழுத்தூர்) வேதாந்த லக்ஷ்மண முனிவரின் ஸந்யஸ்த குரு பரம்பரையாம் மணிஹாரத்தில் நாயகரத்னமாகத் திகழ்ந்த பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ பௌண்டரீகபுரம் ஆண்டவனின் ஆச்ரமத்தில் எழுந்தருளியிருக்கும் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ கோபாலதேசிகமஹாதேசிகன் அருளியது.

श्रीनिवासं परं ब्रह्म तदाश्रयं गुरूत्तमान् ।
नारायणं रंगनाथौ प्रणम्येदं विलिख्यते ॥

நம் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தம் மிகத் தொன்மையானது. போதாயனர் டங்கர், த்ரமிடர், குஹதேவர் போன்ற மஹர்ஷிகளின் காலந் தொட்டு விளங்கிவருவது. ராமானுஜஸித்தாந்தம் அல்லது ராமானுஜ தர்சனம் என்ற திருநாமத்தைக் கொண்டு சிலர் பிற்காலத்தியதாக மயங்குகின்றனர்.

இவர்களைத் தெளிவிக்கவே ஸ்வாமி தேசிகன்:-

"नाथोपज्ञं प्रवृत्तं बहुभिरुपचितं यामुनेय प्रबन्धैः
त्रातं सम्यग्यतीन्द्रैः इदमखिलतमःकर्शनं दर्शनं नः ॥

என்று மஹர்ஷிகளின் ஸித்தாந்தம் நம்மாழ்வாரால் நாதமுனிகட்கு (கி.பி. 584-924) உபதேசிக்கப்பட்டு, அவரிடமிருந்து உய்யக்கொண்டார், மணக்கால் நம்பிகள் மூலமாகத் தாம் பெற்றதை ஆளவந்தார் (16—7—916) தமது நூல்களினுலும், சிஷ்யர்களின் வாயிலாகவும் வளர்த்துப் போஷித்தார். சங்கராசாரியருக்குப் (788—820) பிறகு அத்வைதிகளால் மீண்டும் ஏற்பட்ட பல்வகை கலக்கங்களையும் ஸ்ரீ பாஷ்யாதி க்ரந்தங்களினுல் போக்கி பகவத் ராமானுஜர் நம் ஸித்தாந்தத்தை நன்கு காப்பாற்றினர். இந்த நம் தர்சனம் எதிர்காலத்திலும் தோன்றக் கூடிய துர்வாதங்களை நிரஸிக்கவல்ல கருத்தாழம் பொதிந்தது" என ஸாதித்தபடி.

எனவே, எதிர்வாதங்களைத் தகர்த்து நன்கு காப்பாற்றியபடியால். பிற்காலத்தில் "ராமானுஜ தர்சனம்" என வழங்கலாயிற்று. அரசாணி பாலை வேங்கடாத்வரீ எனும் மஹாகவியும்:-

"तदिहाखिलश्रुतिहितं रामानुजीयं मतम्"

உப நிஷத்துக்களிலுள்ள ஸகுணம், நிர்குணம், பேதம், அபேதம், கடகம் என முரண்பட்ட கருத்துக்களைக் கொண்டது போன்ற வேதவாக்யங்களுக்குச் சிறிதும் முரண்பாடற்ற ஒருமைப்பட்ட நற்பொருளை எடுத்துக்காட்டி மறைகள் அனைத்தும் விசிஷ்டாத்வைதக் கொள்கையையே ( கருத்தையே ) பறை சாற்றி நிற்கின்றன என்பதை மிகத்தெளிவாக விளக்கியபடியால் ராமானுஜமதம் என வழங்கலாயிற்று" என அணிந்துரைத்தார். ஆகவேதான் அமுதனாரும்:-

அண்ணல் இராமானுசன் வந்து தோன்றிய அப்பொழுதே
நண்ணரு ஞானம் தலைக்கொண்டு நாரணற்கு ஆயினரே.

இராமனாகவும், கண்ணனாகவும் பரமன் அவதரித்து அனைவரையும் உய்விக்க மக்களோடு மக்களாய்க் கலந்து வாழ்ந்தபோதும் மக்கள் "இவனே நாராயணன்" என அறியாதுமயங்கினர். ஆனால், ராமானுஜர் ஆசார்யனாக அவதரித்த பிறகு பரமனுக்கும் நமக்கும் உள்ள சேஷசேஷிபாவம், ஸ்வஸ்வாமி பாவம் ஆகிய தொடர்புகளை நன்கு உணர்ந்து அவனுக்கே தாஸர்களாய் பாகவதர்களாய் ஆயினர். எனவே ராமனாலும் கண்ணனாலும் செய்ய முடியாததை ராமானுஜர்செய்து காட்டியதாலும், ராமானுஜமதம் புகழ் பெற்றது எனத் தெளிவுபடுத்துகிறார்.

பின்னர் நம் தர்சனத்திற்கு அவைதிக மதங்களால் இடையூறுகள் நேர்ந்தபொழுது திருமலைமால் திருமணியின் அவதாரமான வேங்கடநாதார்யர் கவிதார்கிகஸிம்ஹமாய், வேதாந்தாசார்யராய்த் திகழ்ந்து வாதப்போர் நிகழ்த்தியும், பல்வகை நூல்களை இயற்றியும், தன் மூச்சு உள்ளவரை ஸ்ரீ பாஷ்யக்ரந்தகாலக்ஷேபம் ஸாதித்தும், பிறரும் விசிஷ்டாத்வைதமதத்தை "தேசிகதர்சனம்" எனப் போற்றும்படி நம்மதத்தைக் காத்து அளித்தார்.

பிறகு தூப்புல் வள்ளலின் இன்னருளால் நம் ஸித்தாந்தத்தைப் பரப்பப் பல ஆசார்ய பரம்பரையினர் ஸ்ரீ பாஷ்யத்தை வாசித்தும் ப்ரவர்த்தித் தலுமாகிற பகவத் ராமானுஜ திவ்யாஜ்ஞையை நிறைவேற்றி வந்தனர். அத்தகைய பரம்பரையில் தோன்றியவர் ஸ்ரீ உப. வே காருகுறிச்சி அய்யமாசாரியார். இவர் சிஷ்டர், பரமைகாந்தீ, நல்ல மந்த்ரஸித்தியுடையவர். நம் ஸம்ப்ரதாயத்தில் யாவரும் போற்றும் வைதுஷ்யம் உடையவர். இவரிடம் பலர் ஸ்ரீ பாஷ்யகாலக்ஷேபம் பண்ணிக்கொண்டிருந்தனர். காலக்ஷேபத்தில் ஸாதித் ததை மறக்காமலிருக்க, சிறு குறிப்புக்கள் எழுதி அனுக்ரஹிக்கும்படி ப்ரார்த்தித் தனர். சிஷ்யவாத்ஸல்யத்தினால் அன்று எழுதிய குறிப்புக்களே "பாஷ்யார்த்த மணிப்ரவாள தீபிகை" எனும் நூலாக பிரகாசித்தது. இவர் பின்னர் ஸ்ரீமதஹோபிலமட ஆஸ்தானத்தில் 40வது பட்டத்தில் மூர்த்தாபிஷிக்தராய் ஸ்ரீவண்சடகோப ஸ்ரீரங்கநாத சடகோப யதீந்த்ர மஹாதேசிகனாய் அவதரித்தார்.

ஸ்ரீ பாஷ்யார்த்த மணிப்ரவாள தீபிகை ஸ்ரீ பாஷ்யத்தை காலக்ஷேபம் பண்ணுகின்றவர்கட்கும். ஸாதிப்பவர்கட்கும் மிக உபயோகமானது. ஸேவிப்பவர்களைக் கவரும் வண்ணம் பலபலகருத்துக்களைச் சுருக்கமாகத் திரட்டித்தரும் இந்நூல் மணிப்ரவாள நடையில் அமைந்துள்ளது. ச்ருதப்ரகாசிகையையும், ஸ்வாமி தேசிகனின் பலக்ரந்தங்களையும் மனதில் கொண்டு ஸாதிக்கப்பட்ட இ ந் நூ லை இக்காலத்திற்கேற்ப அழகியவடிவில் நா க ரி லி பி யி ல் மாற்றி பதிப்பித்துத்தருமாறு இ தா னீ ம் அழகியசிங்கர் 44வது பட்டம் ஸ்ரீவண்சடகோப ஸ்ரீ வேதாந்த தேசிக யதீந்த்ர மஹாதேசிகன் அடியேனை நியமித்தாயிற்று. அப்பொழுது ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தைத் தேவையான குறிப்புக்களுடன் உயரிய முறையில் வெளியிடுவதில் முழுநேரமும் ஈடுபட்டிருந்தபடியால் இதற்குப் பிறகு செய்வதாக வாக்களித்திருந்தேன். ஆனுல், எமது பால்யஸுஹ்ருத், சொக்கனூர் நரஸிம்ஹாசாரியார் இப்பணியை ஏற்றுத் திறம்பட நிறைவேற்றியது எமக்கு மன நிறைவை அளிக்கிறது.

இவர் ஸம்ஸ்கிருதத்தில் வ்யாகரண சிரோமணிபட்டம் பெற்றுப் பின்னர் ஹிந்தி, தமிழ், ஆங்கிலமொழிகளைத் தானே பயின்று பி. ஏ., எம். ஏ, பட்டங்களையும், தேசிகப்பிரபந்தங்களைப்பற்றிய ஆராய்ச்சிக்கட்டுரை எழுதி பிஹெச். டி. பட்டமும் பெற்றுக் கலையில் டாக்டராகத் திகழ்கிருர். 'முயற்சி திருவினையாக்கும்", "उद्योगिनं पुरुषसिंहं उपैति लक्ष्मीः" ஆகிய பழமொழிகட்கு இலக்கியமாய்த் திகழும் உழைப்பாளர். இவர் ஸ்ரீ பாஷ்யார்த்த மணிப்ரவாள தீபிகையைப் பதிப்பித்தது மட்டுமின்றி, இந்நூலின் கருத்து சிறிதும் மாறுபடாமலும், மூலத்தைப்போன்றே சுருக்கமாகவும், பழகு தமிழில் ஸ்ரீ பாஷ்யார்த்த தீபிகை எனும் இந்த மொழிபெயர்ப்பு நூலையும் அழகிய எளிய நடையில் இயற்றி வெளியிட்டிருக்கிருர். இக்காலத்தில் முறையாக ஸம்ஸ்க்ருதம் பயிலாதவர்களிடையேயும் ஸ்ரீபாஷ்யாதி ஸம்ப்ரதாய க்ரந்தங்களைக்காலக்ஷேபம் பண்ணுவதில் ஆர்வம் மிகுந்திருப்பதைக் காண்கிறோம். அவர்கட்கு ஆசார்ய முகமாகக் காலக்ஷேபம் பண்ணியபிறகு கேட்டதை மீண்டும் நினைவுகூர ஸ்ரீ பாஷ்யார்த்ததீபிகை பேருதவி புரியும்.

மேலும் முக்கூர் மஹாவித்வான், ஸ்ரீ உ. வே. ராஜகோபாலாசாரியார் ஸ்வாமி இயற்றியருளிய ' ப்ரஹ்ம ஸூத்ரார்த்த பத்யமாலிகா " எனும் ச்லோக ரூபமான நூலையும், தான் இயற்றிய அதன் மொழிபெயர்ப்பையும் இத்துடன் அச்சிட்டிருக்கிருர். இப்பத்யமாலிகா, ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேபம் பண்ணிய வித்வான்களுக்கு ப்ரஹ்ம ஸூத்ரங்களைச் சொல்லும்பொழுதே பாஷ்யார்த்தங்களை நினைவில் கொள்ள மிகவும் உதவக்கூடியது. எனவே, இது மனப்பாடம் செய்வதற்கு உரியது, இந்த பத்யமாலிகாகாரரான ஸ்வாமி தற்சமயம் ஸ்ரீமடத்தின் 44ம் பட்டத்தில் மூர்த்தாபிஷிக்தராய் ஸ்ரீவண் சடகோப

ஸ்ரீ வேதாந்த தேசிக யதீந்த்ர மஹாதேசிகரெனத் திகழும் அழகிய
இவருக்கு ஸ்ரீ பாஷ்யமே மூச்சு. स्वतोयर्थं विस्मृति मुहुः सद्भिः अध
என்பதற்கிணங்க நாம் எப்பொழுது சென்றாலும், ஆச்ரமத்தில்வித்வான்
ஸ்ரீ பாஷ்ய விசாரம் நிகழ்ந்து கொண்டிருப்பதைக் காணநேரும்.

இங்கு ஸ்ரீமதஹோபில மாலோலன் ஸ்ரீ பாஷ்ய விஷயகமாஎ
நிர்மாதாக்களான தன் பக்தர்களை தன் ஆராதகர்களாகத் தன் ஆஸ்தா
எழுந்தருளும்படி ஸங்கல்பிப்பது நோக்கத்தக்கது.

இத்தகைய தனது ஆசார்ய பரம்பரையைச் சேர்ந்
அழகியசிங்கர்களுடைய க்ரந்தங்களைப் பெயர்த்தும், உரையிட்டும் அவர்
அதன் மூலநூல்களையும் அழகிய முறையில் அச்சிட்டு வெளியிட்டும் ஸம்
பணியாற்றிடும் சொக்கனூர், மாடபூசி, டாக்டர் நரஸிம்ஹாசா
தீர்க்காயுஸ்ஸையும், அரோக த்ருடகாத்ரத்தையும், ஸர்வாபீஷ்ட ஸித்
மேன்மேலும் ஸத்ஸம்ப்ரதாயப்பணியில் ஆர்வத்தையும்
அனுக்ரஹிக்குமாறு ஸ்ரீரங்க திவ்யதம்பதிகளையும், நம் பூர்வா
ஸந்ததியையும் பிரார்த்தித்து நாராயண ஸ்மரண பூர்வகமாக சுபமங்க
ஆசாஸனம் பண்ணுகின்றோம்.

விபவ மார்கழி
ஏற்ற கலங்கள்
5 - 2 - 89

நாராயண நாராயண

SRIMAD ANDAVAN,
Poundarikapuram Swami Asramam,
43-A/13, Asramam Road,
SRIRANGAM - 620 006.

ஸ்ரீ:



From
ஸ்ரீமதுபயவே வித்வான்
பனமுகை
V. நரஸிம்ஹாசார்யர்,
ஸ்ரீகார்யம்.
ஸ்ரீமதஹோபிலமடம்.
முகாம். ஸ்ரீரங்கம்.

To
ஸ்ரீமதுபய வே.
ஆஸ்தான வித்வான்
டாக்டர், எஸ். வி.
நரஸிம்ஹாச்சார்யஸ்வாமி
எம்., ஏ., பி. எச். டி.,
ஸ்ரீரங்கம்.



श्रीमते लक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः
श्रीमते श्रीवण्शठकोपश्रीवेदान्तदेशिकयतीन्द्रमहादेशिकाय नमः

# ப்ரஸ்தாவனை

गुरवो यत्र पूज्यन्ते साधुवृत्ताः शमान्विताः ।
वस्तव्यं तत्र युष्माभिः यत्र धर्मो न हीयते ॥

என்ற முன்னோரின் ஸ்ரீஸூக்தி - சமதமாதி ஸத்குணபூர்ணரான ஆசார்யவர்களின் பூஜார்ஹமான தேசங்களில் வசிப்பதால் தர்மம் குறையின்றி வளரும் என்று கூறுகிறது. மஹர்ஷியும் - கலியுகத்தில் கூட தாம்ரபர்ணீ, க்ருதமாலை, பாலாறு, காவேரி, பெரியாறு நதிக்கரைகளில் திராவிட நாட்டில் நாராயண பக்தர்களான மஹான்கள் அவதரிப்பார்கள் என்று அருளினார். அங்கு தாம்ரபர்ணீயென்ற பொருநையையே முதலில் குறிப்பிட்டார்.

நம்மாழ்வார் தொடங்கி, பற்பல ஸ்ரீ வைஷ்ணவ மஹாசார்யர்கள் அவதரித்ததால் சீரும் சிறப்பும் பெற்ற தாம்ரபர்ணீ ப்ரதேசத்தில் காருகுரிச்சி என்ற ஸ்ரீ க்ராமம், நம் ஸ்ரீமதஹோபில மட திவ்யாஸ்தானத்தில் 40, 41வது பட்டங்களையலங்கரித்த இரண்டு ஆசார்ய ஸார்வபௌமர்களின் அவதாரத்தால் வையகமே போற்றும் நிலை பெற்றது. இதனை மஹாமஹோபாத்யாய தட்டை ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி,

नाम्ना कारुकुरुचीत्यनितरसुलभैः वैभवैः हेपयन्तो ।
धन्यो वस्वोकसारां जयति जनपदे दक्षिणेऽप्युत्तरेऽर्थैः ॥

என்ற ச்லோகத்திலே, இந்த காருக்குரிச்சி என்ற மஹாக்ரஹாரம், கல்யாண குணங்களும், ஸதாசாரங்களும், ஸௌசீல்யமும் மிகுந்து வேதமார்க்கத்திலே நிரதரான ச்ரோத்ரியர்களால், அலங்கரிக்கப்பட்டது. இதர தேசங்களில் காணவொண்ணுத பொருட்செல்வத்தாலும், வைபவங்களாலும் தக்ஷிண தேசத்ததாயினும் உத்தர(ம)தேசமாய்த்திகழ்ந்து செல்வம் மிக்க பூமியையே வெற்றிகொண்டு திகழ்கிறது என்று வர்ணிக்கிருர்.

ஆஜான சுத்தர்களாய், ஆசாரசீலர்களாய், அஜாதசத்ருக்களாய் அதி ஸாலபர்களாய், வேதவேதாந்த நிஷ்ணுதர்களான மஹனீய ஸ்ரீ வைஷ்ணவ பரம்பரையில் - நம் ஸந்நிதி ஸம்ப்ரதாயம் தழைத்தோங்க எம்பெருமானின் அனுப்ரவேசாவதாரராய்த் தோன்றிய ஸ்ரீவண்சடகோப ஸ்ரீரங்கநாதசடகோப யதீந்த்ர மஹாதேசிகன் (40ஆம் பட்டம்) திருநாமத்தைக் கேட்டதும் அழுதபிள்ளையும் வாய் மூடும். அவல நிலையில், பேய், பிசாசு, ப்ரஹ்ம ராக்ஷஸாதிகளால் பீடிக்கப்பட்ட நிலைமையும், லக்ஷ்மீந்ருஸிம்ஹன் ஸந்நிதியில் பேசும் தெய்வமாகத் திகழ்ந்த இவ்வாசார்ய ஸார்வபௌமனின் முன்னதாகப் பறந்தோடிவிடும். எந்தப் ப்ரதிவாதியும், வாதம் செய்யத் துணிந்து இவர் எதிரில் வரமாட்டார். மத்த கஜங்களும் மண்டியிட்டு மயங்கி,நியமனப்படி கீழ்ப் படிவதைக் கண்டவரும் கேட்டவரும் இவ்வழகியசிங்கரை மந்த்ரஸித்தரான யோகி என்பதைவிட, லக்ஷ்மீந்ருஸிம்ஹனே முக்கோற்பகவராக அவதரித்து உள்ளதாகக் கருதுவதே பொருந்தும் என்று போற்றியுகப்பர்.

இந்த மஹான் அருளிய பல ஸம்ப்ரதாய க்ரந்தங்களுக்கிடையே ஸ்ரீ பாஷ்யத்தின் கருத்துக்களை யாவரும் எளிதில் அறிந்து அனுபவிக்குமாறு அமைத்த ஸ்ரீ பாஷ்யார்த்த மணிப்ரவாள தீபிகையென்னும் க்ரந்தம் ஸ்ரீ வைஷ்ணவ ஆஸ்திக ஜனங்களுக்கு வரப்ரஸாதமான கருத்துக்கருவூல-மெனலாம். இது தீபம், ஸாரம், அதிகரணஸாராவளீபோன்ற நூல்களைப் பின்பற்றி - எளியமுறையில் பலபல விசேஷதாத்பர்யங்களுடன் ஸம்ஸ்க்ருதமும் தமிழும் கலந்த மணிப்ரவாள நடையிலே ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம்போல் அமைந்துள்ளது. இந்நூல் 68 ஆண்டுகட்கு முன்பு அச்சிடப்பட்டு தற்போது பிரதிகள் கிடைக்காத நிலை ஏற்பட்டுவிட்டது. எப்படியேனும், இதனை மறுபடி பதிப்பிக்கவேண்டும் என்று ஆஸ்திகர்கள் ஆவலுற்றிருந்தனர்.

இந்த சமயத்திலே, மதுரைக்கருகில் ஷ அழகியசிங்கர் தாமுகந்து பலகாலம் வாசத்தின்பின் ப்ருந்தாவனத்தில் எழுந்தருளிய துவரிமான் அக்ரஹாரத்திலே சுமார் 20 ஸம்வத்ஸரங்களாய் திருநக்ஷத்திராதி கைங்கர்யங் களில் ஈடுபட்டுவந்தவர் - மதுரைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரான சொக்கனூர் வித்வான், ஸ்ரீ உபய. வே. நரஸிம்ஹாசார்யஸ்வாமி, இவர் ஸம்ஸ்க்ருதம், ஹிந்தீ, தமிழ், ஆங்கிலம் என நான்குமொழிகளிலும் பட்டமும்

பாண்டித்யமும் பெற்றவர்; ஸ்ரீ இஞ்சிமேட்டழகியசிங்கர் (42ஆம் பட்டம்) திருவடிகளிலே க்ரந்த காலக்ஷேபங்களைச் செய்தவர்; பல ஸதஸ்ஸுகளில் வேதாந்த வாக்யார்த்தங்களிலும், கவிதைத் திறனிலும் பண்டிதர்களிடையே பெயர்பெற்ற நாவீறு உடையவர்; நம் ஸம்ப்ரதாய க்ரந்தங்களையும் அபார்த்த கண்டன க்ரந்தங்களையும் ஏராளமான கவிதைகளையும் வெளியிட்டுள்ள வையாகரணர்; வேதாந்த தேசிகனின் தமிழ்ப் பிரபந்தங்களைப்பற்றிய ஆராய்ச்சி நூலுக்காகச் சமீபத்தில் மதுரைப் பல்கலைக்கழகத்தால் 'டாக்டர்' என்ற விருதமும் அளிக்கப்பட்டுள்ளார். இந்த ஸுஹ்ருத்தான வித்வன்மணி மூலம் ஸ்ரீமத் அழகியசிங்கர் தம் க்ரந்தத்தின் ப்ரகாசனம் நடைபெறத் திருவுள்ளம்பற்றி சிந்தனையைத்தூண்டினரெனலாம்.

சிஷ்டர்களான மஹாவித்வான்களின் வரிசையிலே தோன்றிய இவர் நம் ஆசார்ய ஸார்வபௌமனின் ஸ்ரீ பாஷ்யார்த்த மணிப்ரவாளதீபிகையை க்ரந்தாக்ஷரங்கட்குப்பதில் நாகராக்ஷரமாக மாற்றியும், எளிய தமிழ் நடையில் தனியே ஸ்ரீ பாஷ்யார்த்த தீபிகையென்னும் உரையை எழுதியும் தற்போதைய அழகிய சிங்கர், ஸ்ரீவண்சடகோப ஸ்ரீ வேதாந்ததேசிக யதீந்த்ர மஹாதேசிகன் அருளிய - ப்ரஹ்மஸூத்ரார்த்தபத்யமாலிகையென்னும் - வித்யார்த்திகட்கு மிகவும் பயன்படக்கூடிய ச்லோக ரூபமான க்ரந்தத்தைத் தமிழுரையுடன் சேர்த்தும் வெளியிடத்தொடங்கினர். 2 வருஷங்களாக ஏராளமான ச்ரமங்களை மேற்கொண்டு அல்லும், பகலும் பாடுபட்டு இந்நூலை வெளிக்கொணர்ந்திருக்கிறார்.

பல க்ரந்த ப்ரவசனங்களுக்கிடையே அச்சிட்ட தாள்களை அன்றாடம் சோதித்தும் - பிழைகளைத்திருத்தியும் சிரமப்பட்டு முடித்திருக்கிறார்.

இந்நிலையில் ஸ்ரீவைஷ்ணவர்கட்கு அடியேன் விக்ஞாபிப்பது ஒன்று உண்டு. நம் ஸ்வாமி வேதாந்ததேசிகன், ப்ரபன்னர்களுக்கு உபதேசித்த ஐந்து கடமைகளுள் முதன்மையானது ஸ்ரீ பாஷ்யத்தை வாசித்துப்பிரவர்த்திப்பித்தல் என்பதை முக்கியமாய் யாவரும் மனதில் கொள்ளவேண்டும்.

இதற்கேற்ப, ஸ்ரீராமானுஜ ஸம்ப்ரதாயஸ்தர் க்ருஹங்களிலும், ஸ்ரீமத் ராமாயணம்போல், இந்த ஸ்ரீ பாஷ்யார்த்த மணிப்ரவாள தீபிகையும், சேவித்தும் பூசித்தும்பாராயணம் செய்யவேண்டிய க்ரந்தமாகும். இந்த நூலால் (1) ஸ்ரீபாஷ்யத்தின் ப்ரமாணமான வேத வேதாந்த புராண இதிஹாஸங்களும் (2) ப்ரமேயமான ச்ரிய:பதியாம் லக்ஷ்மீநரஸிம்ஹனும், (3) ப்ரமாதாக்களான உடையவர்போன்ற பூர்வாசார்யர்களும் நம் க்ருஹத்திலே ஆராதிக்கப் பட்டவராவர்.

அமூல்யமான இந்தக்ரந்தத்திற்குக் கொடுக்கப்படும் மூல்யம் (விலை) மேன்மேலும் இந்த ப்ரகாசக ஸ்வாமியைப்பல பல ஸம்ப்ரதாயக்ரந்தங்களையும் அச்சிட்டு வெளியிடத்தூண்டும் மூலதனமாய் உதவுவதாகும்.

जयति यतिराजसूक्तिः जयति मुकुन्दस्य पादुकायुगली ।
तदुभयधनाः त्रिवेदीमवन्ध्ययन्तो जयन्ति भुवि सन्तः ॥

ஸ்வாமிதேசிகன் அருளிய இந்தச்லோகத்திலே குறிப்பிடப்படும் பாதுகாயுகளீ என்ற சொல், இரட்டையாசார்யர்களான காருக்குருச்சி அழகிய சிங்கர்களைக் குறிப்பதுபோல் தோன்றுகிறது. ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீ ஸூக்தி-களுடன் இவ்வழகியசிங்கர்களின் ஸ்ரீ ஸூக்திகளையும் செல்வமாகப்போற்றும் ஸாது ஜனங்கள் வேதத்தின் மூன்று பகுதிகளையும் (பேத - அபேத - கடக ச்ருதிகளை) ஸார்த்தமாக்கிப் பொலிவுபெறுகின்றனர் என்று பொருளாகிறது.

"का शङ्का शङ्करादेः भजति यतिपतौ भद्रवेदीं त्रिवेदीम् ।"

என்பதோடு இக்கருத்து ஒப்பிடத்தக்கது. திருவடி நிலைகளைக்குறிக்கும் சொல் லக்ஷ்மீ ந்ருஸிம்ஹனின் திருவடிகளைத்தாங்கும் ஸ்ரீமத் அழகியசிங்கர்களைக் குறிப்பால் உணர்த்துவதாகக் கொள்ளலாமே.

தற்போதைய ஸ்ரீமத் அழகிய சிங்கரின் திருவுள்ளத்தையும், நியமனத்தையும், பின்பற்றி அழகியசிங்கரின் அனுக்ரஹத்தால் இந்த க்ரந்தப்ரகாசன கைங்கர்யத்தைச் செவ்விதாக முடித்துவரும் இந்த ஸுஹ்ருத்ஸ்வாமிக்கு ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹனும், ஸ்ரீமத் அழகியசிங்கர்களும் ஸகல ச்ரேயஸ்ஸுக்களையும் அனுக்ரஹிப்பதுடன், மேன்மேலும் இத்தகைய கைங்கர்யங்களை நிறைவேற்றவும் வசதிகளையருளவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறேன்.

ஸ்ரீரங்கம்
10-10-88

இப்படிக்கு,
பனமுகை, வீரவல்லி நரஸிம்ஹாசார்யார்.
ஸ்ரீகார்யம், ஸ்ரீமதஹோபிலமடம்.

ஸ்ரீ:

# முன்னுரை

[ஸ்ரீ அஹோபிலமடம் ஆஸ்தானவித்வான் புரிசை நடாதூர் ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாஸநம், ஸ்ரீ. உப. கிருஷ்ணமாச்சார்யஸ்வாமி. ஸம்பாதகர் ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா சென்னை]

ஸ்ரீபாஷ்யத்தை வாசித்து ப்ரவர்த்திப்பிக்க வேண்டும் என்பது ஸ்ரீபாஷ்ய காரருடைய திவ்யாஜ்ஞை. அதன்படி நடந்துகொள்ளவேண்டியது ஸ்ரீவைஷ்ணவர்களுடைய கடமையாகும். ஆனால் அதிகம்பீரமான ஸ்ரீபாஷ்யத்தை யாவரும் அதிகரிக்க முடியாது: அதனால்தான் 'தீபம்' 'ஸாரம்' என்னும் க்ரந்தங்களையும் அருளிச்செய்தார். அவைகளும், ஸம்ஸ்க்ருத பாஷையில் நல்ல பரிசயமில்லாதவர்களால் அப்யஸிக்க முடியாது. ஆகையால் ஓரளவு ஸம்ஸ்க்ருதம் கற்றவர்களும் ஸ்ரீ பாஷ்யத்தின் ரஸத்தை அநுபவித்து உஜ்ஜீவிக்கவேண்டும் என்கிற திருவுள்ளத்தால் ஸ்ரீமதஹோபில மடத்தில் 40-வது பட்டத்தில் மூர்த்தாபிஷிக்தராய் எழுந்தருளியிருந்த ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹதிவ்ய பாதுகா ஸேவக ஸ்ரீவண்சடகோப ஸ்ரீ ரங்கநாத சடகோப யதீந்த்ர மஹாதேசிகன் பூர்வாச்ரமத்தில் '**ஸ்ரீ பாஷ்யார்த்த ஸங்க்ரஹம்**' என்னும் க்ரந்தத்தை மணிப்ரவாள நடையில் அருளிச்செய்தார்.

இந்த க்ரந்தமானது விரோதி வருஷம் மீன க்ருஷ்ண த்வாதசியன்று தெலுங்கு லிபியில் அச்சிட்டு வெளியிடப்பெற்றுள்ளது. ஸ்ரீமதழகியசிங்கரின் பூர்வாச்ரமத் திருநாமம் காருக்குறிச்சி வித்வான் ஸ்ரீ உப. வெங்கடக்ருஷ்ணமாசாரியார் ஸ்வாமி என்பதாகும். இந்த க்ரந்தத்தை பெங்களூரில் துளஸி தோட்டத்தில் வஸித்து வந்த தூப்புல் ஸ்ரீ வெங்கடாசாரியர் ஸ்வாமி வெளியிட்டுள்ளார். அதன் பிறகு 1920-வது வருஷம் 'ஸ்ரீ பாஷ்யார்த்த மணிப்ரவாளதீபிகா' என்கிற திருநாமத்தில் க்ரந்தாக்ஷரத்தில் வெளியிடப்பெற்றுள்ளது. இந்த க்ரந்தம் ஸ்ரீபாஷ்யகாரர்அருளிச்செய்துள்ள தீபத்தை அநுஸரித்து சுருக்கமாக அருளிச் செய்யப்பெற்றதாகும். இந்த க்ரந்தத்தில் பல இடங்களில் பல பல அபூர்வார்த்தங்களை வித்வன் மனோஹரமாக அருளிச் செய்துள்ளார்.

இதானீம் ஸ்ரீமதழகிய சிங்கருக்கு இந்த க்ரந்தத்தில் அதிக ஈடுபாடு உண்டு. அதனால் இதை நாகராக்ஷரத்தில் வெளியிடவேண்டும் என்று திருவுள்ளம் பற்றியாயிற்று. அந்தத்திருவுள்ளக் குறிப்பை அறிந்த ஸ்ரீ அஹோபிலமடம் ஆஸ்தான வித்வான் வ்யாகரண சிரோமணி, டாக்டர். சொக்கனூர், நரஸிம்ஹாசாரியார் M. A. ஸ்வாமி இந்த கைங்கர்யத்தைத் தான் ஏற்றுக்கொண்டு ஸ்ரீமதழகியசிங்கர் திருவுள்ளம் உகக்கும்படி நன்கு செய்துமுடித்துள்ளார் இந்த ஸ்வாமி, இஞ்சிமேட்டு ஸ்ரீமதழகிய சிங்கர் ஸன்னிதியில் ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களைக் காலக்ஷேபம் பண்ணியுள்ளார். நல்ல வாக்மீ. இந்த ஸ்வாமி ஸம்ஸ்க்ருதத்தில் ஓரளவுகூட பரிசயமில்லாதவர்களும் பயன்பெற வேண்டுமென்பதற்காக மணிப்ரவாளத்திலுள்ள ஸம்ஸ்க்ருதச்சொற்களைத் தமிழாக்கி 'பாஷ்யார்த்த தீபிகை' யை வெளியிட்டுள்ளார். பூர்வாசார்யர்களுடைய க்ரந்தங்களை வெளியிட்டு பரமோபகாரம் செய்தருளிய இந்த ஸ்வாமிக்கு ஸ்ரீமாலோலனுடையவும் ஸ்ரீமதழகியசிங்கர்களுடையவும் அநுக்ரஹத்தால் ஸகலச்ரேயஸும் உண்டாகவேணுமென்று சரண்யனைப்ப்ரார்த்திக்கிறோம்.

இங்ஙனம்

புரிசை **கிருஷ்ணமாச்சார்யஸ்வாமி**





॥ श्रीः ॥

ஸ்ரீமதே ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஓர் அறிமுகம்

'त्रिंशद्वारं श्रावितशारीरकशास्त्रः' முப்பது தடவைகள் ஸச்சிஷ்யர்கள் பலருக்கு ஸ்ரீபாஷ்யத்தைப் பாடம் சொல்லிவைத்துள்ளதாகத் தம்மைப்பற்றி ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் ஸ்ரீ ஸங்கல்பஸூர்யோதயத்தில் அருளிச் செய்துள்ளார்.

அப்படியிருந்தும் இதன் அர்த்த விசேஷங்கள் அறிவதற்கு அரியன என்பதை 'परिचितगहना संयमीन्द्रस्य सूक्तिः' என்று ஸ்ரீயதிராஜ ஸப்ததியில் அருளிச்செய்துள்ளார் ஸ்வாமி ஸ்ரீ தேசிகனே. அடிக்கடி அப்யாசம் செய்யச் செய்ய ஸ்ரீபாஷ்யம் கடினமாக விளங்குகின்றது. என்பதால் இதன் ஆழம் நன்கு புலனாகிறது.

ஸ்வாமி ஸ்ரீ தேசிகனுடைய ப்ராசார்யரான நடாதூர் அம்மாளும் ஸ்ரீபாஷ்யத்தின் பெருமை, ஆழம் மற்றைய வித்வான்களுடைய வழியில் காணமுடியாது 'न वेत्ति विद्वद्वरां प्रोक्तिः श्रियः प्रभुणा शपे' என்று ச்ரிய: பதியின் மீது ஆணையிட்டு அருளிச்செய்கிறார்.

இப்படிப்பட்ட ஸ்ரீ பாஷ்யத்தை வாசித்து ப்ரவர்த்திப்பதே ஸ்ரீ பாஷ்யகாரர் நமக்கு இட்ட கைங்கர்யங்களில் ப்ரதானமாகும். இந்த ஸ்ரீ பாஷ்யத்தின் அர்த்த விசேஷங்களை ஸம்ஸ்க்ருத பரிசயம் அதிகம் இல்லாத ஆஸ்திகர்களும் புரிந்துகொள்ள வேண்டும் என்ற பரமக்ருபையோடு, ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹதிவ்யாஸ்தானத்தில் நாற்பதாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்தவரும், ஸுப்ரஸித்த வைபவம் உடையவரும், மந்த்ர ஸித்தி பெற்று ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹனையே ஸாக்ஷாத்கரித்த மஹானாகவும் சிஷ்டாக்ரேஸரராகவும் விளங்கிய ஸ்ரீமத் அழகியசிங்கர் ஸ்ரீ பாஷ்யார்த்த மணிப்ரவாள தீபிகை என்ற திருநாமத்தோடு மணிப்ரவாள நடையில் அத்புதமான க்ரந்தம் ஒன்றை அனுக்ரஹித்தாயிருக்கிறது.

ஸ்ரீமந்ந்யாயஸித்தாஞ்ஜனம், ஸ்ரீமந்ந்யாய பரிசுத்தி முதலான க்ரந்தங்களி லிருந்து பல அபூர்வ விஷயங்களை இதில் விவரித்தாயிருக்கிறது. ஸ்ரீகூரத்தாழ்வானுடைய பரிக்ரகத்தினுல் ஸ்ரீ பாஷ்யம் பெருமை பெற்றதுபோல், மஹா வித்வானும், ஸுப்ரஸித்த வைபவரும், ஸூக்ஷ்ம விவேசந விசக்ஷணரும், ப்ரவசன ப்ரவீணருமாய் எழுந்தருளி யிருந்த ஸ்ரீ. உ. வே தில்லையம்பூர் ஸ்வாமி முதலான மஹான்கள் பலருடைய பரிக்ரஹத் தினுல் பெருமை பெற்றது இது.

மஹாவித்வான்கள் பலரும் அறிந்து கொள்ளவேண்டிய விஷயங்கள் இதில் பொதிந்துள்ளன.

தற்காலத்தில் உள்ள ஆஸ்திகர்களுக்கு இதுவும் அறிய அரிதாய் உள்ளது.

தற்போது ஸ்ரீரங்கத்தில் ஆஸ்திகர்கள் பலருக்கு ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களை ப்ரவசனம் செய்துகொண்டு இருக்கும். ஸ்ரீ அஹோபிலமடம் ஆஸ்தான வித்வான் சதுர்பாஷா விசாரத, வ்யாகரண வேதாந்த விசாரத ஸ்ரீ. உ. வே. சொக்கனூர் S. V. நரஸிம்ஹாசார்யஸ்வாமி ஆஸ்திகர்களின் ப்ரார்த்தனையினுல் இதற்கு எளிய தமிழில் உரையிட்டு இதை வெளியிட்டுள்ளார்.

இது ஆஸ்திகர்களுக்குக் கிடைத்தற்கரிய பெரு நிதியாகும். மிக்க பயன்தர வல்ல தக்கதோர் க்ரந்தம் இது என்பதில் ஸந்தேஹம் இல்லை.

இந்த ஸ்வாமி ஸ்ரீமத் இஞ்சிமேட்டு அழகியசிங்கர் ஸந்நிதியில் ஸத்ஸம்ப்ரதாய க்ரமத்தோடே க்ரந்தங்களைக் காலக்ஷேபம் செய்துள்ளார்.

ஸமீபகாலத்தில் மதுரைப் பல்கலைக்கழகம் இவருடைய புலமையைக்கண்டு மகிழ்ந்து 'டாக்டர்' பட்டம் வழங்கி இவரைப் பாராட்டியுள்ளது.

இந்த க்ரந்தத்தை ஆஸ்திகர்கள் அனைவரும் ஆதரித்து வாங்கி வாசித்து இந்த ஸ்வாமியின் முயற்சியைப் பயனுடைத்தாம் வண்ணம் திண்ணம் செய்வார்கள் என்ற எண்ணம் கொண்டு இவ்வண்ணம் ஆஸ்திகர்களுக்கு இதை அறிமுகப்படுத்துகிறேன்.

மாம்பலம், சென்னை,
25-12-88.

வில்லிவலம் கிருஷ்ணமாசார்யார்,
ஆஸ்தான வித்வான்,
ஸ்ரீ அஹோபில மடம்.

ஸ்ரீ:
அஸ்மத்குருபரம்பராயை நம:

# முன்னுரை

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன், ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் - சாஸ்த்ரீய நியமனாதிகாரத்திலே, ப்ரபன்னர்கள் வாழ்நாளில் செய்ய வேண்டிய கடமைகள் ஐந்துண்டு என்று குறிப்பிட்டு, "அவையாவன - பாஷ்யத்தை வாசித்து ப்ரவர்த்திப்பித்தல், அதுக்கு யோக்யதையில்லை யாகில், அருளிச்செயலைக் கேட்டுப் பிரவர்த்திப்பித்தல், அதுக்கு யோக்யதை யில்லையாகில், உகந்தருளின திவ்ய தேசங்களுக்கு அமுதுபடி, சாத்துபடி, திருவிளக்கு, திருமாலைகளையுண்டாக்குதல், அதுக்கு யோக்யதையில்லையாகில் த்வயத்தினுடைய அர்த்தானுஸந்தானம் பண்ணுதல், அதுக்கு யோக்யதை யில்லையாகில், என்னுடையவன் என்று அபிமானிப்பான் ஒரு ஸ்ரீவைஷ்ணவ னுடைய அபிமானத்திலே ஒதுங்கி வர்த்தித்தல் செய்யலாம்".

என்று அருளிச்செய்தாயிற்று. அவற்றின் முதலிலே, கம்பீரமான வட மொழி நடைகொண்டு மிளிரும் ஸ்ரீ பாஷ்யத்தை வாசித்து ப்ரவர்த்திப்பித்தல் ப்ரபன்னர்களின் தலையாய கடமையாகச் சாற்றப்பட்டது. தற்காலத்தில் ஸம்ஸ்க்ருதத்திலே வேத, வேதாந்தங்களையும், ஸாமான்ய சாஸ்த்ரங்களையும் ஆர்வத்துடன் கற்போரின் எண் மிகவும் சுருங்கி வருகிறது. அரைகுறையாய் ஸம்ஸ்க்ருதத்திலும், ஸம்ப்ரதாயத்திலும் ஜ்ஞானமுள்ள வைஷ்ணவர்களும் எளிதில் ஸ்ரீபாஷ்யத்தை ஆசார்யமுகமாகக்கேட்டும், பின் சிந்தித்தும் பயன் பெறுவதற்காக ஸ்ரீமதஹோபில மடம் 40-வது பட்டத்தையலங்கரித்த பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீரங்கநாத சடகோப யதீந்த்ர மஹாதேசிகன் பரமக்ருபையாலே மணிப்ரவாள நடையிலே - 'ஸ்ரீபாஷ்யார்த்த மணிப்ரவாளதீபிகை' என்ற அரியதோர் க்ரந்தத்தைத் தம் பூர்வாச்ரமத்திலேயேயருளிச் செய்தாயிற்று.

அந்நூல், தற்காலத்தில் கிடைப்பதற்கரிய கருவூலமாகிவிட்டபடியால், அதனைத் தமிழிலேயே பெயர்த்து அடியேன் 'பாஷ்யார்த்ததீபிகை' என்ற பெயரில் அச்சிட்டு வெளியிட முயன்றேன். தற்போது லக்ஷ்மீந்ருஸிம்ஹனின் ஸந்நிதியில் 44-வது பட்டத்தையலங்கரித்தருளும் - உதாரசீலராய், அரங்கனின் கோபுரத்தால் வானளாவிய புகழைக்கொண்டு விளங்கும் அழகியசிங்கர், பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீவண்சடகோப ஸ்ரீ வேதாந்த தேசிக யதீந்த்ர மஹாதேசிகனின் த்ரவ்ய ஸஹாயத்தை முதலாகக்கொண்டு

ஒருவாறு இந்த முயற்சியில் வெற்றியை எட்டும் நிலையையெய்தியிருக்கிறேன், சில ஆஸ்திகப்ரமுகர்கள் கொடுத்த நன்கொடைகளும், முன்பணமாக ரூ. 100/- வீதம் தந்து உதவியுள்ள சில ஆஸ்திக நண்பர்களின் தொகையும் உறுதுணையாய் உதவுகிறது. தேவையான எஞ்சியதொகை இந்தியன் பேங்க் ஸ்ரீரங்கம் கிளையிலிருந்து கடனகப்பெற்று பூர்த்திசெய்ய நேரிடுகிறது. எல்லாம் நன்கு நிறைவேறியதும், நம் பாரத சர்க்கார் உதவுவதாக வாக்களித்திருக்கும் தொகையும் இதுபோன்ற மற்றும் அத்யாவச்யகமான நம் ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் பலவற்றை மேன்மேலும் வெளியிடப்பெரிதும் உபகாரகமாகும். இந்த முதல் முயற்சியில் மிக்க பொருளாதாரச் சிரமம் மிக்க சூழ்நிலையிலும் பெரிதும் ஒத்துழைத்து கூடியவரையில் சீரும் சிறப்புமாக இந்நூலை அச்சிட்டு வெளிக்கொணர உதவி வரும், ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் அச்சக நிர்வாகிகளுக்கும் ஏனைய அச்சகத்தொழிலாளர்களுக்கும் ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹனுடையவும், ஸ்ரீமதாசார்யவர்யர்களுடையவும் பரிபூர்ணமான அனுக்ரஹத்தால் ஸகல யோக க்ஷேமங்களும் பெருகப் பிரார்த்திக்கிறேன்.

ஸ்ரீமத் அழகியசிங்கரின் அருள் மிக்க நியமனத்தாலும், வாசக மஹனீயர்களின் திருவுள்ளக் கிடக்கைக்கு ஏற்பவும், மூலக்ரந்தமான, ஸ்ரீபாஷ்யார்த்த மணிப்ரவாள தீபிகையையும் இதானீம் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் அழகியசிங்கர் அருளியுள்ள ஸ்ரீப்ரஹ்மஸூத்ரார்த்த பத்யமாலிகையையும் இத்துடன் சேர்த்து அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளன சரண்யனின் ஸங்கல்பத்தால் நிர்விக்னமாய் நிறைவேற மனுஷ்ய ரூபத்தில் பல மஹனீயர்களும் உதவியுள்ளனர். அவர்களின் விபரம் பின்னால் தரப்படுகிறது

எவ்வளவோ கவனித்து நூலை அச்சிடுவதில் ஈடுபட்டும், பற்பலபிழைகள் அவசரத்தாலும், அடியேனுடைய மதிமாந்த்யத்தாலும் ஏற்பட்டுள்ளன. அவற்றையெல்லாம், ஆஸ்திக மஹனீயர்கள் பொறுத்தருளி ஸ்ரீ மதாசார்ய ஸ்ரீஸூக்திகளின் கௌரவ புத்தியால் இந்நூலையேற்றருளுமாறு பிரார்த்தித்து, ஸ்ரீமதழகியசிங்கர் திருவடிகளிலே ஸமர்ப்பிக்கிறேன்.

இங்ஙனம்,
ஸப்தம பர்வதாஸன்,
மாடபூஷி **S. V. நரஸிம்ஹாசார்யன்**,
ஆஸ்தான வித்வான், ஸ்ரீ அஹோபில மடம்.

ஸ்ரீரங்கம்
1-8-1989

ஸ்ரீ:

அஸ்மத்குருப்யோ நம:

# ஸ்ரீ பாஷ்யார்த்த தீபிகை

ஸ்ரீராமானுஜ வேத மௌளிகுருராட் ஸ்ரீவண்சடார்யாதிகாந்
ஸ்ரீலக்ஷ்மீ நரஸிம்ஹ ரங்கசடஜித் யோகீச்வரௌ ஸத்வதௌ
க்ரந்தஸ்யாஸ்ய சிகீர்ஷிதஸ்ய நிஜஸத் காருண்யத: பூர்ணதாம்
குர்யுஸ்ஸாதரமித்யநந்த நதிபி: ப்ரார்த்தீஹதாஸோ ஜந:

பூர்வாசார்யைர் விரசிதா: க்ரந்தா: அதுலவைபவா:
ததாபி தாஸ: குருதே ஸாஹஸம் க்ரந்த நிர்மிதௌ
பூர்வாசார்யக்ருத க்ரந்த ஸம்ஸ்க்ருதாம்புதிமத்யகா:
மணயோZத்ரப்ரதர்ச்யந்தே த்ராமிடக்ரந்ததர்பணே

ஸ்ரீரங்கநாத சடஜித்யோகிராஜக்ருபாக்ருதா
மணி ப்ரவாள பாஷாத்மா ஸ்ரீ பாஷ்யார்த்தஸ்ய தீபிகா
தாமேவ தத்ப்ரஸாதே நத்ராமிட்யா ப்ரதிபாதயே
தோஷா: ப்ராக்ருதிகா: க்ஷாம்யா, குணாஸ்த்வாசார்ய யோகிந:

ஸ்ரீரங்க வீரரக்வீச வேதாந்த குருகாரிஜை:
யதீச்வரைர் வீக்ஷிதோZஹம் ப்ராரப்ஸ்யே ப்ரீயதாம் ஹரி:

## அவதாரிகை

ஸ்ரிய: பதியான ஸ்ரீமந் நாராயணன் இருள் தரு மாஞாலத்திலே மயங்கிக் கிடக்கும் சேதனர்களை உய்விக்க வேண்டி, வேத சாஸ்திரங்களைப் பல வகையாய் அருளி, அவர்களின் மருளை நீக்கி வருகிறான். ஒவ்வோர் காலத்திலும் ஒவ்வோர் ஆழ்வார் - ஆசார்யர் வாயிலாகவும், எராளமான சாஸ்திரார்த்தங்களை உலகினர்க்கு உபதேசிப்பித்து உபகரிக்கின்றான். அத்தகைய சாஸ்திரங்களில் வேதத்தின் முன் பகுதியைக் கர்மங்களில் விளக்க மாகவும், பின் பகுதியான உபநிஷத்துக்களை பரப்ரஹ்மத்தின் விளக்கமாகவும் கொண்டு பூர்வ மீமாம்ஸை - உத்தர மீமாம்ஸை, என்று இரு பகுதிகளாக ஸ்ரீ வேதவ்யாஸ முனிவரும், அவர் சிஷ்யரான ஜைமினி முனிவரும் விளக்கி அருளினர். வேதார்த்த விளக்கமாதலின், இரண்டும் ஒரே சாஸ்திரந்தான் என்பது நம்மாசார்யர்களின் கொள்கையாகும்.

எம்பெருமானே உலகுய்ய வ்யாஸ பகவானாய் அவதரித்து சாரீரக சாஸ்த்ரத்தை 4 அத்தியாயங்களாய் அருளினர். அந்த ஸூத்ரங்களுக்கு போதாயன பகவான் அறுபதினாயிரம் படிகள் என்ற கணக்கிலே விஸ்தாரமான விருத்தியென்ற விளக்க நூலையருளினர். கலியுகத்தின் தொடக்கத்திலே, அந்த விருத்தி நூலை டங்கர் (ப்ரஹ்மநந்தீ) த்ரமிடர், குஹதேவர் என்ற மஹான்கள் பரப்பி வந்தனர். டங்கர் ஆராயிரப்படியென்னும் அளவுள்ள வாக்கிய நூலால் விருத்தியைச் சுருக்கித்தந்தார். த்ரமிடர் என்ற முனிவர் அதற்கு பாஷ்யம் எழுதியருளினர். இத்தகைய சாரீரக சாஸ்திர மரபுகளை எம்பெருமானின் பரிபூர்ணமான கடாக்ஷத்தினலே உள்ளபடி அறிந்துகொண்ட மஹாஜ்ஞானியான நம்மாழ்வார், ஸ்ரீமந்நாதமுனிகளுக்கு உபதேசிக்க - அவரும் ந்யாயதத்வம் என்ற நூலையருளினர். அவர் பெயரரான ஆளவந்தாரும் மணக்கால்நம்பிகளின் அருளால் இந்த வேதாந்த மரபினையறிந்தவராய் ஸித்தி த்ரயம், கீதார்த்த சங்க்ரஹம், ஆகம ப்ராமாண்யம் என்ற நூல்களால் அக்கருத்துக்களைப் பரப்பியருளினர். பின் காலக்ரமத்தில் இவ்வர்த்தங்கள், ஸ்ரீ சங்கரர், யாதவ ப்ரகாசர், பாஸ்கரர் போன்றோரின் வெவ்வேறுபட்ட உரைகளால் சிதைந்து கேடுறத்தொடங்கிய நிலையில், எம்பெருமானின் நியமனத்தாலே அவனிடம் பிரியாது பணி செய்திருக்கும் அநந்தாழ்வான் (ஆதிசேஷன்) ஸ்ரீராமானுஜராக அவதரித்து இருளையெல்லாம் அகற்றும் சூரியன் உதிப்பதுபோல ஸ்ரீபாஷ்யம், தீபம், ஸாரம், கீதாபாஷ்யம், வேதார்த்த சங்க்ரஹம் - கத்யத்ரயம், நித்யம் என்ற சிறந்த தம் நூல்களாலே உலகிற்குப் பெரிதும் உபகரித்தருளினர்.

அவ்வாறு ஸ்ரீ வேதவ்யாஸரால் இயற்றப்பட்டவைவே ப்ரஹ்மஸூத்ரங்களாகும். ஜைமினி முனிவரால் அருளப்பெற்றவை பூர்வ மீமாம்ஸா ஸூத்ரங்களாகும். இந்த - ப்ரஹ்ம ஸூத்ரங்கள் 545. இவற்றிற்கு பாஷ்யமென்னும் விளக்க நூல் அருளியவர்கள் ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ ராமாநுஜர், ஸ்ரீ மத்வர், ஸ்ரீ நீலகண்டர் போன்ற பலராவர். அவர்களிடையே நம் ஸ்ரீ ராமாநுஜரால் இயற்றப்பட்ட நூலே பற்பல பெருமைகளையும் கொண்டது - ஆதலின், ஸ்ரீ பாஷ்யம் எனச் சிறப்புப் பெயர் பெற்றது. இந்த பாஷ்யம் மேற்படி, ஸூத்ரங்களை நான்கு அத்தியாயங்களாகவும், ஒவ்வோர் அத்தியாயத்திலும் நான்கு - நான்கு பாதங்களையும், மொத்தத்தில் 156 அதிகரணங்களையும் கொண்டதாய் வகுக்கப்பெற்று விளக்கம் தருகிறது.

இந்த நான்கு அத்தியாயங்களும் முறையே 1. உலகில் காரணமானவை பரப்ரஹ்மமான ஸ்ரீமந் நாராயணனே என்றும், 2. அந்த தத்துவம் எந்த வேறு ப்ரமாணங்களாலும் பாதிப்படையாதது என்றும், 3. அந்தப் பரமனை அடைவதற்கான சாதனம் பற்றியும், 4. அந்தப் பர

தத்துவமே நமக்கெல்லாம் உபேயமாதலையும் (பயன்) விளக்குகின்ற முறையைக் காணலாம். ஆதலால், இவ்வத்யாயங்களுக்கு முறையே-காரணத்வ அத்யாயம், அபாத்யத்வ அத்யாயம், உபாத்யத்வாத்யாயம், பலாத்யாயம் என்று சுருங்கப்பெயர் கூறுவர்.

ஸ்ரீ பாஷ்யத்தை அருளத் தொடங்கிய ஸ்ரீ பாஷ்யகாரர் மங்களச்லோகமாக ''அகில புவன ஜன்ம'' என்ற ச்லோகத்தில் இந்த - சாஸ்த்ரத்தினல் விளக்கப்படும் பரம்பொருள் 'அகல கில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பனே யென்றும், அவன்பால் என் பக்தி ரூபமான அறிவு உறையட்டும் என்றும் வேண்டுகிருர். இந்த ச்லோகத்தில் ஒவ்வோர் பாதமும் (அடியும்) ஒவ்வோர் அத்தியாயத்தின் கருத்தை விளக்குவதாய் அமைந்துள்ள நயம் சிறப்புள்ளது.

முதல் ச்லோகத்தில் பக்தி ரூபமான ஜ்ஞானம் ஏற்படவேண்டும் என்று இவ்வாசார்யர் வேண்டுவது தன் தகுதிக்கு ஏற்புடையதா? மோக்ஷம் கருதி ப்ரபத்தி செய்தவர் பக்தியை எவ்வாறு வேண்டலாம்? என்று ஐயம் எழும் பலாம். இந்த நூலை இயற்றுவதற்கு ஏற்றவாறு இடையூறு ஏதுமின்றி தெளிவான ஜ்ஞானம் ஏற்படக் காரணமான எம்பெருமானின் உகப்பாகிற பக்தியையே வேண்டுவதாகப்பொருள் கூறுவர். இந்த ச்லோகம் நான்கு அத்தியாயம் கொண்ட சாஸ்திரத்தின் கருத்துச் சுருக்கம் என்று கொள்ளும் போது பரபக்தியை வேண்டுவதாகப் பொருள் கொள்ளலாம்.

அடுத்து, ''பாராசர்ய வசஸ்ஸுதாம்'' எனத் தொடங்கும் இரண்டாவது ச்லோகத்திலே - இந்நூலின் விசாரத்திற்கு ப்ரஹ்மம் விஷயம் என்றும், அவனே நாம் அடையும் பயனென்றும், விசாரிக்கப்படும் பொருள் என்ற ஸம்பந்தமும் காட்டி, சிஷ்டர் பரம்பரையாகச் செய்து வரும் மங்களத்தினையும் செய்தவரானர். பகவான் போதாயனர் அருளியது — மிக விஸ்தாரமாயிருந்தது - அதனைச் சுருக்கி விளக்கியதனுல் இந்நூலின் பயனையும், இது பெரியோர்களின் வழி வந்ததென்பதால் ப்ரமாணம் கலந்ததென்றும் அறுதியிட்டார்.

## (ஸூ) அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா [1]

பூர்வ மீமாம்ஸையின் கடைசி ஸூத்ரத்தில் '' ஸவிஷ்ணுராஹஹிதம் ப்ரஹ்மேத்யாசக்ஷதே, தம் பரஹ்மேத்யாசக்ஷதே'' என்று முடித்ததாலே வேதத்தின் பின்பகுதியினது விசாரமான இந்த பாகத்தில், அந்தப்ரஹ்மத்தின் விசாரத்தை ஸ்ரீ வியாஸர் தொடங்குகிருர் என்பது பொருத்தம். அத = பிறகு; அத: = இக்காரணங்களாலே, ப்ரஹ்மஜிஜ்ஞாஸா = ப்ரஹ்மத்தைப்பற்றி விசாரப்

(ஆராய்ச்சி) செய்யத்தக்கது என்பதாம். முன்பு கர்ம விசாரம் முடிவடைந்தமையால் - கர்மங்கள் அற்பமாயும், நிலையற்றதுமான பயனையே நல்குவதாய் அறிந்து ப்ரஹ்மஜ்ஞானமே முடிவற்ற - நிலையான - பயனைத் தருவதாக மேலெழுந்தவாரியாக உணர்ந்தவர். அக்காரணத்தாலேயே ப்ரஹ்ம விசாரத்தில் இறங்குகிறார் என்பது கருத்தாகும்.

வேதத்தின் பூர்வ பாகத்தில் - அதேபோல் பூர்வ மீமாம்ஸையில் பர ப்ரஹ்மத்தின் ஸமாராதன ரூபமான ஸாத்யோபாயம் எனப்படும் கர்மம் விசாரிக்கப்பட்டது. இப்போது இந்த உபநிஷத் பகுதியாலும் வேதாந்த பாகத்தாலும் ஸித்தோபாயம் எனப்படும் - ஸர்வகர்ம ஸமாராத்யனான எம்பெருமானைப்பற்றிய விசாரம் செய்யப்படுகிறதென்பது முக்கியமான வேறுபாடு. ப்ரஹ்மத்தைப்பற்றியறியும் விசாரம் என்ற பொருளில் ப்ரஹ்ம சப்தத்தின் பின் மறைந்துள்ள ஆறும் வேற்றுமை, செயப்படுபொருளைக் காட்டுவதென்று விளக்கப்பட்டது. இந்த சூத்திரத்தில் ப்ரஹ்மம் என்ற சொல். சொல்-பொருள் ஆற்றல்களால், புருஷோத்தமன் ஸ்ரீமந் நாராயணனையே குறிப்பிடுகிறது.

இவ்விடத்தில் - சொற்களுக்கு சித்தமான - நிலைபெற்றதோர் பொருளைக் காட்டும் திறனில்லை - அத்துடன், அறிவதற்கான ஆசையை இந்த சூத்திரம் விதிக்க இயலாது. வேறு வகைகளில் எட்டாத பொருளையே சாஸ்திரம் விதிக்கவல்லது. ப்ரஹ்ம விசாரம் செய்யும் ஆசை தானே ஒருவனுக்கு விருப்பத்தால் எட்டுவது. ஆதலின், அவ்விஷயத்தில் சாஸ்திரம் பயன்பெறாது என்று மீமாம்ஸகர் ஆட்சேபணை எழுப்பினர். மேலும் வேதாந்தத்திலுள்ள சொற்றொடர்கள், வேறு வகையில் சித்தமானதைப் போதிக்கமாட்டா, ஆதலின் "ஸத்யம் - ஜ்ஞானம், அனந்தம் ப்ரஹ்ம" என்பது போன்ற தொடர்கள், ப்ரஹ்மத்தை விளக்கவல்லன அல்ல என்றும் ஆட்சேபித்தனர். இதனால், இந்த சாஸ்திரம் ஆரம்பிக்க வேண்டாமென்று அவர் கருத்தாகிறது. இதற்கு விடையாக ஸ்ரீ பாஷ்யத்தில் - அப்பா, அம்மா, மாமா என்றெல்லாம் குழந்தைகட்கு விரலால் புதிய பொருட்களைச் சுட்டிக் காட்டிப் பொருளை விளக்கக் காண்கையால் - சித்தமான பொருளையும் சொற்கள் விளக்கும் ஆற்றல் வாய்ந்தவையென்றும், அதனால் இங்கும் ஸத்யம் - ஜ்ஞானம் முதலான சொற்களால் சித்தமான ப்ரஹ்மத்தைப் போதிப்பது தவறில்லை என்றும், ப்ரஹ்மத்தைப் பற்றிய விசாரம் முன்பு தீர்மானிக்கப்படாததாதலின், அதைச் செய்யவேண்டும் என்பதே இங்கு விதிக்கப்படுகின்றது. முன்பு அறியாததை அறிதலே விதிக்கப்படுகிறது. ஈடுபாடில்லாதவனை ஈடுபடுத்துவதல்ல இவ்விதி என்பதாம். இதற்குச் சான்றாக - 'ஸம்ஹிதமேதத்' எனத் தொடங்கும் விருத்திகாரரின் சொற்றொடரைக் காட்டி, ஜைமினீயமான பூர்வமீமாம்ஸையும், இந்த உத்தர மீமாம்ஸையும் - அத்தியாயப்

பி ரி வி னை, ஷட்கப் (ஆறுறு அத்தியாயங்களாக - கீதையில்) பிரிவினை போலப் பகுக்கப்பட்டிருப்பினும், இருபது அத்தியாயங்களும் சேர்ந்து ஒரே சாஸ்திரம் என்றும் நிறுவப்பட்டது.

"பிராஹ்மணனுல் ஓர் பயனும் கருதாமல் ஆறங்கங்களுடன் கூடிய வேதம் அத்யயனம் செய்யவும் - பொருளறியவும் வேண்டுவதாம்" என்ற வேத வாக்கியம், வே த ங் க ளை ச் சொல்லடைவே அத்யயனம் செய்ய வேண்டுமென்றே நோக்குக்கொண்டது. பொருளறிவை விதிக்க நோக்கு உடையதன்று என்று காட்டி, கர்ம விசாரமும், ப்ரஹ்மவிசாரமும் முன் பின்னுக அமைவதன் பொருத்தங்களைக் கூறினர். கர்ம விசாரமேயின்றி நேராக பிரஹ்ம விசாரத்தில் இறங்கினுலென்ன? என்ற ஐயத்திற்கும் தக்க விடையளிக்கப்பட்டது.

இவ்விடத்தில், ஓர் நடுநிலையாளன், வேதாத்தியயனத்திலேயே மேலெழுந்தவாரியாக - கர்மாக்களின் பலன்கள் அற்பமென்றும், நிலையற்றவை என்றும், ப்ரஹ்ம ஜ்ஞானத்தால்தான் அனந்தமான ஸ்திர பலன் கிட்டும் என்றும் உணரக் கூடுமாதலின், கர்ம விசாரமே தேவையில்லை - நேராகவே ப்ரஹ்ம விசாரத்தில் இறங்கிவிடலாம் என்று சந்தேகித்தால், அப்படி மேலெழுந்த வாரியான பொருளறிவைக் கொண்டு கர்ம விசாரம் வேண்டா மெனில், அதனுலேயே ப்ரஹ்ம விசாரமும் வேண்டாமென்று ஏற்க வேண்டி வரும். நியாயங்களால் உறுதிப்படும் பொருளே அர்த்தத்தை உறுதியாகப் புலப்படுத்த வல்லது.

மேலெழுந்தவாரியாகப் புலனுகும் அர்த்தஜ்ஞானம் சம்சயம், விபரீதப் பொருள் என்பவற்றிற்கே பெரிதும் அடிமையாகும். ஆகவே நல்லவிதத்தில் உறுதியான ஜ்ஞானம் பிறக்கவேண்டுமாயின், பிரஹ்ம விசார சாஸ்த்ரம், ஆரம்பிக்கவேண்டியதேயென்று வி டை கூறப்பட்டது. அதற்கு இன்றி யமையாத கர்மவிசாரமும் முன்பு செ ய் தா லே - அதனைவிட்டு ப்ரஹ்ம விசாரத்தில் இறங்கக்கூடும் என்றதற்கு பாஸ்கர மதத்தைத் தழுவியவன் சங்கையை மேலெழுப்ப, ம்ருஷாவாதீ (அத்வைதீ) அதனை ஆக்ஷேபித்து, "பூர்வம் நடந்தது - கர்ம விசாரமல்ல; பின்னென்னெனில், நித்யாநித்ய வஸ்து விவேகம், சமதமாதி சாதனஸம்பத், இம்மையிலும், மறுமையிலும் பலபோகத்தில் வை ரா க் ய ம், மோட்சமடைய விருப்பம் என்ற சாதன சதுஷ்டயமே - பூர்வ வ்ருத்தம்" (முன் நடந்தது) என்று ஸ்தாபிக்கின்றுன். யாதவப்ரகாசரும், பாஸ்கரருமோ - ப்ரஹ்ம விசாரத்திற்கு முந்தையது மூன்று விதமான தாபங்களால் ஏற்பட்ட சிரமமே என்று கூறுவர். இவ்விடம் அ ஸ த் ய மா ன பந்தத்தை நீக்கவல்ல ப்ரஹ்மமும், ஆத்மாவுமொன்றே

யென்கிற ஜ்ஞானத்திற்கு முன்னதாகக் கர்மா தேவையில்லேயேயென்று காட்டுகின்றூர். பின் அவர்கள் கேட்ட லகு பூர்வபக்ஷத்திற்கு லகு சித்தாந்தம் கூறப்படுகிறது.

ப்ரஹ்மாத்மைக்ய ஜ்ஞானம் முக்திக்கு ஹேதுவென்றுல், ப்ரத்யக்ஷத்திற்கு விரோதம் வருமெனக்காட்டி, கர்மயோகத்தை அங்கமாகக்கொண்ட பக்தி ரூபமான ஜ்ஞானமே முக்திக்கு ஹேதுவாம் என்று நிரூபிக்கப்பட்டது. கர்ம விசாரமே - பூர்வம் நடந்தது. சாதன சதுஷ்டயம் அன்று என்று முடிவு கூறப்பட்டது. ப்ரஹ்ம விசாரத்திற்குக் கர்ம விசாரம் தவருமல் முன் நிகழ்வதன்று என ம்ருஷாவாதிகளான அத்வைதிகள் கூறிப்பின்வரும் காரணங்களேக் காட்டுகின்றனர்.

அவையாவன --

1. விரோதம்

2. ப்ரமாணமின்மை

3. கர்மம் உள்ளத் தூய்மைக்கேயுதவுவது

4. ஜ்ஞானமே முக்தி ஹேதுவென்ற ச்ருதி

5. சமம், தமம் முதலியவை அங்கங்கள் என்று வேதத்தில் கூறியுள்ளமை

6. சாமர்த்யம் என்பன.

1. விரோதம் என்பது வஸ்து விரோதம். 2. கர்மஜ்ஞானம் ஹேது வென்பதற்கு எதுவும் பிரமாணமாகாமை. 6. சாமர்த்யம் என்பது வஸ்துவின் சாமர்த்யம். ஆம். இதனைக்கொண்டே மஹாபூர்வ பக்ஷத்தில் அடுத்தபடி சந்தேகம் கிளப்பப்படுகிறது. அதாவது, அஸத்யமான ஸம்ஸார பந்தத்தை நீக்க - ப்ரஹ்மமும் ஆத்மாவும் ஒன்றேயென்ற ஜ்ஞானம் காரணம் என்கையில் (கர்த்ரு கர்ம ஸாதனுதி பேதம்) கர்த்தா, கர்மா, சாதனம் முதலிய பேதத்தை நிரூபிக்கும் கர்மாவின் அபேக்ஷையில்லையென்பதே வஸ்து சாமர்த்யம் என்பர். இந்த வஸ்து சாமர்த்யம் பற்றிய சர்ச்சைக்கு மஹா ஸித்தாந்தத்தில், உபேயம் (அடையும் பயன்) பற்றிப் பேசும் வேத வாக்கியங்களேக் கொண்டு விடை கூறப்படுகின்றது.

இங்கு அத்வைதிகள் மஹாபூர்வபக்ஷத்தில் ப்ரஹ்ம - ஆத்ம ஐக்ய ஜ்ஞானமே - உபாயம் என்றும், நிர்விசேஷமான (ஒருவகை பேதமுமற்ற) ப்ரஹ்மமே ப்ராப்யம் (அடையும் பயம்) என்றும், இந்த ஜ்ஞானத்தால் அநிர்வசனீய (வாயால் கூறவியலாத) அஜ்ஞானமும், அதனடியான இந்த

ப்ரபஞ்சமும் நீக்கப்படுபவையென்றும் - மூன்று அர்த்தங்களையும் கூறுவதாக ஸ்ரீ பாஷ்யகாரர் விளக்கியருளினர்.

இந்த மஹா பூர்வ பக்ஷத்தில்-நிர்விசேஷ ப்ரஹ்மமே, ஜகத்து-அஸத்யம் என்று பிரதிஜ்ஞை செய்து அதற்குச் சான்றாக வேதம், கீதை, விஷ்ணு புராணம், சூத்ரங்கள் இபற்றை எடுத்துக்காட்டினர். பின்னர் மித்யாத்வத்தின் (அஸத்யம்) லக்ஷணம், அதற்கு கயிறும் பாம்பும் உதாரணமாதல், அந்ருதேன ஹி ப்ரத்யூடா: என்ற வாக்கியம் போன்ற ப்ரமாணங்கள் காட்டப்பட்டன. நிர்விசேஷ ப்ரஹ்மமே ஆத்மா என்ற ஐக்ய ஜ்ஞானம் - மித்யா ஜ்ஞானத்தை நிவ்ருத்தி செய்வது. அதற்கு ச்ருதி புராணங்கள், இதிஹாஸங்களிலிருந்து பற்பல சான்றுகள். குடம், படம் முதலியவற்றால் ஏற்படும் பேதத்தைக் க்ரஹிக்கும் ப்ரத்யக்ஷத்தை சாஸ்த்ரங்களால் ஏற்படும் அபேதஜ்ஞானம் நிவ்ருத்தி செய்துவிடும். அதற்கு முன் பின் ப்ரமாணங்களில் முந்தையதைப் பிந்தையது பாதிக்கும் என்ற அபச்சேதாதிகரண ந்யாயமே வழிகாட்டி. இதனால் சாஸ்த்ரங்களிலும் பேதம் கூறும் - குணங்களைக் காட்டும் - ப்ரமாணங்களை பிந்தைய அபேதபோதக ப்ரமாணங்கள் பாதித்துவிடும். இங்கு ஸகுண சாஸ்த்ரங்கள் குணங்களை அபேக்ஷிக்கையாலே துர்ப்பலமானவை. நிர்க்குண சாஸ்த்ரங்கள், ஒன்றையும் அபேக்ஷிக்காமையாலே பலம் மிக்கவை. ஆதலால், நிர்க்குண சாஸ்த்ரங்களால் ஏற்படும் ஜ்ஞானத்தால் ஸகுணவாக்ய ஜன்யமான ஜ்ஞானம் பாதிக்கப்படும். ஸாமாநாதிகரண்யம், (விசேஷண விசேஷ்ய பாவம்) காரண வாக்யத்துடன் ஒரே அர்த்தத்துடன் இருத்தல், சோதக வாக்யங்களுடன் ஒரே அர்த்தத்துடனிருத்தல் என்ற மூன்று ஹேதுக்களால், ஸத்யம், ஜ்ஞானம் முதலிய வாக்யங்களும் நிர்க்குணமான ப்ரஹ்மத்தையே போதிக்கின்றன.

காரணவாக்யமாவது ' ஸதேவ ஸோம்யேத மக்ர ஆஸீத் ' "ஏகமேவா த்விதீயம் ப்ரஹ்ம " என்ற ஸத்வித்யா வாக்யம். இதில் ' ஸதேவ ' என்பது விஜாதீயங்களான அசேதனங்களை விட்டு பேதத்தையும் ' ஏகமேவ ' என்பது ஸஜாதீயமான சேதனர்களிடமிருந்து பேதத்தையும் ' அத்விதீயம் ' என்பது ப்ரஹ்மத்திடம் உள்ள ஸத்யத்வம், ஜ்ஞானத்வம் போன்ற ஸ்வகத தர்மங்களிலிருந்தும் பேதத்தை விளக்குகின்றன. ஆக இவ்வாக்யத்தால் ஸஜாதீய, விஜாதீய ஸ்வகத பேதங்களை இழந்த நிர்விசேஷமான ப்ரஹ்மம் நிரூபிக்கப் படுகிறது. இந்த வாக்கியத்துடன் ஒத்த பொருள் கூறுவதற்காக யஸ் ஸர்வஜ்ஞ: ஸர்வவித், தஸ்மாதேதத் ப்ரஹ்ம நாமரூபமன்னஞ்ச ஜாயதே, முதலிய ஸகுண காரணவாதி வாக்யங்களிலும் உள்ள குணங்களைத் தடுத்து (இல்லையாக்கி), நிர்க்குணப்ரஹ்மமே கூறப்படுகிறதெனல் வேண்டும். இதுவே காரண வாக்யத்துடன் ஐகார்த்யம் என்பது.

அடுத்து ஸாமாநாதிகரண்யமாவது - ஸத்யம், ஜ்ஞானம், அநந்தம் என்று ஒரே விபக்தி (வேற்றுமை) யால் குறிப்பிடுவது ஒரே பொருளை யென்று கருத்தைக் கொள்ளுதல். சோதகவாக்யார்த்தத்துடன் பொருந்து தலாவது - நிர்க்குணம், நிரஞ்ஜனம் என்று வெளிப்படையாக குணங்களைத் தடைசெய்து ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை சோதிக்கும் வாக்யங்களுடன் பொருந்துவதற்காக ஸத்ய ஜ்ஞானதி வாக்யத்தாலும் ஸத்யத்வம்போன்ற குணங்களைக் கருதக்கூடாதென்னில், அப்படி அக்குணங்களை அச்சொற் களால் கருதவில்லையென்றால் லக்ஷணை (ஆகு பெயர்.) தோஷம் வரும் என்பதுபோன்ற குறைகளுக்கும் விடை தருகின்றனர். மீமாம்சகர்களும் எல்லாப் பதங்களுக்கும் லக்ஷணை ஏற்கவேண்டியுள்ளதென்றும் காட்டுகின்றார்.

ப்ரத்யக்ஷத்திற்கும், சாஸ்திரத்திற்கும் விரோதமில்லை. ப்ரத்யக்ஷமும் ஸந்மாத்ரமான ப்ரஹ்மத்தையே விஷயமாகக்கொள்கிறது. பேதத்தைக் காட்டும் ப்ரமாணமே கிடையாது. பேதம் நிரூபிக்கவியலாதது. குடம் முதலியவை பரமார்த்தமல்ல என்பது மற்றவற்றிலிருந்து வ்யாவ்ருத்தத்வம் என்ற (வேறுபாடு) ஹேதுகூறப்படுகிறது. ஸத்தே பரமார்த்தம் என்பது, அனுவர்த்தமானத்வம் என்ற ஹேதுவால் அனுமானிக்கப்படும். கயிறு - பாம்பு முதலியவை எடுத்துக்காட்டு. அனுபூதி தானே ஸித்திப்பது, அனுபூதியாயிருப்பதால் என்பது கேவல வ்யதிரேகியென்னும் ஹேது. கௌமாரில மதப்படி குடம் அனுபவிக்கப்படுகிறதென்று ஓர் எண்ணத்தில் குடத்திற்கே அனுபவத்தில் விஷயமாகும் தன்மை தோன்றுகின்றது. தன்னில்தானே விஷயமாகாது ஆதலின், அனுபூதி, !ஸ்வதஸ்ஸித்தம்= தானேதோன்றியது, என்பது கூடாதென்னும் யுக்தியாலே முன்கூறிய வ்யதிரேகியனுமானம் தவறு என்ற கூற்றுக்குப் பரிஹாரம் - அனுபூதி ஸ்வரூபமான ப்ரஹ்மம் மானஸமான ப்ரத்யக்ஷத்தால் அறியக்கூடியதல்ல. அன்வயமுகமான அனுமானங்களிரண்டு கொண்டு அனுபூதியை ஸ்வதஸ் ஸித்தம் என்று நிலைநாட்டல்.

1. அனுபூதியானது பிறவற்றிற்கு அதீனமாகாத தன் தர்மத்தை யுடையது. தன் ஸம்பந்தத்தாலே பிற பொருட்களில் அவற்றின் தர்மங் களுக்கும் காரணமாதலின்.

2. அனுபூதியானது பிறவற்றிற்கு அதீனமாகாத தன் வ்யவஹாரத்தை யுடையது. தன் ஸம்பந்தத்தால் பிற பொருளில் அவற்றின் வ்யவஹாரத்திற்கு ஹேதுவாதலின், ரூபாதிகளைப் போல - என்று இரு அனுமானங்கள்.

அனுபூதிக்கு ப்ராகபாவம் (பொருள் உண்டாவதற்கு முன் உள்ள இல்லாமை) இல்லை. அதற்கு உற்பத்தியில்லாமையால்; பலவகைகளும் இல்லை. அது ஒன்றுதான். ஸஜாதீய பேதமற்றது. (தன் னினத்தில் வேறுபாடற்றது.) விஜாதீய பேதமுமற்றது. ஸம்வித் என்பது ஸகல பேதமற்றதென்பதால் அதுவே ப்ரஹ்மம். அஹம் என்பதன் பொருளான ஜ்ஞாதா (அறிவுள்ளவன்) ஆத்மா என்பது தவறு. ஆகவே பரமார்த்தமாக வஸ்து ஸாமர்த்யத்தாலே கர்ம ஜ்ஞானமே, பூர்வஹேது வென்பது கண்டிக்கப்பட்டதாகிறது. ஸகாரணமான பந்தம் - ஸத்யமென்று ஏற்றுக்கொண்டால் - அது ஜ்ஞானத்தால் நிவர்த்திக்கப்படமாட்டாது. ஆகவே, ஜ்ஞானத்தை ப்ரதானமாகக்கொண்ட மீமாம்ஸா சாஸ்த்ரம் ஆரம்பிக்கவேண்டா நிலையேற்படும் என்று கேட்டும் அஜ்ஞான மூலமான ப்ரபஞ்சமெனும் பந்தம் மித்யையாதலின், ஜ்ஞானத்தினுல் நிவ்ருத்திக்கக் கூடியதேயாதலின் சாஸ்த்ரம் ஆரம்பிக்கத்தக்கதே என்று ம்ருஷாவாதீ (அத்வைதீ) சித்தாந்தம் செய்தார். மித்யையான பந்தத்தில் நிவர்த்தக ஜ்ஞானம் - கர்ம விசாரத்தை யபேக்ஷிக்காதது என்று வஸ்து ஸாமர்த்யத் தாலே கர்மவிசாரம் பூர்வவ்ருத்தமன்று. சாதனசதுஷ்டயமே பூர்வ வ்ருத்தமென்பது மஹாபூர்வபக்ஷம்.

## மஹா ஸித்தாந்தம்

அத்வைதிகள் கூறிய உபாயம், உபேயம், நிவர்த்யங்களுக்கான ப்ரமாணமோ அனுகூல தர்க்கமோ இல்லாமையைக்காட்டி, நம் சித்தாந் தத்தில் ஏற்றுள்ள அம்மூன்றையும் ப்ரமாணம், தர்க்கம், உபபத்திகளுடன் காட்டுவதாய் ப்ரதிஜ்ஞை செய்து தொடங்குகிறார். நம் சித்தாந்தப்படி கர்மயோகம் ஜ்ஞானயோகம் இவற்றை அங்கமாகக்கொண்டு பரமபுருஷனைப் பற்றிய **பக்தி ரூபமான ஜ்ஞானமே** முக்த்யுபாயம். வெறும் தத்வஜ்ஞானம் மட்டும் அன்று; அது புருஷார்த்த சாதனமான அர்த்தத்தை நிர்ணயிக்கவேண்டும் என்று ஆசையால் கிட்டும் கேள்வியறிவாலேயே கிட்டக்கூடியது. ஆதலின், அதனை விதிக்க வேண்டியதில்லை

ஆயினும், ''ப்ரஹ்மத்தையறிந்தவன் ப்ரஹ்மத்தையடைகிருன்'', ''அவனையிவ்வாறு அறிந்தவன் அம்ருதனுகிருன்'', 'எம்பெருமானை அறிந்தவன் ஸர்வ பாபங்களினின்றும் விடுபடுகிருன்', என்ற வாக்யங்களில் தத்வ ஜ்ஞானமே முக்திக்கு உபாயமென்று கூறப்படுகிறதே! என்று ஐயம் ''ஆத்மாவையே கேட்டும், மனனம் செய்தும், த்யானம் செய்தும் தீர வேண்டும். ''பூதங்களுக்கு எல்லாம் காரணமான பரமபுருஷனை தியானிக்கும் முனிவன் அவனையடைகிறான். ''த்யானிக்க வேண்டும், உபாஸிக்க

வேண்டும்" என்றித்தகைய வாக்யங்களில் சிறப்பான பல சொற்கள், காணப்படுவதால் - பொதுச் சொல்லினருகில் சிறப்புச்சொல் இருப்பின் அதே பொருளுள்ளதாகக் கொள்ளவேண்டுமென சாக பசு ந்யாயம் தெரிவிப்பதால், ஜ்ஞானம் வேதனம் முதலிய பொதுச்சொற்களை த்யானம் என்ற சிறப்புப் பொருளிலேயே கொள்ளவேண்டும்.

அத்துடன் ஜ்ஞானம், அல்லது த்யானம் (பக்தி) இரண்டிலொன்று முக்திக்கு உபாயமென்று கொள்வதானால் தத்வஜ்ஞானம் இலகுவான உபாயமாதலாலும், பக்தியெனும் த்யானம் குருவான (பெரிய) உபாய மாகையாலும், இரண்டையும் சமமாக வைப்பது பொருந்தாது. ஆதலின், பக்திரூபமான ஜ்ஞானமே முக்திக்கு சாதனம். பொதுச்சொல்லிற்குச் சிறப்புப் பொருளே முடிவாகக் கொள்ளத்தக்கது என்ற முன் கூறிய ந்யாயமிருப் பதால் மனனம், தர்சனத்தைக் காட்டும் வாக்யங்களில் ஜ்ஞான சப்தத்தை மனனமென்றோ - தர்சனமென்றோ சிறப்புப்பொருளாக ஏன் கொள்ளலாகாது? என்று வினவலாம்.

மனனம் என்பது கேட்ட பொருளை மனத்தில் நிலை நிறுத்தலாகும். அது த்யானத்திற்கு உபகாரகம். ஆதலின், நேரிடையாக முக்தி ஹேது. வாகாது. "ச்ரோதவ்ய:" என்பதுபோல, "மந்தவ்ய:" என்று மனனமும் ச்ரவணம்போல த்யானத்திற்கு உபகாரமாகச் சொல்லியிருக்கிறது. கண்ணால் பார்ப்பதென்பதோ - எம்பெருமானை யாரும் கண்ணால் காணவோ வாக்கினால் பேசவோ முடியாதவனென்ற ச்ருதி வாக்யங்களுக்கேற்ப தடை செய்யப் பட்டதாதலின், "தஸ்மின் த்ருஷ்டே பராவரே" என்ற வாக்கியத்தில் 'த்ருஷ்டே' என்பதனால் தர்சனத்திற்கு சமமான தோற்றத்தையுடைய த்யானம் என்றே பொருள்கொள்ளவேண்டும். நேராக தர்சனம் முக்திக்கு ஹேதுவாவதில்லை. ஆகவே, ஜ்ஞானமென்ற சொல்லைச் சிறப்பான மனனம் அல்லது தர்சனம் என்ற பொருளில் முடிவுபெறச் செய்வதில்லை.

இங்கு "த்ரஷ்டவ்ய:", என்றும், "நிதித்யாஸிதவ்ய:" என்றும் இரண்டு வாக்யமாயினும், ஒன்றுதான் முக்கியமென்றும் - மற்றொன்று (தர்சன வாக்யம்) லக்ஷணையென்றும் கொண்டு இரண்டாலும் சேர்ந்து தர்சன ஸமானாகாரமான த்யானமே உபாயமாக விதிக்கப்படுவதாகவே கொள்ளல் தகும்.

இதனால் கர்மயோக ஜ்ஞான யோகங்களைத் துணையாகக் கொண்டதாய் தினமும் உயிர் உள்ளளவும் விடாமல் மிக்க அப்யாஸத்தால் சாதிக்கப்படும் தர்சன ஸமானாகாரமான - பரம புருஷ த்யானமே முக்திக்கு உபாயம் என்று தேறிற்று. உபேயம் என்பது-நித்ய விபூதி, லீலா விபூதியென்னும் இரண்டையும்

தனதாகக் கொண்ட பரப்ரஹ்மம். பரமார்த்தமான ப்ரக்ருதி ஸம்பந்தமே நிவர்த்திக்கப்படவேண்டிய பொருள். இம்மூன்றும் இவ்வாக்கியத்தில் காட்டப்படுகின்றன. இந்த மஹாஸித்தாந்தத்தில் விளக்கப்படும் பொருளை மேலே காண்போம்.

முதலில், நிர்விசேஷ ப்ரஹ்மம் ப்ரமாண சித்தமன்று. தானே சித்தமாம் என்ற மதம் கண்டிக்கப்படுகிறது. அடுத்து நிர்விசேஷம் என்று சாதிக்கும் ப்ரமாணங்களாலே ஸவிசேஷம் என்றே சாதித்தல்; தானே யேற்றுக்கொண்ட நித்யத்வம், ஏகத்வம் ஸ்வயம் ப்ரகாசத்வம் முதலியவற்றால் ஸவிசேஷத்வமே தெளிவாக்கப்படல், ப்ரபலமாகச் சொன்ன சாஸ்த்ரமும் ஸவிசேஷ வஸ்துவையே போதித்தல், ப்ரத்யக்ஷ ப்ரமாணமும் - ஸவிசேஷத்தையே காட்டல், இடையே பேதாபேதவாதியான பாஸ்கரனின் மதத்தைக் கண்டித்தல், அனுமானம், அர்த்தாபத்தி என்ற ப்ரமாணங்களும் ஸவிசேஷத்தையே காட்டல். பேதத்தைக் கண்டிக்கும் பூர்வ பக்ஷிகளின் குதர்க்கங்களைக் கண்டித்தல் ஆகிய இவை இங்கு இடம் பெறுகின்றன.

பேதத்தை ஏற்கக் கூடாதென்று பூர்வ பக்ஷியின் யுக்திகளைக் கண்டித்து அதனையேற்கவே வேண்டுமென்று யுக்திகளால் ஸ்தாபிக்கிறார். அத்வைதிகள் கூறுவதாவது : பேதம் என்பது வஸ்துவின் ஸ்வரூபமா? அல்லது வஸ்துவின் தர்மமா? வஸ்து ஸ்வரூபம் என்றால், ஸ்வரூபாத்மக பேதத்தை அறிகையில்-வஸ்துவில் ப்ரமம் என்பது வராமல் போகட்டும். ஸ்வரூபாத்மக பேதம் க்ரஹிக்கப்படவில்லையென்றால், தர்மீ (வஸ்து) க்ரஹிக்கப்படாததால் அத்யாஸம் என்பது வராது. ஆதலின், பேதம் ஸ்வரூபம் ஆக முடியாது. அத்துடன் ஸ்வரூபமே பேதமென்றால் - அவ்வாறு ஸ்வரூபம் பேதம் என்று வழக்கு ஏற்படட்டும். இரண்டும் பின்னங்கள் என்றபடி வழக்கு ஏற்படாமல் போகட்டும்.

பேதம் தர்மம் என்கிற பக்ஷத்தில் - பேதத்தை தர்மியிடமுள்ள தர்மத்துடன் ஒன்றியதாகக் கொள்ள நேரும். தர்மமும் - தர்மியும் எப்போதும் பேதமுள்ளவையாதலின், இரண்டும் வேறுபட்டவையென்கிற தன் சொல்லுடன் விரோதம் ஏற்படும். பேதம் தர்மி ப்ரதியோகி (சம்பந்த முள்ளவை) களைவிட வேறானது என்று ஒப்புக்கொண்டால், தர்மம் என்னும் பேதத்திலுள்ள தர்மி பேதம் தர்ம ரூபமான பேதஸ்வரூபம் என்றால்தான் தர்மி பேதத்தைப்போல தனக்கென்று வேறு பேதத்தை அபேக்ஷிக்காமல் தானே பேதத்தை சாதிப்பது என்றதாகும். அப்போது தன்னையே தான் சார்ந்திருத்தல் என்கிற ஆத்மாச்ரய தோஷம் வரும். மற்றொரு பேதத்தை ஏற்றுக்கொண்டு பேதகத்வத்தைச் சொன்னால் பரஸ்பரம் பேதத்தை

ஒவ்வொன்றும் சாதிப்பது என்பதால், அன்யோன்யாச்ரயதோஷம் வரும். ஆத்மீய பேதம் (தன்னைச் சேர்ந்ததின் பேதம்) என்று ஒப்புக்கொண்டால், சக்ரகம் (சுழன்று புறப்பட்டவிடத்திற்கே வருதல்) என்ற தோஷம் வரும். ஆகையால் பேதம் என்பது அடியோடு மித்யை (அஸத்தியம்) யாகும் என்கின்றனர்.

## நம் ஸ்ரீ பாஷ்யத்தில் இதற்கு விடை :

பேதம் ஸ்வரூபமா அல்லது தர்மமா? என்று கேட்கிறீரே. இவ்விரண்டையும் விட்டு மூன்ருவது ஸ்வதந்திரமாக பேதம் இருக்கலாமென்ற பக்ஷத்தை ஏற்றுக் கூறினீரா? ஏலாமல் கூறினீரா? ஸ்வதந்திரமாக அதனை ஏற்றுக்கொண்டால் பேதத்தை ஒப்புக்கொண்டதாகிறது. குடம் குடத்தன்மை முதலிய தர்ம - தர்மிகளை விட்டு வேருன வஸ்த்ரம் முதலியவற்றைக் காண முடிகிறது. பேதத்தையேற்பவர்களோ தர்ம - தர்மிகளை விட்டு மூன்ருவதாக அதனை ஏற்கிருர்கள். இரண்டு கோடி (பக்ஷங்)களில் ஒன்ருேடொன்று முரணுன தர்க்கத்தால் இரண்டும் தவறென்பதாய் தர்க்காபாஸங்கள் என்கிருேம். பேதம் ஸ்வரூபமேயென்ருல், அத்யாஸம் பொருந்தாது. தர்மம் என்ருலோ பேதவாதம் சித்தித்து விடுவதால் அதை ஒழிக்கவியலாது. போட்டி (எதிரிடை)யாகவும் கண்டிக்கிருேம். நீங்கள் ஒப்புக்கொள்ளும் அபேதம் என்பது ஸ்வரூபமா? தர்மமா? தர்மம் என்ருல் ஸ்வரூபத்தைத் தவிர்த்த தர்மத்திற்கு அபேதம் கூடாதென்பதால் விரோதம். தர்ம தர்மி பாவம் என்பது எப்போதும் பேதம் கலந்ததென்பதால் முன் குறிப்பிட்டபடி ஆத்மாச்ரயம், அன்யோன்யாச்ரம், சக்ரகம் என்ற தோஷங்கள் வந்துசேரும். அபேதம் ப்ரஹ்ம ஸ்வரூபமேயென்ருல் ப்ரஹ்மம் அபேதம் என்ற உலக வழக்கு ஏற்படவேண்டும். பின்னமானது என்ற வழக்கு ஏற்படவும் கூடாது. அபேதஸ்வரூபமான் ப்ரஹ்மம் ஸ்வயம் ப்ரகாசமாகையால்-ப்ரபஞ்சாத்யாஸம் ப்ரஹ்மத்துக்கு உண்டாகமாட்டாது. ப்ரஹ்மத்திற்கே அபேதம் என்பது வேருெரு ஸ்வரூபம் என்ருல் பேதவாதமே ஏற்கப்பட்டதாகிறது. ஆதலின் பேத பக்ஷத்தில் அத்வைதிகள் கூறிய தோஷங்கள் யாவும், அபேத பக்ஷத்திலே வந்துசேரும். ஸத்யம், ஜ்ஞானம், அனந்தம் என்ற சொற்களால் ப்ரஹ்ம ஸ்வரூபம்-அஸத்யத்தின் பின்னம், ஜடத்தின் பின்னம், பரிச்சின்னத்திலிருந்து (பரிமாணமுள்ளது) பின்னம் என்று ப்ரஹ்ம பேதத்தைக் காட்டுதலே பொருந்தும் என்ருல், ப்ரஹ்ம ஸ்வரூப பேதத்தையங்கீகரித்துத் தீரவேண்டும். இதர பேதங்கள் தர்மம் என்ருல் பேத வாதத்தை ஏற்று மௌனமாயிருக்க வேண்டும்.

இருக்கட்டும். பேதத்தில் பேதத்தையேற்காவிட்டால், எப்படி பேதஸ்வரூபம் சித்திக்கும் என்ருல் - பேதம் என்பது தன்னையும் பிறவற்றையும்

நிர்வஹிக்கக் கூடியதாதலின், தனக்குத்தான் தானே இதரத்திலிருந்து பேதம்; எந்தப் பொருள் - எந்தப் பொருளில் எதன் ப்ரமத்திற்கு விரோதியோ - அது அதிலிருந்து பேதம். வெண்மை முதலிய தர்மம் தான் சார்ந்துள்ள ப்ரம விரோதியாயிருந்து - தன்னிடத்தில் கறுப்பு முதலிய அத்யாஸத்திற்கு விரோதி யாவதால் - தனக்குத்தானே பேதம், வெண்மை முதலியவற்றிற்கும் தன் தர்மி (வெண்மையுடைய பொருள்) யுடன் சம்பந்தப்பட்டவற்றிலிருந்து பேதமும், வெண்மை நிறமேயாகும். வேறுன தன்று. வெண்மை ஸ்வரூபமே அந்தந்த அத்யாஸத்திற்கு விரோதியாதலால் ; ஆகவே, தர்மம் ஓரிடத்திலும் ஸ்வரூப மாகாது. குடம் முதலியவற்றிற்கு பேதம் தர்மம். பேதத்துக்கோ ஸ்வரூபமே பேதம். சாஸ்திரப்படி ப்ரத்யக்ஷத்திற்கேற்றவாறு ஏற்றுக்கொள்ளவேண்டும். இவ்வாறு ஏற்ருல், ஸ்வரூபம் பேதம் என்பதன் தூஷணமோ, தர்மம் பேதம் என்பதன் தூஷணமோ ஏதும் வராது. த்ரவ்யங்களுக்கு வெண்மை முதலிய சிறப்பான தர்மங்களும் குடத்தன்மை (கடத்வம்) முதலிய தர்மங்களும் பேதம். இவ்வாருன யுக்திகளால் மாயாவாதிகளின் யுக்திகளைக் கண்டித்து - ஸம் வேதனம் போல் பேதமும் தன்னையும் பிறவற்றையும் நிர்வஹிக்கவல்லது என்று நிரூபித்துப் பின், பேதத்தை க்ரஹிக்கையில், எதிர்த்தட்டான தூஷணங்கள் விளக்கப்பட்டுள்ளன.

## அத்வைதிகளைப் போட்டியாகக் கேட்கும் கேள்வி:

அத்வைதிகள் கேட்கின்றனர். ப்ரத்யக்ஷப் ப்ரமாணம் - தர்மியை மட்டும் க்ரஹிப்பதா? அல்லது தர்மியிலுள்ள கடத்வம் முதலிய பேதத்தையும் க்ரஹிப்பதா? தர்மியை மட்டும் என்ருல் விவாதமில்லை. இரண்டையும் க்ரஹிக்கும் என்ருல் தர்மியைக் க்ரஹிப்பது இதரத்தை யபேக்ஷிக்காதது ஆதலாலும், பேதக்ரஹணம் தர்மியில் சம்பந்திகளின் (ப்ரதியோகி) க்ரஹணத்தை அபேக்ஷிப்பதனுலும் - இவ்விரண்டையும் ஒரே காலத்தில் ப்ரத்யக்ஷம் க்ரஹிக்கமாட்டாது. க்ரமமாக ஒன்றென்ருய் க்ரஹிக்கிறது என்ருல் - ப்ரத்யக்ஷம் க்ஷணிகம் ஆதலின், தர்மிக்ரஹண காலத்திலேயே அழிந்துபோவதால், க்ரமமாக பேதத்தை க்ரஹிக்கமாட்டாது. அதனை வேறொரு ப்ரத்யக்ஷம் க்ரஹிக்கிறதென்ருல், அந்த ஜ்ஞானத்தோடு மற்றொரு ஜ்ஞானத்திற்கு சம்பந்தமில்லாமையால் அது பொருந்தாது. ஆதலின், க்ரஹிக்கக்கூடிய ப்ரமாணமில்லாமையால், பேதம் தாத்விகமன்று என்று, அத்வைதிகள் கூறுகின்றனர்.

## இதற்கு நம் விடை:

நீங்கள் ஏற்றுக்கொண்டுள்ள கல்பனையான பேத ப்ரம பக்ஷத்திலும் - அதிகரண ப்ரதியோகி பற்றிய ஜ்ஞானம் அபேக்ஷிக்கப்படுவது சமமே,

ஆதலின், ஒரே நேரத்திலோ - க்ரமமாகவோ ஏற்படக்கூடிய க்ரஹணங்கள் என்பவை பொருந்தா. ஒன்றன் ஜ்ஞானம் - மற்றொன்றின் ஜ்ஞானத்தைப் பற்றிய விஷயத்தை அறியாததாலே வேறு ப்ரத்யக்ஷத்தாலும் க்ரஹிக்க வொண்ணாது. ப்ரத்யக்ஷம் க்ஷணிகமானாலும் வேறு ப்ரத்யக்ஷம் கொண்டு மீதியைப் பூர்த்தி செய்தல் இயலாது. அன்ய ஜ்ஞானத்தோடு வேறு ஜ்ஞானத்துக்கு சம்பந்தமில்லையென்பது சமம் தானே. ஆகையால், எந்த யுக்தியைக்கொண்டு, கல்பனையாலான பேதத்தைச் சாதிக்கிறாயோ - அதே யுக்தி, பாரமார்த்திக பேதத்தையும் சாதிக்கவல்லது. பாரமார்த்திகமான பேதத்தை ஏற்காவிடில் கல்பனை பேதமும் சித்திக்காது. கல்பனை பேதமும் வேண்டாமென்றாலோ உலகிலுள்ள பேத வழக்குக்கு இழுக்கு ஏற்படும். பேத ப்ரமத்தை நீக்குவதற்காக வேதாந்தத்தின் ஆரம்பம் வேண்டாம்.

மேலும் பேதம்-ப்ரத்யக்ஷமில்லையென்றால், வெவ்வேறு விஷயங்களையும் க்ரஹிக்கும் வெவ்வேறு இந்த்ரியங்களுக்கும் பேதம்-வியவஸ்தை இராது. ஓர் விஷயத்தினை ஓர் இந்திரியம் க்ரஹிப்பதென்றும், ஓரிந்த்ரியம் ஒரு விஷயத்தைக் க்ரஹிக்க இயலாதபோது குருடன், செவிடன் என்றெல்லாம் ஏற்படுகிற குறைபாடுகளும் பேதங்களையே காட்டுகின்றன. அத்துடன் தர்மி தர்மங்கள், பேதம் ஒரு ப்ரத்யக்ஷத்தாலே ஒரே காலத்தில் எப்படி க்ரஹிக்கப் படுகின்றன என்றால் - ஒவ்வோர் விசேஷணத்துடனும் கூடிய விசிஷ்டம் (தர்மீ) இந்திரியங்களால் க்ரஹிக்கப்படுகிறது. பல விசேஷணங்களுடன் கூடிய பல விசேஷ்யங்கள் ஒருங்கே சேர்ந்திருந்தாலும் அவை ஒரே வேளையில் க்ரஹிக்கப்படும். உலகில் - பெரும்படை, காடு, நட்சத்திரமண்டலம் முதலிய குழுக்கள் ஒரே வேளையில் க்ரஹிக்கப்படுவதுபோல் - பல விசேஷண விசிஷ்ட பதார்த்தங்கள் க்ரஹிக்கப்படுவதில் தவறில்லை.

அப்போது குடம், வஸ்த்ரம், கறுப்பு, வெளுப்பு, அசைவது, அசையாதது என்னும் உணர்வும் உண்டாகிறது. அதில் இவை ஸ்வரூப-மாகவே க்ரஹிக்கப்பட்டால் ஒன்றோடொன்று ப்ரமத்தைப் போக்கடிக்கும். அந்தந்த தர்மத்தையுணர்வதனால் ப்ரமம் நீங்குகிறது. பிறவற்றிலிருந்து பிரித்தறியக் காரணமாக அந்தந்த தர்மங்களே அவற்றின் சம்பந்திகளைக் குறித்து பேதம் எனப்படுகின்றன. ஐந்து விரல்களும் வெவ்வேறானவை என்று ஒரே காலத்தில் பேதம் வழங்கப்படுவதுபோல் - ஒரே நேரத்தில் பேத வழக்கு பொருந்துவதே. இதற்கு முன் பின் என்ற க்ரமம் (முறை) தேவையில்லை. க்ரமம் பற்றி வழக்கு வரும் இடத்தில் கட்டைவிரலை விடச் சுண்டு விரல் வேறானது என்பதுபோல் வழக்கு தவறில்லை.

இவ்விஷயத்தில் ஜ்ஞானத்திலே முன் பின் என்ற க்ரமம் இல்லை. ஆகவே பேதம் பற்றி ப்ரத்யக்ஷத்திற்கு எந்த இழுக்குமில்லை. ப்ரத்யக்ஷம்

ஸத்தான ப்ரஹ்மத்தை மட்டும் க்ரஹிக்குமென்றால், ஜ்ஞானத்திற்கும், வழக்கிற்கும், சாஸ்த்ரங்களுக்கும் முரண்பாடு ஏற்படும். கோத்வம் என்ற ஜாதியும் அதன் ஆதாரமான ஸாஸ்நை (கழுத்திலுள்ள தோசை போன்ற ஆடு சதை) என்பதும் ஒன்றே. அதுவே பேத ரூபமானது.

1. அனுவர்த்தமானத்வம் (தொடர்ந்திருத்தல்) வ்யாவர்த்தமானத்வம் (விலகிச்செல்லுதல்) என்ற அவர்களின் இரு அனுமானங்களையும் கண்டித்தல். 2. பிறவற்றால் பாதிக்கப்படுவதே மித்யாத்வம். 3. அனுபூதியானது விஷயத்தை (பொருளை) ப்ரகாசப்படுத்தும் வேளையில் - ஜ்ஞாதாவுக்கே ஸ்வயம் ப்ரகாசமாயிருக்கும். 4. மற்றவர்களுக்கோ அனுமானிக்கத் தக்கதாயிருக்கும். 5. தன் வேறு ஜ்ஞானத்திற்கும் விஷயமாயிருக்கும். 6. அனுபூதிக்கு உற்பத்தியும், அதற்கு முந்தைய ப்ராக பாவமும் உண்டு. 7. அதுதானே தனது ப்ராக பாவாதிகளைச் சாதிக்கும். 8. வேறு ப்ரமாணங்களும் ப்ராகபாவத்தைச் சாதிக்கும். 9. குடம் முதலியவை அநித்யங்கள் என்பதை **அர்த்தாபத்தி** முதலிய ப்ரமாணங்களால் நிலை நாட்டல். 10. விஷய மற்ற ஸம்வித் என்பது காணப்படாததொன்று என்ற இப்பத்து விஷயங்களும் நிரூபிக்கப்பட்டுள்ளன. ஸுஷுப்தி வேளையில் நிர்விஷயமான ஸம்வித் உண்டென்பதும் கண்டிக்கப்படுகிறது.

1. அப்போது 'அஹம்' என்பதன் பொருள் எப்படி உணரப்படுகிற தென்று நிரூபித்தல். 2. 'ஸுகமாய் நான் உறங்கினேன்' என்ற பின் நினைவால் பற்பல அனுபூதிகளையும் ஸ்தாபித்தல். 3. குடத்தின் ஆகாசம் பற்றிய பேச்சைக் கண்டித்தல். 4. துண்டிக்கப்படுவது, துண்டித்தல் முதலிய உதாரணங்களைச் சாதித்தல். 5. ஸஜாதீயமாயும், விஜாதீயமாயும் ஸ்வகதமாயுமுள்ள பேதங்களைச் சமர்த்தித்தல். 6. அனுபூதியின் ஸ்வரூபத்தை நிரூபித்தல். 7. நித்யத்வம், ஏகத்வம், ஸ்வயம் ப்ரகாசத்வம் இவற்றை நிரூபித்தல். 8. வெண்மை முதலியவை தர்ம ஸ்வரூபங்களாகையால் கறுப்பு முதலிய ப்ரமத்தை நிவர்த்திப்பவை; அனுபூதியோ தர்மி ஸ்வரூபை, அதனால் ப்ரமத்தைப் பொறுக்கவல்லது 9. ஸம்வித்தே ஆத்மா என்கிற மதத்தைக் கண்டித்தல். நிர்விஷயமான புத்தியே ஆத்மா என்கிற மதத்தைக் கண்டித்தல். இவ்விடம் மூன்று அனுமானங்களால் (கேவல வ்யதிரேகி ஹேதுக்கள் கொண்டு) அத்வைதிகள், புத்தியை ஸ்வஸித்தியென்றும், ப்ரத்யக் என்றும், ஆத்மா என்றும் சாதிக்க முயல்கின்றனர். அவ்வாறே அன்வயியான அனுமானங்கள் மூன்று கொண்டு, அஹம் அர்த்தமான ஜ்ஞாதாவை ஸ்வஸித்தியில்லாததென்றும் பராக் என்றும், ஆத்மா வல்லாதது என்றும் சாதிக்கின்றனர். இந்த ஹேதுக்கள் எல்லாம் நம்மால் கண்டிக்கப்படுசின்றன.

## நாம் சொல்லும் அனுமானங்கள் நேர்மாறுனவை :

புத்தி ஸ்வஸித்தமில்லாதது என்ற அனுமானம் நமக்கு இஷ்டமானதே.

புத்தி - ப்ரத்யக் - ஸ்வஸித்தமானபடியால்

புத்தி - ஆத்மா - ப்ரத்யக் காயிருப்பதால்

ஜ்ஞாதா - பராக் - ஸ்வஸித்தமில்லாதபடியால்

ஜ்ஞாதா அநாத்மா - பராக்கானபடியால்.

என்று 4. ஹேதுக்களுக்கும் - நான் அறிகிறேன் என்ற ப்ரத்யக்ஷத்தாலே பாதிப்பும்-அஸித்தியென்ற தோஷமும் காணத்தக்கது. 1. அஹமர்த்தமே ஆத்ம என்பதற்கு ச்ருத்யர்த்தாபத்தியை ப்ரமாணமாக ஸ்ரீயாமுன முனிகளின் காரிகைகள் கொண்டு விளக்கல். 2. ஜ்ஞாதா ஸ்வஸித்தனல்லன் என்பதைக் கண்டித்தல். 3. ஜ்ஞாதா ஸ்வயம்ப்ரகாசமானவன். 4. ஆத்மா நித்ய மானவன் என்பதற்குச் சாதகமான ப்ரமாணங்கள், ச்ருதிகள் - அவற்றிற்குச் சாதகமான தர்க்கங்கள். தீபத்திற்கு ப்ரபை போலே ஜ்ஞாதாவான ஆத்மா விற்கு ஜ்ஞானம் குணம்; அதன் தர்மம், அது ப்ரபைபோல் திரவ்யமாய் இருக்கும். " எங்கும் பரவிய - சிதறுண்ட தீபத்தின் அவயவங்களே ப்ரபை " என்ற கூற்றிற்கு கண்டனம். இவ்வாறு கூறிய தர்க்கங்களால் நிலை நாட்டியதற்காதாரமாக " அத்ராயம் புருஷ: ஸ்வயம் ஜ்யோதி: " என்பது முதலான ச்ருதி வாக்யங்களைக் காட்டல். " அஜடத்வம் " என்ற ஏதுவிற்கு நான்கு விதமாக விகல்பம் செய்து (குறுக்குக் கேள்வி கேட்டு) கண்டனம், " ஜ்ஞாத்ருத்வம் அத்யாஸத்தாலேற்பட்டது " என்பதற்குக் கண்டனம். " ஜ்ஞாத்ருத்வம் என்பது விகாராத்மகம் " என்றதற்குக் கண்டனம். ஜ்ஞாத்ருத்வம் ஸ்வயமேவஸித்தம் என்பதற்கு ச்ருதி முதலிய ப்ரமாணங்களைக் காட்டல் - நித்தியமான தர்ம பூதஜ்ஞானத்திற்கு கர்ம வசத்தால் சுருக்கம் ஏற்படும் என்ற இவ்விஷயங்கள் எல்லாம் இங்கு விளக்கப்படுகின்றன.

## இங்குள்ள விசேஷம :

ஆத்மா கண்களால் க்ரஹிக்க கூடியதன்று. (அசாக்ஷுஷம்) என்பதை நிலை நாட்டி அதன் ஸ்வரூபம் விளக்கப்படுகிறது. இதுவரை ஆத்மாவுக்கும், தர்மபூதஜ்ஞானத்திற்கும் எதையேனும் ப்ரகாசப் படுத்தல் பொதுவென்றும், ஆத்ம ஸ்வரூபம் நான் - நான் என்று தனக்குத் தான் தோன்றுவதால் ஸ்வப்ரகாசத்தில் தானே பலன் பெறுகிறது என்கிற ' ப்ரத்யக் ' த்வம் மிகுதியாகும். தர்ம பூதமான ஜ்ஞானத்துக்கோ தன்னுடன் சம்பந்தித்ததை ப்ரகாசப்படுத்தல் என்ற விஷயித்வம் (விஷயங்களையுடைய

தன்மை) மிகுதியான சிறப்பு - ஆத்மஸ்வரூபம் - நான் என்று, எப்போதும், ப்ரத்யக்த்வம், ஏகத்வம், அநுகூலத்வம் இவற்றுடன் கூடியதாகவே விளங்குகிறது. இந்த தர்மங்களுடன் கூடிய தன் ஸ்வரூபத்தைத் தவிர்த்து மற்றவற்றை அது விஷயமாக க்ரஹிக்காது. ப்ரத்யக்த்வமும், ஜ்ஞாத்ருத்வமும் இவனுக்கு ஸ்வபாவஸித்தமானவையென்றும் கூறுவர்; கண்ணுக்கு விஷயமாகும் தர்மபூதஜ்ஞானம், 'குடத்தை நான் அறிகிறேன்' என்று தான் சார்ந்த ஆத்மாவை விஷயமாய்க்கொண்டும், குடம்போன்ற விஷயங்களைப் பற்றியும், ஆத்மாவிற்கு விசேஷனமாகத்தானே தோற்றுகிறது. இப்படியானுல், இந்த ஜ்ஞானம் **சாக்ஷுஷம்** ஆதலின், குடம் முதலியதைப்போல் விஷயமான ஆத்மாவும் சாக்ஷுஷம் (கண்ணுக்குப் புலப்படுவது) என்று ஏற்கவேண்டிவரும். ஆத்மாவைக் கண்களுக்கு க்ரஹிக்கும் சாமர்த்தியமின்மையால் அதற்கு சாக்ஷுஷத்வம் ஏற்கக்கூடியதன்று என்றும் சரீரத்தைக் கண் க்ரஹிக்கலாம் என்றும் ஸ்ரீபாஷ்யத்தில் சாதித்திருக்கிருர். 'குடத்தை நான் அறிகிறேன்' என்ற இடத்தில் சாக்ஷுஷமான ப்ரத்யக்ஷமாதலின், ஆத்மா ஜ்ஞானத்திற்கு தர்மியாகத்தான் தோன்றுகிறது. குடம் விஷயமாக (அங்கமாக) தோற்றுகிறது. ஜ்ஞானத்தில் விஷயமாகத் தோற்றினுல்தான் சாக்ஷுஷம் என்று சொல்லக் காரணமாகும். மேலும் - இப்போது குடம் என்ற இடத்தில் காலத்திற்கும் சாக்ஷுஷத்வம் தோன்றுவதுபோல் ஆத்மாவுக்கும் அது பொருந்தலாமேயென்று கூறக்கூடாது. அனுமானம் முதலியவை அல்லாத சாக்ஷுஷாதி ஜ்ஞானத்தில் ஒரு இடத்திலும் ஆத்மாவுக்கு ஜ்ஞானத்தின் விஷயமாகத் தோற்றமில்லாமையால் அது பொருந்தாது. அதனுலேயே ஸ்ரீபாஷ்ய வாக்கியங்களும் ஏற்புடையனவாகின்றன. இப்பொருள் ச்ருதப்ரகாசிகையில் 'அஹமர்த்தோ நசேத் ஆத்மா' என்னும் ஸ்ரீ பாஷ்யப் பகுதியில் விளக்கப்பட்டுள்ளது. ஆனுல், ஆத்மா தர்மபூதஜ்ஞானத்திற்கு சேஷமாக எங்கு காணப்படுகிறது என்ருல், ஆத்மா ஸ்வயம் ப்ரகாசம், அசாக்ஷுஷம் என்ருலும், நித்யம், அணு, சேஷன் என்றித்தகைய தர்மங்களுடன் கூடியதாக அனுமானத்தால் அறியத் தக்கதென்று ஏற்றுக்கொண்டிருப்பதாலே. அப்போது "நான் நித்தியன் என்று அறிகிறேன்" என்ற தோற்றத்தில் ஜ்ஞானத்திற்கு சேஷமாகவும் - தர்மியாகவும் இரண்டு தோற்றம் உள்ளது. சாக்ஷுஷமான ப்ரதீதியில் அவ்வாறில்லை. அதனுலேயே பிறவற்றால் தனக்குத் தோற்றுகையென்றும், ஸ்வயமாகவே தனக்குத் தோற்றுகையென்றும் இருவகை பராக்த்வமும், பொருந்துகின்றன.

இவ்விஷயத்தில் - ஒரே சமயத்தில் இருவகைத் தோற்றம் கூடாதென்ற பூர்வபக்ஷத்தைப் பின்பற்றி ச்ருத ப்ரகாசிகையில் சமாதானம் கூறியது எப்படிப் பொருந்தும்? என்ருல், இங்கு ச்ருதப்ரகாசிகாகாரர் - ஸ்ரீரங்க ராமானுஜ ஸ்வாமி இருவர் கருத்துப்படியும் குடத்தை நான் அறிகிறேன்

என்ற ப்ரத்யக்ஷத்தில், ஆத்மா தர்மியாகத் தோன்றுவதைக் கொண்டு சாக்ஷுஷமென்று கூறவொண்ணுது. அணுத்வாதிகளுடன் கூடியவன் என்ற நிலையில், தன்னே, 'நான் - நித்யம் - அணு - சேஷன்' என்றறிகிறேன், என்றிவ்வாறு சாஸ்த்ரத்தால் அறிவதும் தவறன்று. அதனுல்தான் ஜ்ஞானம் யாவும் கர்த்தாவைக்கொண்ட தோற்றமும், கர்மாவைக்கொண்ட தோற்றமும், உடையன என (ஸகர்த்ருகம் - ஸகர்மகம்) என்று இந்த இரு லக்ஷணங்களும் பொருந்துகின்றன என்பது ஸ்ரீ பாஷ்யகாரரின் திருவுள்ளம்.

அத்வைதிகள் கூறுவது "ஜடமான அஹங்காரத்திலே ஸம்வித்தின் சாயை அபிவியக்தமாதல் - சம்பந்தப்படுதலால், ஜ்ஞாத்ருத்வம் என்பது அத்யாஸத்தால் ஏற்பட்டது" என்பது. அது நம்மால் கண்டிக்கப்படுகிறது. சூர்யனின் கிரணங்கள் - நம் கையால் வெளிப்படுவதென்பது தவறு, என்று பல விகற்பங்களால் கண்டனம் - ஸம்வித்தென்பது அஜ்ஞானத்திற்கு ஆச்ரய மன்று. ஜ்ஞானத்திற்குப் ப்ராமாண்யம் என்பது - உள்ளது உள்ளவாறு வழங்குவதற்கேற்ற தன்மையை ஏற்படுத்தல் - அது தானே ஸித்திப்பது. ஆதலின் 'அஹம்' என்பதன் பொருளான ஜ்ஞாதாவே ஆத்மா. ஸுஷுப்தி காலத்தில் அஹம் என்பதன் பொருள் தெளிவாக புலப்படுவதில்லை. அது நிலையானது. மோக்ஷ தசையில் அஹம் அர்த்தம் தொடர்வதில்லையென்று பிறர் கூறுவது தவறு. அந்த ப்ரத்யகாத்மா முக்தி தசையிலும், 'அஹம்' என்றே தோன்றுகிறது என்று தொடங்கி, ப்ரதிஜ்ஞை, ஹேது முதலிய ஐந்து அங்கங்கொண்ட அனுமானம் காட்டப்படுகிறது. வாமதேவர் முதலானவர்கள் "நானே மனுவாகவும் சூர்யனுகவுமிருந்தேன்" என்று அனுபவத்தைக் கூறுவதில் இது தெளிவாகிறது. 'அஹம்' என்பதன் பொருள் வேறு. 'அஹங்காரம்' என்பது வேறு என்ற இவையெல்லாம் இங்கு விளக்கப் படுகின்றன.

### ப்ரத்யக்ஷத்தில் பேதவாஸனை என்ற தோஷம் கூறப்பட்டதை கண்டிக்கின்ற வகை:

ப்ரமாணுதிகள் வ்யாவஹாரிகம் (வழக்கில் ஸத்யமாகத் தோன்றுபவை) என்ற கூற்றுக்கும் கண்டனம்-பாதகமில்லாவிடினும் தோஷத்தை மூலமாய்க் கொண்டதே அஸத்யமென்பதற்கு மலைக்குகை முதலியவற்றை உதாரணம் காட்டிக் கண்டித்தல். ப்ரஹ்மம் சாஸ்த்ரஜ்ஞானத்திற்கு விஷயம் என்ருல், அஸத்யமாக நேரிடும் என்று குறை கூறல். அஸத்யத்தாலே ஸத்யம் உண்டாகிறதென்கிற மதத்திற்குக் கண்டனம். நமது கொள்கைப்படி ஸ்வப்னத்தில் தோன்றும் பொருள் பற்றிய ஜ்ஞானமும், மந்திராதிகளால் தோன்றும் மாயையான ஜ்ஞானமும், கயிற்றை ஸர்ப்பமென்று எண்ணும் ஜ்ஞானமும், ஸர்ப்பம் அருகிலிருத்தலும், சங்கையால் விஷமென்னும் அறிவும், நீரில் முகம் முதலியன தோன்றலும் ஸத்யமே. விஷயங்களே அஸத்திய

மானவையாதலின், சுப - அசுப காரியங்களுக்குத் தோற்றங்களே காரணமாகின்றன. "ஜ்ஞானோத்பத்திக்கு முன்னர் சாஸ்த்ரம் ஸத்யம் - ஆனால் பின்னாலோ அஸத்யம் என்ற மதத்திற்குக் கண்டனம் - சர்வமும் சூன்யமே என்று கூறும் மாத்யமிகன் கொள்கையால் சாஸ்திரத்திற்குப் பாதகம் ஏற்படுவதைத் தடுத்தாகவேண்டியுள்ளது.

## பின் ச்ருதியின் ப்ரக்ரியை

ஸத்வித்யையும், பரவித்யையும் ஸவிசேஷத்தையே குறிப்பிடுவனவென்று ஸ்தாபித்தல். ஸத்ய ஜ்ஞாநாதி வாக்யம் அகண்டார்த்தகமென்பதன்கண்டனம். விசேஷண விசேஷ்யபாவம் (ஸமானாதிகரணம்) விசிஷ்டமான அர்த்தத்தையே விளக்குமென்று நிறுவல் - ஸத்தே முன்பு இருந்ததென்று அஸத்கார்ய வாதம் ஒதுக்கப்படுகிறது. ஏகமேவ என்பது ஸ்தூலாவஸ்தைக்கு உபயோகியான ஸூக்ஷ்மாவஸ்தையை ஆச்ரயித்தது என்று உபாதான காரணத்வத்தைக் காட்டுகிறது. அத்விதீயம் என்பது தன்னைத்தவிர வேறு நிமித்தமில்லையென்கிறது. ஆகையால் இந்த வாக்கியம் ஸஜாதீயாதி பேதங்களைக் கண்டிப்பதன்று. சர்வ சாகாப்ரத்யய ந்யாயத்தால், ஸத்வித்யையிலும் ஸர்வஜ்ஞத்வம் முதலிய குணங்களை அநுஸந்தானம் செய்யவேண்டும். 'அபஹத பாப்மா' எனத் தொடங்கும் வாக்கியத்தில் - நிர்க்குணத்வத்திற்கும், ஸகுணத்வத்திற்கும் வெவ்வேறு விஷயங்களைக் காட்டல். ஸகுண வாக்யங்கள் மித்யா விஷயம் என்பது கண்டிக்கப்படுகிறது. 'பீஷாஸ்மாத்' என்ற வாக்கியத்தில் ப்ரஹ்மத்திடம் கல்யாண குணங்களே பேசப்படுவதாக ஆதரவு காட்டல். யஸ்யாமதம் என்பதும் ப்ரஹ்மத்துக்கு ஜ்ஞான விஷயத்வமில்லையென்று கூறுவது என்பதைக் கண்டித்தல். ஸகுணோபாஸனமே முக்திக்கு ஹேது. ப்ரஹ்மத்துக்கு அபரிச் சின்னம் (அளவிட முடியாதது) என்று தான் அறியப்படும் நிலை. "நத்ருஷ்டே: த்ரஷ்டாரம் பச்யே:" முதலிய ச்ருதிக்கு இரண்டுவிதமான கருத்து. 'ஆனந்தோ ப்ரஹ்ம' என்ற வாக்யம், ப்ரஹ்மம் ஆனந்தத்தை உடையதென்று கருதுகிறது. 'நேஹ நாநாஸ்தி' என்ற நிஷேதம், ப்ரஹ்மாத்மகமில்லாத ஏதும் இல்லை என்று கூறுகிறது. 'யதாஹ்யே வைஷ' என்ற ச்ருதி ப்ரஹ்மத்யானத்தில் இடையீடு ஏற்பட்டால், ஸம்ஸார பயம் உண்டென்கிறது. 'நஸ்தானதோऽபி பரஸ்ய' என்ற ஸூத்திரமும் - ப்ரஹ்மம் - ஸமஸ்த தோஷங்களுமற்ற அனைத்து கல்யாண குணங்களுக்கு முறைவிடம் என்று நிரூபிக்கிறது.

## இனி புராண விஷயம்

ஸ்ரீ விஷ்ணு புராணம், கீதாதிகளுக்குத் தாத்பர்யமெல்லாம் ஸவிசேஷ ப்ரஹ்மத்தை விளக்குவதிலேயேயென்று முன்பின் வசனங்களை யுதாரணமாகக்

காட்டி நிரூபித்தல். ஸ்ரீ விஷ்ணு புராணம் ஆறும் அம்ச
யஸ்தமித பேதம்யத் ” என்கிற ச்லோகத்தில் முன்பின் பகு
திருமேனியே சுபாச்ரயம் எனக் காட்டுகின்றன. அவை செ
வாக்கியங்களுடன் ஒத்த கருத்துடையவை. ஆதலின்,
பேதம்’ என்ற ச்லோகம் பரிசுத்தமான ஜீவாத்ம ஸ்வரூபத்
ஆரம்பிக்கும் புருஷனுக்கு மனத்தால் அறியவொண்ணாதது
விசேஷ ப்ரஹ்மத்தைக் கூறுவதில்லை. ஸ்ரீ விஷ்ணு புராண
இரண்டாம் அத்யாயத்திலுள்ள ‘அவிகாராய சுத்தாய’ என்
அடுத்துள்ள “ஜ்ஞான ஸ்வரூபம் அத்யந்த நிர்மலம்” மு
திற்கும் க்ஷேத்ரஜ்ஞ வ்யஷ்டி சரீரகனை பரமாத்மாவை
பொருள் காட்டுவது. இங்கு அத்வைதிகள் ஜ்ஞான ஸ்
சமானாதிகரணமாகக் (விசேஷணமாக) கூறியது ப்ரஹ்மத்து
ஜகத்வம் இரண்டையும் பாதிக்கிறது என்பதைக் கண்டிக்க -
லுள்ள வினா - விடைகளைக்கொண்ட ச்லோகங்களின் அர்த்த
“ஜகச்ச ஸ:” என்றும் ஸாமானாதிகரண்யத்திற்கு (வி
பாவத்திற்கு) சரீராத்ம பாவமே மூலம் என்று சம
இத்தகைய ஸாமானாதிகரண்யம் - நிர்விசேஷமான ப்ரஹ்ம
கொள்கிறதென்றால், சாஸ்த்ரமே பொருத்தமற்றதாகிவிடும்.

பின்பு, “நிர்குணஸ்ய அப்ரமேயஸ்ய” என்ற ச்லோக
மற்ற புதிய பொருளைக் காட்டல் - ஸ்ரீவராஹ ஸ்தோத்ரமா
த்வமேவைக:” முதலிய நான்கு ச்லோகங்களுக்கும் ஜகத் மித்
என்ற பொருளையே உரியதாகக் கூறினால், லக்ஷண முதல்
ஸ்துதிப்ரகரணத்திற்கு விரோதமும் வரும். இந்த நான்கு ஸ்
ஆதிபரதரின் நான்கு ச்லோகங்களும், ஜகத்தின் மித்யாத்வத்
யல்ல; ஸகல தேஹங்களிலுள்ள ஜீவஸ்வரூபங்களும் ஜ்ஞா
ஆதாரமாகக் கொண்டவையென்று கூறுகின்றன. விஷ்
முடிவிலுள்ள “விபேத ஜனகே ஜ்ஞானே” முதல
ஜீவர்களின் ஸ்வரூப ஐக்யத்தையோ - ஜீவப்ரஹ்ம ஐக்
கூறுவதன்று.

அவ்வாறு கூறுவதாகக் கொண்டால், “த்வா ஸ
ஸகாயா” முதலான ச்ருதி - ஸ்ம்ருதிகள் பாதிக்கப்படும்.
ப்ரஹ்மத்துக்கும் ஐக்கியமும் கூடாது. “பரமஸாம்யத்தை
என்னுடன் ஸமான தர்மத்தையடைகின்றனர். முதலியவற்று
வருவதனால், அத்வைதிகள் நிர்க்குணபரமெனக் கூறிய
ஸகுண ப்ரஹ்ம விஷயம்தான். விஷ்ணு புராணத்திலுள்ள

ப்ராபகம் ப்ராப்யே'', தத்பாவ பாவமாபன்ன: என்ற ச்லோகங்களும், முக்தனுக்கு ப்ரஹ்ம ஸாம்யத்தைச் சொல்கின்றன. ஆகையால், விபேத ஜனகே ஜ்ஞானே என்று சாஸ்திர பூர்த்தி ச்லோகமும், முக்தனுக்கு தேவன், மனிதன் என்பதுபோன்ற பேதமில்லையென்று தெளிவுபடுத்துகிறது. ஆத்மனோ ப்ரஹ்மணோ பேதம் அஸந்தம் க: கரிஷ்யதி என்கிறவிடத்தில் ப்ரஹ்மண: என்பது பஞ்சம்யந்தம். ''க்ஷேத்ரஜ்ஞஞ்சாபிமாம் வித்தி'' என்கிற கீதாவசனமும் - ஸர்வ ஜீவர்களுக்கும் நானொருவனே அந்தர்யாமி என்று கூறுகிறது. பின்பு சாஸ்த்ரம் நிர்விசேஷ ப்ரஹ்ம பரமாக மாட்டாது என்று முடித்திட்டார்.

## ஏழுவிதமான அனுபபத்திகள்

அத்வைதிகள் கூறும் அவித்யைக்கு ஏழுவிதமான அனுபபத்திகள் - பிழைகள் நம்மால் காட்டப்படுகின்றன. அவையாவன:- ஆச்ரயானுப பத்தி, திரோதானுனுபபத்தி, ஸ்வரூப அனுபபத்தி, அநிர்வசனீய அனுபபத்தி, ப்ரமாணானுபபத்தி, நிவர்த்தக அனுபபத்தி, நிவர்த்ய அனுபபத்தி என்பனவாம்.

1. **ஆச்ரயானுபபத்தியாவது:** ஜ்ஞானத்தால் பாதிக்கப்படும் அவித்தை ஜ்ஞானஸ்வரூபமான ப்ரஹ்மத்தை ஆச்ரயித்திருப்பது பொருந்தாதென்பதாம். இங்கு அத்வைதிகள்-''ஜ்ஞான ஸ்வரூபமான ப்ரஹ்மம் தன் இருப்பினுல் (ஸத்தையால்) அவித்யா விரோதியல்ல - பின்னென்னெனில் 'ஜ்ஞானம் ப்ரஹ்மம்' என்ற ப்ரமாண ஜ்ஞானமே விரோதி. ஸ்வரூபாத்மக ஜ்ஞானம் வேறு. அதனை விஷயமாகக்கொண்ட ஜ்ஞானம் வேறு. இரண்டும் ஒரே விஷயத்தைக் கொண்டவை யென்ருலும், இவன் தேவதத்தன் என்னும் ஜ்ஞானத்திற்கும் இவனே அந்த தேவதத்தன் என்ற நினைவு கூறும் (ப்ரத்யபிஜ்ஞை) ஜ்ஞானத்திற்கும் விஷயம் ஒன்ருயிருந்தாலும், ப்ரத்ய பிஜ்ஞை, இரண்டு நபர்களில்லையென்றதைச் சாதிப்பதால் சிறப்பானது. அதுபோல ஸ்வரூபஜ்ஞானம் அவித்யைக்கு விரோதியாகாது'' என்று கூறுகின்றனர். இதற்கு இங்கு விடை தரப்படுகிறது.

நீங்கள் கூறும் ப்ரமாண ஜ்ஞானமும் அவித்யா நிவர்த்தகமாக மாட்டாது. முன் காட்டிய அபிஜ்ஞை - பிரத்யபிஜ்ஞைகளுக்கு முறையே ஒரு காலத்திய ஜ்ஞானம், வேறு வேறு காலத்திய ஜ்ஞானம் என்ற இருவித தன்மைகளும் விஷயமாகின்றன. அதனுல் ப்ரத்யபிஜ்ஞை இரண்டு வேறு நபரோ என்ற ப்ரமத்தை நீக்கலாம். ஆனுல், இங்கு ஸ்வரூப ஜ்ஞானமும், ப்ரமாண ஜ்ஞானமும் ஆகிய இவ்விரண்டும் ஒரே தன்மையுள்ள நிர்விசேஷ ப்ரஹ்மத்தையே விஷயமாகக் கொண்டவை ஆதலின், ஸ்வரூப ஜ்ஞானமே

ஜகத் என்கிற ப்ரமத்தைத் தடுக்கும் என்னும் திருவுள்ளம் கொண்டு அதனைக் கண்டிக்கிறார்.

2. **திரோதானு னுபபத்தி:** ப்ரகாசமே வடிவான ப்ரஹ்மம் அவித்யையால் மூடப்பட்டதென்று கூறுகின்றனர். அப்படியாயின், ப்ரகாசத்தை மறைப்பதென்பது ப்ரகாசம் உற்பத்தியாகாமல் தடுப்பதா அன்றி அதனை யழிப்பதா? ப்ரஹ்மப்ரகாசத்திற்கு உற்பத்தியேயில்லாமையால், அதை மறைப்பதென்பது ப்ரஹ்மத்தின் அழிவென்றே கூறியதாகும். ஆதலின், இது பொருந்தாது.

3. **ஸ்வரூப அநுபபத்தியாவது:** ப்ரஹ்மத்திடம் ஒப்புக்கொண்ட அவித்யா தோஷம் உண்மையானதா? அஸத்தியமானதா? உண்மையேயென்றால், உண்மையிலேயே இருபொருள் உண்டென்று ஏற்றதாகும். அஸத்தியமென்றால் அவ்வவித்யை - பார்ப்பவன், பார்வை, பார்க்கப்படுவது என்ற மூன்றில் ஒன்றாக இருக்கவேண்டும். ப்ரமத்திற்கு அதிஷ்டானமான (ஆதாரமான) பார்வை ஸாக்ஷாத் த்ருசிரூபம் அன்று; பார்வை என்பதில் ஸ்வரூப பேதம் ஏற்கப்படாததால், ப்ரஹ்மமே அபரமார்த்தம் என்றவாறு ஏற்க நேரிடும். பார்வை, பார்ப்பவன், பார்க்கப்படும் பொருள் அனைத்தும் தோஷத்தை மூலமாகக் கொண்டவையாதலின், அதற்கும் மூலமான ஓர் தோஷத்தை அபேக்ஷிப்பதால் முடிவேயில்லாமல் அனவஸ்தை வந்திடும். ப்ரஹ்மமே தோஷம் என்றால் - தோஷத்தின் நிவ்ருத்தியென்பது ப்ரஹ்மத்தின் நாசம் என்று முடியும்.

4. **அநிர்வசனீயத்வ அனுபபத்தி:** அத்வைதிகள் இந்த அவித்யையை ஸத் என்றோ அஸத் என்றோ சொல்ல முடியாததால் அநிர்வசனீயம் என்கின்றனர். அது ப்ரதீதி (உள்ளத்திற்குப் புலப்படுதல்) யைக்கொண்டு ஸித்திக்க வேண்டும். ப்ரதீதியில் அவித்யை - ஸத் என்றோ அஸத் என்றோதான் தோன்றுகின்றது. ஆதலின், அநிர்வசனீயம் என்பது சரியன்று. சத்தும் அஸத்துமில்லாததுதான் அவித்யையின் விஷயம் என்றால், தோன்றாததுகூட ப்ரதீதியில் விஷயமாகலாம். அப்போது விஷயம் எது என்ற வ்யவஸ்தையே (கட்டுப்பாடு) அற்றுப்போம்.

5. **ப்ரமாணனுபபத்தி:** பாவரூபமான அஜ்ஞானம் உண்டென்று ஏற்றுக்கொள்ள "அறிவற்ற நான் என்னையும் பிறரையும் அறிந்திலேன்" என்கிற ப்ரத்யக்ஷம் ப்ரமாணம். இந்த ப்ரத்யக்ஷம் ஜ்ஞானமுண்டாவதற்கு முன் உள்ள இன்மையை (ப்ராகபாவம்) விஷயமாகக் கொண்டதெனல் பொருந்தாது. ஏனெனில், ஜ்ஞானத்தின் ப்ராகபாவத்தை - அதன் சம்பந்தியான (ப்ரதியோகி) ஜ்ஞானத்தைக்கொண்டே நிரூபிக்கவேண்டும். ஆதலின்,

எதைப்பற்றிய ஜ்ஞானம் இல்லை என்கிறேமோ அந்த ஜ்ஞானம் அப்போ திருப்பதால் ஜ்ஞாநுபாவம் எப்படி விஷயமென்று கூறமுடியும்? “அப்படியில்லை: நிஷேதிக்கப்படுவது என்ற ஜ்ஞானம் வேறு; நிஷேதத்தின் ஸம்பந்தமுள்ள பொருள் (ப்ரதியோகி) பற்றிய ஜ்ஞானம் வேறு; ஆதலின் விரோதமில்லை” - என்பீராயின், அதுவும் உசிதமாகாது. அந்த ப்ரத்யக்ஷத்தில் ஒருவித ஜ்ஞானமும் இல்லை. (ஜ்ஞானத்வாவச்சின்னுபாவம்) என்று ஏற்படுவதால் ஒருவகை ஜ்ஞானமிருக்கும்போது அது பொருந்தாது.

உலகில் ‘ரூபமுள்ள இடம் எதிலும் அதேபோன்ற வேறென்றுதான் நிஷேதிக்கப்படுகிறது’ என்றபடி அதிகரண ஜ்ஞானமில்லாவிட்டால் அபாவம் பற்றிய ப்ரத்யக்ஷம் வராதென்று கண்டிருக்கிறேம். இவ்விடம் அதிகரணம் (அதிஷ்டானம்) பற்றிய ஜ்ஞானமிருந்தால், ஒரு ஜ்ஞானமுமில்லையென்பது (ஜ்ஞானசாமான்யாபாவம்) பொருந்தாதாதலின்; ‘நான் அஜ்ஞன்’ என்றல் இந்த ப்ரத்யக்ஷம் ஜ்ஞான ஸாமான்யமே உத்பத்தியாகாத ப்ராகபாவத்தைக் குறிப்பதன்று. ஆகவே ப்ராகபாவத்தில் வேறன பாவரூபமான அஜ்ஞானமே விஷயம் என்று இதுதான் ப்ரமாணம். இதுபோல, அனுமானமும் ப்ரமாணம் எவ்வாறெனில் - நம் சர்ச்சைக்குரிய ப்ரமாண ஜ்ஞானம் தன் ப்ராகபாவத்தைத் தவிர்த்த தன் விஷயத்தை மறைக்கும் - தன்னுல் விலக்கக் கூடிய - தன்னிடத்தில் உள்ள வேறெரு பொருளை முன்னதாகக்கொண்டது. ப்ரகாசப்படுத்தப்படாத பொருளைத்தான் ப்ரகாசப்படுத்துவதால் - இருட்டில் முதலில் தோனறிய விளக்கின் ஒளிபோலே என்பது அவ்வனுமானம்.

விளக்கினெளி தோன்றும்முன் அதன் ப்ராகபாவம் இருந்தது. அதை விட்டுவிடுவோம். அதை விட்டு - இது தன் விஷயமான குடம் முதலிய வற்றை மறைக்கும் காரிருளை முன்னதாகக் கொண்டது. அது தன் தோற்றத்தால் நிவர்த்திக்கப்படுவது. தானுள்ள அறையிலேயே அதுவும் இருந்தது. அத்தைப்போலவே ப்ரமாண ஜ்ஞானமும் முன்பு தன்னுல் விலக்கத்தக்க ஓர் பொருளைக் கொண்டதென்று அனுமானிக்கிறேம், என்று அவர்கள் கூறுகின்றனர். இதை நாம் கண்டிக்கும் முறை பின்வருமாறு.

நான் அஜ்ஞன் (அறியாதவன்) என்ற ப்ரத்யக்ஷத்திற்கு பாவரூபமான அஜ்ஞானம் விஷயமாகாது. பாவரூபமான அஜ்ஞானம் என்பது ஜ்ஞானத்திற்கு விரோதியாகத் தோன்றுகிறதா? இல்லையா? விரோதியென்றல் முன் ப்ராகபாபத்திற்குக் கூறிய எல்லா தோஷங்களும் இடம்பெறும். விரோதியாகத் தோன்றும் அஜ்ஞானம் ப்ரதியோகியான ஜ்ஞானத்தின் ப்ரகாசமில்லையெனில் தான் பிரகாசிக்காது. ப்ரதியோகியான ஜ்ஞானம் பற்றிய ப்ரகாசமிருக்கையில் அதன் விரோதியான அஜ்ஞானம் உதிக்கமாட்டாது. அதை ப்ரத்யக்ஷம் எப்படி விஷயமாகக் கொள்ளும்? அது ஜ்ஞான விரோதியாகத் தோன்ற

வில்லையென்றால், அவிரோதியாகத் தோன்றுமையால், அவிருத்தமான அஜ்ஞானம் விஷயம் என்று கூறவியலாது. ஆனல் மோஹமுள்ளவனுனேன். மூடனுனேன் என்ற (இடங்களில்) தோற்றங்களில், ஜ்ஞான விரோதமின்றி ஸ்வரூபத்தில் பாவரூபமான அஜ்ஞானம் தோற்றுகிறது என்பதும் தவறு. மோஹங்கொண்டவனுனேன் என்னுமிடத்தில் ஜ்ஞான விரோதம் உள்ளடங்கிக் கிடப்பதால் அஜ்ஞானம் தோன்றுகிறது. ஆதலின் - அது பொருந்தாது மேலும் ஸ்வானுபவரூபமான ப்ரஹ்மம் அஜ்ஞானத்தை ஸாக்ஷாத்கரிக்காது (காணுது) அஜ்ஞானத்தால் ப்ரஹ்மம் மறைந்ததென்ருல், அஜ்ஞானத்தைக் காண்பதற்கு மூலம் மறைவு (திரோதானம்) மறைவிற்கு மூலம் காணல் என்று அன்யோன்யாச்ரய தோஷம் வரும்.

அடுத்து அனுமானமும் அஜ்ஞானத்திற்கு ப்ரமாணமாகமாட்டாது. வெளிப்படாத பொருளைப் ப்ரகாசப்படுத்துவது என்றது ஜ்ஞானத்தின் ரூபமா? ஜ்ஞான கரணத்வமா? அன்றி, ஜ்ஞான கரணத்திற்கு உபகாரகத்வமா? அல்லது ஜ்ஞான ஹேதுத்வமா? என்று பல விகல்பங்களையும் செய்து ஜ்ஞானத்வம் என்ருல் விளக்கொளியை உதாரணமாகக் காட்டல் பொருந்தாது. அது சாதன (விகலம்) மற்றது. ஜ்ஞானகரணத்வம் என்ற பக்ஷத்தில், பக்ஷத்தில் ஹேது இல்லை என்பதால், அஸித்தி என்றிவ்வாறு 4 பக்ஷங்களிலும் கண்டனங்கள் கூறப்பட்டன. தீபப் ப்ரபாத்ருஷ்டாந்தத்துக்கு அஜ்ஞானத்தைப் பக்ஷமாக்கி ஸாத்யம் பொருந்தாதென்ற குறை. அஜ்ஞானம் என்ருல் ஜ்ஞானத்தை ஆச்ரயிக்கக்கூடாது. ஜ்ஞானத்தை மறைக்கக்கூடாது. ஜ்ஞேயத்தை மறைக்காவிடில், ஜ்ஞானத்தாலே நிவ்ருத்திக்கக் கூடாது என்று மூன்று கண்டனங்கள்.

ப்ரஹ்மம் அஜ்ஞானுச்ரயமாகில், ஜ்ஞாதாவாக நேரும். அஜ்ஞானத்தால் மூடப்பட்டால் ஜ்ஞேயமாகிவிடும். ஜ்ஞானத்தால் நிவர்த்திக்கக்கூடிய அஜ்ஞானத்திற்கு ஆச்ரயமாகிலும், அது ஜ்ஞான விஷயமாகிவிடும், என்று மூன்று தர்க்கங்கள் ப்ரஹ்மத்தைப் பக்ஷமாகக்கொண்டு கூறப்பட்டன. மேலும் அத்வைதி கூறிய அனுமானத்தில் ஸ்வப்ராக பாவ வ்யதிரிக்த என்ற விசேஷணமும் வஸ்த்வந்தர என்பதில் அந்தர சப்தமும் பயனற்றவையென்று காட்டல்.

## ஓர் விசேஷம்

பூர்வபக்ஷிகள் அஜ்ஞானத்தை பாவ ரூபமென்கின்றனர். நம் சித்தாந்தத்திலும் அபாவங்கள்-பாவாந்தர ரூபங்களே. ஆதலின், அஜ்ஞானம் பாவாந்தர ரூபம்தான். ஆகவே, பாவரூபாஜ்ஞானத்தைக் கண்டிப்பது தவறு என்கிற கேள்வியெழுகிறது. அத்வைதிகள் ஜ்ஞானாபாவாத்மகமான

அஜ்ஞானம் பாவரூபம் என்றல் விரோதமில்லை. அதெப்படியென்றல் நித்தியமான தர்ம பூதஜ்ஞானத்திற்கு ப்ரமாணம் என்று சொல்லத்தக்க விஷயங்களை கிரஹிக்கத் தக்கதோர் நிலையுண்டு. அதைவிட வேறுபட்ட முன்நிலையே ஜ்ஞான ப்ராகபாவம் எனப்படுவது. இது பூர்வ பக்ஷிகளால் ஏற்கப்படாதது. அவர்கள் கூறும் அஜ்ஞானமென்பது ஜ்ஞானப்ராகபாவத்தை விட வேருனதாய் - ஸத் அஸத் என்ற நிர்வசனம் செய்யத்தகாததாய் ஜகத் காரணத்வம், ப்ரஹ்ம திரோதாயகத்வம் ( மறைக்கும் தன்மை ) இவற்றுடன் கூடியதாய் சாதிக்கப்படுகிறது. ஆகையால் அவர்களைக் கண்டிப்பதில் வரோதமோ தவருே ஏதுமில்லை.

## க்யாதி வாதங்கள்

சிப்பியைப் பார்த்து இது வெள்ளியென்று ப்ரமம் உண்டாகிறது. இங்கு அநிர்வசனீயமான வெள்ளியுண்டாகிறது என்று அத்வைதிகள் கூறும் மதம் கண்டிக்கப்படுகிறது. அக்யாதி, அன்யதாக்யாதி, ஆத்மக்யாதி, அஸத் க்யாதி என்னும் பக்ஷங்களில் அன்யதாக்யாதி சிறந்ததென விளக்கல். அக்யாதியோடு கூடின யதார்த்த க்யாதியே ஸ்ரீமந் நாதமுனிகள் உகந்தது. அதற்கு த்ரிவ்ருத்கரணச்ருதி, புராணங்கள் ப்ரமாணங்களாகின்றன. சிப்பியில் வெள்ளியின் அம்சமுண்டென்பதற்கு எடுத்துக்காட்டுக் கூறல். ஸ்வப்னப் பொருள்கள் ஸத்யங்களே என்று காட்டல், சங்கு மஞ்சள் என்றும் செம்பருத்திப் பூவால், ஸ்படிகம் சிகப்பு என்றும், கானல்நீர், கொள்ளிக் கட்டைச் சுழல் (அலாதசக்ரம்) கண்ணுடியில் முகம், திக் ப்ரமம், இவற்றிற்கு ஸத்யத்வத்தை நிலைநாட்டல். கண்களின் ப்ரவ்ருத்தி விரலால் தடைப்பட்டு இரண்டு சந்திரன்கள் என்றபடி இடங்களிரண்டையும் பேத மற்ற சந்திரனையும் கிரஹிக்கிறது, என்கிற யுக்தியால் அக்யாதி கலந்த யதார்த்த க்யாதியை நிறுவுதல், சிப்பியில், வெள்ளி முதலிய எல்லா ப்ரமங்களிலும், பகவானின் விசித்ர சக்தி யோகத்தால் ஸ்ருஷ்டிக்கப்படுதல் என்ற ஒரே நிர்வாஹத்தால் ஸத்யத்வத்தை நிலைநாட்டல். ச்ருதிகளைக் கொண்டு அநிர்வசனீயமான அஜ்ஞானம் ஸித்திக்கிறதென்பதன் கண்டனம். '' அநாதிமத்பரம் ப்ரஹ்ம நஸத் தந் நாஸதுச்யதே '' என்ற கீதை வசனம் எப்படி ஸதஸத் அநிர்வசனீய ஜ்ஞானத்தைக் குறிப்பதில்லையோ, அப்படியே '' நாஸதாஸீத் நோஸதாஸீத் ததானீம் '' என்பது முதலிய ச்ருதியும் ஸதஸத நிர்வசனீயமான அஜ்ஞானத்தைக் கூறுவதில்லையென்று இவையிங்கு காட்டப் படுகின்றன.

'மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத் மாயினம் து மஹேச்வரம்' முதலிய ச்ருதிகளில், மாயா சப்தமும் விசித்ரார்த்த ஸ்ருஷ்டி ஹேதுவான ப்ரதா

னத்தை விளக்குவன. மித்யாஜ்ஞானத்தையன்று. இதிஹாஸ புராணாதிகளிலும் ப்ரஹ்மத்திற்கு அஜ்ஞானம் குறிப்பிடப்படவில்லை. "யதஸ்தி யந்நாஸ்திச" முதலிய ச்லோகங்களும் அஸ்தி, நாஸ்தி, ஸத்யா ஸத்ய பதங்கள் சித்தையும் அசித்தையும் கூறுவன. ஜகத்தின் மித்யாத்வத்தையல்ல. ஜ்ஞானஸ்வரூபோ பகவான், யதாது சுத்தம் முதலிய ச்லோகங்களுக்கு அர்த்தம் கூறல். சிதசித்துக்கள் வாசுதேவ சரீரமாதல்; விநாசமுள்ளவை நாஸ்தி, அஸத்யமெனப்படும். நித்யமான சேதனன் - அஸ்தி, ஸத்யம் என்றெல்லாம் கூறப்படுவதால்.

6. **நிவர்த்தகாநுபபத்தீ :** அத்வைதிகள் நிர்விசேஷ ப்ரஹ்மாத்மைகத்வ விஜ்ஞானம் அவித்யையை நிவ்ருத்தி செய்யும் என்று 'தத் த்வமஸி' 'அயம் ஆத்மா ப்ரஹ்ம' முதலிய ச்ருதிகளால் கூறுகின்றனர். அது தவறு; வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்; "ப்ருதகாத்மானம்" முதலான நூற்றுக்கணக்கான ச்ருதிகளுடன் விரோதம் வருவதால்; தத் த்வமஸி என்கிறவிடத்தில் தத் என்ற பதம் ஸர்வஜ்ஞத்வம் முதலியவை கூடப் பெற்ற ப்ரஹ்மத்தைச் சொல்லுகிறது. த்வம் என்ற பதம் அசித்தோடு கூடின ஜீவனை சரீரமாகவுடைய ப்ரஹ்மத்தைக் கூறுகிறது. இவ்வாறு பொருள் கொண்டால் ஸாமாநாதிகரண்யத்திற்குக் கூறிய லக்ஷணம் பொருந்துவதாகும். அன்றி தத், த்வம் பதங்கள் நிர்விசேஷப்ரஹ்மத்தைக் கூறுவனவென்றால், லக்ஷணையை, ( ஆகு பெயரை ) ஏற்கும் தோஷம் வரும். தொடக்கத்தில் 'தத் ஐக்ஷத' 'பஹுஸ்யாம்', என்று கூறியதோடு முரண்படும். ஒன்றையறிவதாலே ஸர்வத்தையுமறியலாம், என்ற ப்ரதிஜ்ஞைக்கும் முரண்பாடு. ப்ரஹ்மம் தோஷம் மிக்கதென்ற நிலையும் வரும். தத் - த்வம் என்று ப்ரஹ்மத்துக்கு ஜீவத்வத்தைப் போதிக்கிறதென்று சொன்ன பாதார்த்த ஸாமாநாதிகரண்யத்துக்குக் கண்டனம். ஐததாத்ம்யம் இதம் ஸர்வம் என்று ஜகத்துக்கு விதிக்கப்பட்ட ப்ரஹ்மாத்மகத்வத்தை தத் த்வமஸி என்று ச்வேத கேதுவிடம் முடிவுபடுத்துகிறது. தேகத்தைச் சொல்லும் தேவாதி சப்தங்கள் தேஹத்தோடு கூடிய ஜீவனைக் குறிப்பதுபோல் சித் அசித் வாசக சப்தங்கள் - ஜகத்தின் சரீரியான ப்ரஹ்மத்தைக் குறிக்கின்றன. இவ்வர்த்தம் அம்சாதிகரணத்தில் விளக்கப்படுகிறது. பாஸ்கரன் ஔபாதிக பேதாபேதவாதீ. யாதவன் ஸ்வாபாவிக பேதாபேதவாதீ. ஸ்வநிஷ்ட பேத வாதீ தார்க்கிகன்.

இவர்களது மதங்களில் காணும் தவறுகள். வ்யக்திகளிடம் - கோத்வம் முதலான ஜாதிகளும், த்ரவ்யங்களிடம் வெண்மை முதலான குணங்களும், ப்ரகாரமாக விளங்குகின்றன. அதேபோல் தேவாதி தேஹங்கள் ஜீவர்களுக்கு ப்ரகாரங்களாகும். அதுபோலவே, சித் அசிதாத்மகமான இந்த

ஜகத்தும் ப்ரஹ்மத்திற்கு ப்ரகாரமாகும். ஆதலின், ஜகத்தைக் குறிக்கும் சொற்கள் ப்ரஹ்மத்தை முக்ய வ்ருத்தியால் குறிக்கும் என்பதால், எங்கும் ஒரே விதமாக - விட்டுப்பிரிக்கவொண்ணாத ப்ரகாரத்வம் உள்ள இடத்தில், மத்வர்த்தீய விகுதியை (ப்ரத்யயத்தை) அபேக்ஷிக்காமல் ஸாமாநாதி கரண்யம் வரும் என்பதாகும். தண்டீ குண்டலீ என்பது போன்ற இடங்களில் - மனிதனை விட்டுப்பிரிக்கக் கூடிய தண்டம் முதலிய ப்ரகாரங் களுடன் விளக்கவேண்டுமானால் மத்வர்த்தமான ப்ரத்யயம் அபேக்ஷிக்கவே படுகின்றது. விட்டுப்பிரிக்கவொண்ணாத ஜாதி குணாதிகளுக்கோ ஸாமானாதிகரண்யத்திற்காக அந்தகைய ப்ரத்யயங்கள் (விகுதிகள்) தேவையில்லை.

ப்ரளய தசையில் சித் அசித் அனைத்திற்கும் லயம் சொல்லுகையாலே அப்போது அவற்றிற்கும் ப்ரஹ்மத்திற்கும் சரீராத்ம பாவம் இல்லாமையாலே ஸ்வரூப ஐக்கியமே ஸாமாநாதிகரண்யத்திற்கு அடிப்படை என்று ஏற்படும் சந்தேகத்தை நீக்கவே - இதுவரை கூறிய அர்த்தங்களைத் தொகுத்துக் கூறுகிறார். ''அத்ர இதம் தத்துவம்'' எனத் தொடங்கிய வாக்கியங்களால்.

ப்ரஹ்மம் ஜகத்திற்கு உபாதானகாரணம் என்பது வரப்போகும் ஸ்தூலாவஸ்தைக்கு உபயோகியான ஸூக்ஷ்ம சித சித்விசிஷ்ட ஸ்வரூபமான அவஸ்தையையுடைய தன்மை. ப்ரஹ்மத்துக்குக் கார்யத்வம் என்பது ஸ்தூலா வஸ்தமான ஜகத்துக்கு அந்தர்யாமியாயிருந்து நியமிக்கை. புத்தியின் சங்கோசமும் விகாஸமும் (பெருக்கமும் - சுருக்கமும்) என்ற தோஷங்கள் சித் அசித்துக்களில் நிற்பவை. நிர்க்குணம் என்னும் ச்ருதிகள் ஹேய (தீய) குணங்களில்லையென்றும் ஸகுண ச்ருதிகள் - கல்யாண குணங்களை உள்ளனவவாகவும் விளக்குகின்றன. இப்படிக் கூறினாலேயே ஏராளமான ச்ருதிகள் பொருந்தி ரஸமுள்ளவையாகும். சங்கரர் கூறும் பொருள் பல ச்ருதிகளுக்கும் முரணானது. தவறான தர்க்கங்களை ஆதாரமாகக் கொண்டது. இப்படிக் கூறிய பொருளுக்கு வேதத்திலிருந்து எடுத்துக்காட்டுக் கூறி விளக்கம் தரப்படுகிறது.

ஆக்னேய யாகம் என்பது ஒன்று, அக்னீஷோமீய - உபாம் சுயாகங்களிரண்டு - ஐந்த்ரயாகங்களிரண்டு. ஐந்த்ராக்ன யாகம் ஒன்று. ஆக ஆறு யாகங்கள். யதாக்னேயோऽஷ்டாகபால: முதலிய உத்பத்தி வாக்யங்களில் விதிக்கப்படுபவை. ய ஏவம் வித்வான் பூர்ணமாஸீம் யஜதே - ய ஏவம் வித்வான் அமாவாஸ்யாம் யஜதே என்ற இருவாக்கியங் களாலே தர்ச இஷ்டியில் மூன்று யாகம். பௌர்ணமாஸீஷ்டியில் மூன்று யாகம் என்று சொல்லி தர்ச பூர்ணமாஸாப்யாம் ஸ்வர்க்க காமோயஜேத என்கிற வாக்யத்தாலே ஸ்வர்க்கத்திற்கு சாதகமாக விதிக்கப்படுகிறது.

அப்படியே சில ச்ருதிகள் சித் அசித் ஈச்வர தத்வங்களை தனித்தன சொல்கின்றன. சில ச்ருதிகள் சித சித்துக்களைச் சரீரமாக ப்ரஹ்மத்தைச் சரீரியாகவும் சொல்கின்றன. சில ச்ருதிகள் ஸ் ஸூக்ஷ்ம சிதசித் விசிஷ்ட ப்ரஹ்மமே ஜகத் ரூபகார்யமாகவும், உபா காரணமாயும் உள்ளதாகக் கூறுகின்றன என்பது தீர்மானிக்கப்பட்ட பொ

7. **நிவ்ருத்தி – அநுபபத்தி :** ஐக்கிய ஜ்ஞானத்தாலே மித்யைய பந்தத்தின் நிவ்ருத்தி என்று - அவர்கள் கூறுவது பொருந்தாது. ஸம் பந்தம் ஸத்யமானதென்று ப்ரமாணங்களால் சித்தமானது. ஐ ஜ்ஞானத்தால் பந்தம் வளருமேயன்றி அழியாது. பகவானிடம் பக்தியால் பந்தம் நிவ்ருத்தியடையும் என்பது ஏராளமான ச்ருதிகளிலும் சித்தமா ஐக்கிய ஜ்ஞானத்துக்கு ஜ்ஞாதா தனியே கூடாது. ஒரு ஜ்ஞானம், ஜ்ஞ வையும் ஜ்ஞேயமான பொருளையும் கொண்டு மூன்று ரூபமுள்ளதாகும். மூன்றும் அவர்கள் மதத்தில் பொருந்தாதவை. ஆதலின், நம் சித்தாந் சிறந்தது.

ஆகையால், மித்யையான பந்தத்தை நிவ்ருத்தி செ ஜ்ஞானத்திற்கு கர்மாக்களை அபேக்ஷிக்காமையென்னும் வஸ்து ஸாமர்த் அசித்தமாயிருப்பதால் (இல்லாததால்) பகவத் பக்திக்கு அங்கமான கர்மத் விசாரமே ப்ரஹ்ம விசாரத்திற்கு முன் நிகழ்ந்தது (பூர்வ வ்ருத்தம்) என் நிலையாயிற்று.

இவ்வாறு ஸூத்திரத்திற்குப் பிறர் கூறிய பொருளைக் கண்டித்து ஸூத்ரகாரரின் கருத்தைச் சொல்வதற்கு முன் பூர்வ பக்ஷியான மீமாம்ஸக சங்கையை விளக்குகிறார். ஸத்யம், ஜ்ஞானம், அனந்தம் ப்ரஹ்ம மு பதங்கள் ஸித்த வஸ்து ரூபமான ப்ரஹ்மத்தைப் போதிக்கத் திறனுள்ள யல்ல. ஆதலின், கர்மாக்கள் அல்பமாய் நிலையற்ற பலனையுடையவை எண்ணத்துடன், ப்ரஹ்ம ஜ்ஞானமே அநந்தமான ஸ்திர பலனைத்தருவ மேலெழுந்தவாரியான அறிவு என்கிற சிறந்த ஹேதுவே சித்திக்காது என் மீமாம்ஸகரின் பூர்வபக்ஷம்.

## இம் மீமாம்ஸகளின் கூற்றைக் கண்டிக்கிற முறை

சிறு குழந்தைகளுக்கு அப்பா-அம்மா முதலிய சொற்களின் பொ அறிவு ஏற்பட்டிருக்கிறது. உன் மதத்தில் இது பொருந்தாது. மே எல்லாச் சொற்களும் கார்யத்தையே குறிப்பனவாயினும், ப்ரஹ்மத் உபாஸிக்க வேண்டும் என்று உபாஸனத்தால் ஏற்படும் அபூர்வ ரூப கார்யத்திற்குப் பலமான ப்ரஹ்ம ப்ராப்தியை விளக்கும் வேத

வாக்யங்கள் ப்ரமாணமே. மேலும்-ஸித்தமான வஸ்துக்களை விளக்கும் ஆற்றல் என்னும் வ்யுத்பத்தி பதங்களுக்கு இருப்பதால் கார்யபரம் என்று ஏற்றுக் கொண்டாலும்-பலரூபமான ப்ரஹ்மம்பற்றிய எண்ணம் தோன்றுவதால்-கர்மாக்கள் அல்பாஸ்திர பலன்களையுடையன என்று தீர்மானத்துடன், ப்ரஹ்ம ஜ்ஞானமே அனந்த ஸ்திர பலமுடையதென்று எண்ணம் ஏற்படுவதாகிற ஹேது ஸித்திப்பதால் ப்ரஹ்ம விசாரம் ஆரம்பிப்பதில் எந்தவித விரோதமுமில்லை.

சாஸ்த்ரத்தை ஆரம்பிப்பதில் ஸங்கதிகள்; (பொருத்தம்) வேதார்த்த விசாரமானபடியால் ஒரே சாஸ்திரம் என்ற பொருத்தமுள்ளது. வேதாந்தத்தின் அர்த்த விசாரமானதால் ப்ரஹ்ம காண்டத்தில் ஸங்கதியுள்ளது. இதிலுள்ள நான்கு அத்யாயங்களிலும் முறையே, காரணத்வம், அபாத்யத்வம் (பிற ப்ரமாணங்கள் எவற்றாலும் பாதிக்க முடியாத தன்மை) உபாயத்வம், உபேயத்வம் (பலமாய் இருத்தல்) என்றிவை, விளக்கப்படுகின்றன. இரண்டாம் த்விகத்தில் (இரண்டத்யாயங்களில்) ப்ரஹ்மமே தன்னையடையச் சாதனம் என்று கூறப்படுகிறது. இச்சாஸ்திரத்தில் 4 அத்தியாயங்களும் $4 \times 4 = 16$ பாதங்களும் உள்ளன. முதல் நான்கு பாதங்களில் - முறையே ஜீவனுக்கான லிங்கங்கள் மிக அஸ்பஷ்டமாயும், அஸ்பஷ்டமாயும், ஸ்பஷ்டமாயும், மிக ஸ்பஷ்டமாயும் உள்ள வாக்கியங்கள் விசாரிக்கப்படுகின்றன. ஸர்வஜ்ஞத்வம் முதலியவையுள்ள காரணம் ப்ரஹ்மமேயென்று ஸ்தாபிக்கப்படுகிறது. அடுத்தபடி,

| | |
|---|---|
| 5 - ஆவது பாதம் | ஸாங்க்யாதி ஸம்ருதி மூலமான தோஷ பரிஹாரம் காட்டுவது |
| 6 - ஆவது பாதம் | ஸாங்க்யாதி பக்ஷங்களின் கண்டனம் செய்வது |
| 7 - ஆவது பாதம் | ஆகாசாதி த்ரவ்யங்களுக்கு ஸ்வரூப பரிணாம ரூபமான கார்யத்வம் கூறுவது. |
| | ஆத்மாக்களுக்கு ஸ்வபாவ அன்யதாபாவ ரூப கார்யத்வமும் கூறுவது. |
| 8 - ஆவது பாதம் | ஜீவோபகரணமான இந்த்ரியாதிகளின் உத்பத்தி க்ரமம் கூறப்பட்டது. |
| 9 - ஆவது பாதம் | வைராக்ய நிமித்தமாக புருஷனுக்கேற்படும் தோஷங்கள். |
| 10 - ஆவது பாதம் | ப்ராப்யத்தில் ஆசை தோன்ற ப்ரஹ்மத்திற்கு நிர்த்தோஷத்வமும் - கல்யாணகுணாகரத்வமும், |

| | |
|---|---|
| 11 - ஆவது பாதம் | பகவானிடம் செய்யும் பக்தியின் ப்ரகாரங்கள். |
| 12 - ஆவது பாதம் | பக்திக்கு வர்ணாச்ரம தர்மங்களை அங்கங்களாக நிரூபித்தல். |
| 13 - ஆவது பாதம் | உபாஸனாஸ்வரூபமும், அனுஷ்டானக்ரமமும் விளக்கப்படுதல், வித்யா மஹிமையும் கூறல். |
| 14 - ஆவது பாதம் | ஜீவன் உடலைவிட்டுப் புறப்படுதல் - உத்க்ரமணம். |
| 15 - ஆவது பாதம் | ஜீவனின் மோக்ஷ கதி சிந்தனம். |
| 16 - ஆவது பாதம் | ப்ராப்தி - பலம் - மோக்ஷம். |

இவ்வாறு வெவ்வேறு விஷயங்களும் நிரூபிக்கப்பட்டன. இப்படியாகில் இந்த சாஸ்த்ரம் எப்படி ப்ரஹ்மத்தை விசாரிப்பதாகும் என்றால், "ஸ்ரஷ்டா தேஹீ ஸ்வநிஷ்ட: என்று தொடங்கும் ச்லோகத்தால் ஸ்வாமி தேசிகன் ஸர்வலோக ஸ்ரஷ்டாவான எம்பெருமானே 16 குணங்களுடன் இப்பாதங்களால் விளக்கப்படுகிறார் என்றருளிச் செய்கிறார்.

முதல் பாதத்தில் - 1. அதாதோ தர்மஜிஜ்ஞாஸா. 2. ஜன்மாத்யஸ்ய யத: 3. சாஸ்த்ரயோனித்வாத் 4. தத்து ஸமந்வயாத் என்ற 4 சூத்திரங்களும் நான்கு அதிகரணங்கள். இவை முமுக்ஷுவுக்கு சாஸ்த்ரம் ஆரம்பிக்க வேண்டுமென்று வ்யவஸ்தையைச் செய்கின்றன. முதல் இரண்டதிகரணங்கள் ஸித்தரூபமான ப்ரஹ்மத்தில் ப்ரமிதியை உண்டாக்குகின்றன. பின் இரண்டு அதிகரணங்களும், சாஸ்த்ரம், அதனால் ஏற்படும் புத்தியென்ற இரண்டும் வீண் என்ற சங்கையை நீக்குகின்றன.

அதிகரணம் என்பது, விஷயம், சம்சயம், பூர்வபக்ஷம், ஸித்தாந்தம், ப்ரயோஜனம் என்ற ஐந்து பொருட்களையுடையது. அதில், முதல் சூத்திரத்திற்கு ப்ரஹ்ம விசார சாஸ்த்ரம் விஷயம். அது ஆரம்பிக்க வேண்டுவதா இல்லையாயென்று சம்சயம். ஆரம்பிக்க வேண்டாமென்று பூர்வபக்ஷம். ஆரம்பிக்க வேண்டுவதேயென்றும் சித்தாந்தம். சாஸ்த்ரார்த்தத்தை நிர்ணயம் செய்வதே பலன்.

## இவ்வதிகரணத்தின் விஷய வாக்கியம் :

"பரீக்ஷ்ய லோகான் கர்மசிதான் ப்ராஹ்மணோ நிர்வேத மாயாத்" ...... தத்விஜ்ஞானார்த்தம் ஸகுருமேவாபிகச்சேத் என்பது. கர்மாக்களால் பெறப்படும் லோகங்களையெல்லாம் ஆராய்ந்த ப்ராஹ்மணன் அக்கர்மங்களால் அக்ருதனை (செயலுக்கு விஷயமாகாத) எம்பெருமான் பெறப்பட

முடியாதவன் என்று மன நிர்வேதமடைந்து ப்ரஹ்மநிஷ்டனுன ச்ரோத்ரியனே ஆசார்யனுக வரித்து ஸமிதாதிகளைக் கையில் உபஹாரமாகக் கொண்டு அவ்வெம்பெருமானை அறிந்து கொள்வதற்காக நெருங்கிப் பிரார்த்திக்க வேண்டும் என்பதாம். இங்கு ஒருவன் ப்ரஹ்ம விசாரம் செய்வதென்பது அவனது ஆசையாலேயே ஏற்படக் கூடியதாதலின் -கிடைக்காத ஒன்றை விதிக்கும் அபூர்வ விதியாகாது - பின்னென்னெனில், ப்ரஹ்ம விசாரம் செய்ய விரும்புபவன் அதனை ஆசார்ய உபதேச பூர்வகமாகத்தான் செய்யவேண்டும் என்று நியமத்தை விதிப்பதால் நியம விதியெனப்படும்.

## (ஸூ) அதாதோப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா (க)

அத = வேதத்தின் ஒரு பகுதியான கர்ம காண்டார்த்தத்தை விசாரித்த பிறகு : அத=ப்ரஹ்ம ஜ்ஞானமற்றவனின் கர்மங்கள்-அல்பாஸ்திர பலன்களாகையாலும், ப்ரஹ்மஞானம்-அனந்த ஸ்திர பலமாகையாலும், ப்ரஹ்ம விஷயகமான மீமாம்ஸை (விசாரம்) கர்த்தவ்யாஎன்று ஒரு பதம் வருவித்துக்கொண்டு-செய்யப்படவேண்டும் என்று பொருளாம். ப்ரஹ்மம் என்ற சொல்லால் அகிலஹேய ப்ரத்யனீகமாய் (ஒரு தோஷமும் இல்லாத) கல்யாண குணங்களை அபரிமிதமாய் உடையவனுன ச்ரியப்பதியாம் புருஷோத்தமன் சொல்லப்படுகிருன். அந்த ப்ரஹ்மம் விசாரம் செய்யத்தக்கதென்று சூத்திரத்தில் விதிக்கப்படுகிறது.

ஜிஜ்ஞாஸாதிகரணம் முற்றியது

## ஜன்மாத்யதிகரணம் [2]

முன் அதிகரணத்தில் அறிய வேண்டியதெனக் கூறிய ப்ரஹ்மத்திற்கு லக்ஷணம் யாது? என்று வினு எழவே இரண்டாவது சூத்திரம் தோன்றுகிறது.

(ஸூ 2) ஜன்மாத்யஸ்ய யத:

இந்த சூத்திரத்தில் பிரஹ்மத்திற்கு லக்ஷணம் கூறப்படுகிறது. தைத்திரீயோபநிஷத்திலுள்ள, "ப்ருகுர் வை வாருணி:, யதோவா இமாநி பூதானி; தத்விஜிஜ்ஞாஸஸ்வ, தத் ப்ரஹ்ம" முதலிய வாக்யங்கள், இந்த சூத்திரத்திற்கு விஷயம் - உலகில் பிறப்பு முதலியவற்றிற்குக் காரண - மாயிருத்தல்; இது ப்ரஹ்மத்திற்கு லக்ஷணமாயிருக்கலாமா? கூடாதா? என்று சம்சயம். ஸ்ருஷ்டி காரணத்வம், ஸ்திதி காரணத்வம், லய காரணத்வம் என்று விசேஷணங்கள் பலவாயிருப்பதால் விசேஷணங்கள்

பலவாயின் - விசேஷ்யத்தையும், பலவாக்கி விடும் என்ற நியமம் இருப்பதால் ப்ரஹ்மமும் பலவென்று ஏற்க நேரிடும் ஆதலின் - இவை லக்ஷணங்களென்று ஏற்கத் தகாதவை என்று பூர்வபக்ஷம்.

தேவதத்தன் கருப்பானவன், இளைஞன், சிவந்த கண்களையும் ஒத்த உடலமைப்பையும் கொண்டவன், என்று தோற்றத்தில், விசேஷணங்கள் பலவாயிருப்பினும் விசேஷ்யமான தேவதத்தன் ஒருவனுகவேயுள்ளதால்; ப்ரஹ்மமும் ஒன்ருயிருப்பதில் தவறில்லை. ஜன்மாதி, அஸ்ய, யத: என்று சூத்திரம் மூன்று பதங்களையுடையது. அஸ்ய இந்த விசித்திரமான-ஜகத்துக்கு, ஜன்மாதி = ஸ்ருஷ்டி, ஸ்திதி, ப்ரளயங்கள், யத: எந்த பரம புருஷனிடம் இருந்து உண்டாகின்றனவோ - அவனே பரப்ரஹ்மம் என்று சூத்திரப் பொருள். 'யதோ வா இமானி பூதானி ஜாயந்தே' என்ற ச்ருதியின்படி இச் சூத்திரத்தில் உள்ள யத: என்ற பதத்தின் ஐந்தாம் வேற்றுமையை உபாதான காரணம் என்ற பொருளுள்ளதாகக்கொள்ள வேண்டியது. ப்ரஹ்மத்திலே உலகின் படைப்பும், லயமும் கூறுவதால் - உபாதான காரணமும் ப்ரஹ்மமேயென சித்திக்கிறது. ப்ரஹ்ம சப்தத்திற்கு காரணப் பெயராய்க் கொள்கையில் தீய குணங்களற்ற கல்யாண குணங்களின் இருப்பிடம் என்பது பொருளாகவும், இடுகுறியாகக் கொள்கையில் ச்ரிய: பதித்வம் என்பது பொருளாகவும் தேறும். பாஷ்யத்தில் ஜன்மாதி காரணத்வம் விசேஷணம் **என்**றும் உபலக்ஷணம் என்றும் இருவகைகளிலும் பொருந்துமென்று அருளப்படுகிறது.

லக்ஷ்யம் தோன்றுமிடங்கள் அனைத்திலும், விஷயமாகப் தொடர்வது விசேஷணம் என்றும், அவ்வாறு விஷயமாகத் தொடராதது உபலக்ஷணம் என்றும் கூறுவது. இவ்விரண்டும் ஒன்ருெடொன்று முரணுனவை யாதலின், இந்த லக்ஷணத்தில் இவையிரண்டும் எவ்விதம் ஒருங்கே பொருந்தும்? என்று ஐயம் தோன்றலாம்.

**அதற்குப் பரிஹாரம் :** — வித்யைகள் பலவிதமாயிருப்பதால் - ப்ரஹ்மம் ஒன்றேயாயினும், உபாஸ்ய குணபேதத்தாலே உபாஸ்யம் பின்னமாவதாலும் பொருந்தலாம். அதாவது, எல்லா வித்யைகளிலும் - 'காரணமானவன்' 'த்யானிக்கக் தக்கவன்' என்ற விதிப்படி காரணமான ப்ரஹ்மம் (அனுவர்த்திக்கிறது) தொடருகிறது. அப்படியிருந்தாலும் ஸத்வித்யையில் காரணத்வம் முதலியன அறியவேண்டிய ஸ்வரூபமாய் உபாஸன வ்யக்திகள் தோறும் விஷயமாய்த் தோன்றுவதால் விசேஷணமெனல் பொருந்தும். தஹரோபாஸனத்திலோவெனில், விசிஷ்டத்தில் (ப்ரஹமத்தில்) தோற்றமேற் படுகையில் பொருந்தியும், தஹரோபாஸனை ஸம்ருதி ஸந்ததி வேளையில் விஷயமாகத் தோன்ருதபடியாலும் இந்த உபாஸனத்தில் காரணத்வம்

உபலக்ஷணம் எனப்படும். தஹரவித்யையில் அபஹதபாப்மத்வாதிகளே அறியத்தக்க ஆதாரமாகையால் ஸ்ம்ருதி, வ்யக்தி தோறும் தொடர்ந்து விசேஷணமாகின்றன. என்று வித்யை பேதத்தாலே விஷயமும் வெவ்வேறு வதாலே பாஷ்யத்தில் இருவகைகளும் காட்டப்பட்டது பொருந்துவதேயாம். யதோவா இமானி பூதானி என்கிற வாக்யம் சேதந சேதநாத்மகமான ஸமஸ்த வஸ்துக்களுடன்கூடிய ஸ்வரூபத்தை நிரூபிப்பது. ஸத்ய ஜ்ஞானாதி வாக்யம். ஸஜாதீயம் விஜாதீயங்களிலிருந்து வேறுபட்ட ஸ்வரூபத்தை யுடைய ப்ரஹ்மத்தை விளக்குவது. ஆதலால் இரண்டு லக்ஷணவாக்யங் களும் பயனுள்ளவையே !!

உபாதான காரணமாயும் நிமித்த காரணமாயுமுள்ள ப்ரஹ்மமே வேதாந்த வாக்யங்களால் விளக்கப்படுவது என்று கூறுவது பொருந்தாது. ஏனெனில், ப்ரஹ்மம் அநுமானத்தாலேயே சித்திப்பதால்-அவ்வனுமானமே தர்மியான ப்ரஹ்மத்தைப் புரிந்துகொள்ளக்கூடிய ப்ரமாணமாகையால், ப்ரபலமாதலின், வேறு ப்ரமாணங்களால் சாதிக்கமுடியாததையே சாஸ்த்ரம் சாதிப்பதில் பயன் உண்டென்பதால், அநுமான ஸித்தமான ப்ரஹ்மத்தை சாஸ்த்ரம் உபாதான காரணமுமாகுமென்று கூறுவதற்கு ஔசித்யமில்லை. ஆதலின், சாஸ்த்ரம் ஆரம்பிக்கத் தேவையில்லை என்று பூர்வபக்ஷம் தோன்ற, அநுமானத்தைக் கண்டித்து சாஸ்த்ரமே ப்ரமாணம் என்றும் அதனால் ஆரம்பிக்கவேண்டியதேயென்றும் அடுத்தபடி சாதிக்கிறார்.

## (3) சாஸ்த்ர யோனித்வாதி கரணம்.

## (3) (ஸூ ௩) சாஸ்த்ர யோனித்வாத்

பூமி முதலியவை கர்த்தாவைக் கொண்டவை : செய்யப்படும் பொருளாய் இருப்பதால், குடம் முதலியவை போல. செய்யப்படாதவைக்குக் கர்த்தா கிடையாது. ஆத்மாவைப் போல. என்றிவ்வாறு அன்வய கேவல வ்யதிரேகி அநுமானங்களால் ஜகத் காரணமான ப்ரஹ்மம் அறியக் கூடியதா தலின், யதோவா இமானி முதலிய வாக்கியங்கள் ப்ரஹ்மத்தை உள்ளபடி அறிவிக்கமாட்டா என்பது பூர்வபக்ஷம். ஜகத் என்பது கார்யம் (செய்யப்படுவதே) என்றாலும், ஒரே காலத்தில், ஒரே புருஷனாலே சர்வ ஜகத்தும் படைக்கப்பட்டது என்பதில் ப்ரமாணம் இல்லாதபடியால் விச்வாமித்ராதிகளைப் போன்ற ஜீவர்களுக்கே விசித்ர ஸ்ருஷ்டி ஸம்பவிக்கு மாகையால் - ஜீவனை விட்டு வேறான ஸர்ஜ்ஞத்வாதி குணங்கள் கொண்ட ப்ரஹ்மம் அநுமானத்தால் சித்திக்காது அதற்கு சாஸ்த்ரமே ப்ரமாணமாக வேண்டும் என்பது சித்தாந்தம். இந்த சூத்திரத்தின் பொருள்:- சாஸ்த்ரத்தையே ப்ரமாணமாகக் கொண்டது ப்ரஹ்மம். அநுமானாதிகளாலே

உள்ளவாறு அறியவொண்ணுமையாலே - 'யதோவா இமாநி' என்ற வாக்யம் - உபாதானகாரணமாயும் - நிமித்த காரணமாயுமுள்ள ப்ரஹ்மத்தை போதிப்பதால் சாஸ்த்ரமே ப்ரமாணமாகிறது. ஆகவே, ப்ரஹ்மம் சாஸ்த்ர யோனியாகிறது. பிற ப்ரமாணங்கள் போதிக்கா என்பதாம்.

## 4. ஸமன்வயாதிகரணம்.

## 4. (ஸூ) தத்துஸமந்வயாத்

இதன்மேல் ஆக்ஷேபம் தோன்றுகிறது. ப்ரஹ்மம் சாஸ்த்ரத்தால் மட்டுமே அறியக்கூடியதாயிருப்பினும், சப்தம் ஸித்தவஸ்துக்களைப் போதிக்கும் திறனைப் பெற்றிருப்பினும் ப்ரவிருத்தியென்பது - அறியவேண்டுமென்னும் விருப்பத்திற்குக் காரியமாயிருப்பதாலும், அவ்விருப்பமும் ப்ரயோஜனம் பற்றிய ஜ்ஞானத்தைச் சார்ந்ததாதலாலும், அந்த ப்ரயோஜனமும் அதற்கான சாதனங்களை அனுஷ்டிப்பதைச் சார்ந்திருப்பதாலும், சித்த பரமான வாக்யத்திற்கு ப்ரயோஜனமான சுகம், துக்கநிவ்ருத்தி - அவற்றின் சாதனத்தை அனுஷ்டித்தல் இவற்றின் விஷயத்தில் போதனத்தினுல் ப்ரவர்த்தகத்வம் என்பது இல்லாததால் ப்ரயோஜனத்தில் முடிவுபெறுதல் என்பது இல்லை. ஆதலால், வேதாந்த வாக்யங்கள் சித்தமானவஸ்துவைப் போதிக்கும் கருத்துடையவையல்ல என்பது சங்கை. இதனை நீக்கவே ஸமன்வயாதிகரணத்தைத் துவக்குகிருர்.

யாகம் செய்க, களஞ்சத்தைப் புசிக்காதே முதலிய சாஸ்திரங்கள் புருஷனின் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையறிவிப்பதால் அந்தவகை சாஸ்த்திரம் ப்ரமாணம் என்பது பொருத்தமே. அவ்வாறு ப்ரவ்ருத்திக்கும் நிவ்ருத்திக்கும் விஷயமாகாத ப்ரஹ்மத்தை ஸத்ய ஜ்ஞாநுதிவாக்யங்கள் போதிக்கமாட்டா ஆதலின், வேதாந்தார்த்த விசார ரூபமான சாஸ்த்ரம் ஆரம்பிக்கவேண்டியதில்லை என்பது பூர்வபக்ஷம். சொந்தமான வீட்டிற்குள் புதையல் இருக்கிறது என்பது போன்ற வாக்யங்கள் சித்த ரூபமான அர்த்தத்தை விளக்குவதால் ஈடற்ற ஆனந்த ரூபமான ப்ரஹ்மத்தை ஸத்ய ஜ்ஞாநுதி வாக்யங்கள் போதிக்கும் சக்தியுள்ளவையே யாதலின் சாஸ்த்ரம் ஆரம்பித்தல் தக்கதே யென்பது ஸித்தாந்தம். தத் து ஸமன்வயாத் என்று ஸூத்திரம் மூன்று பதங்களைக் கொண்டது. 'து' என்ற சொல் பூர்வ பக்ஷத்தை நிரஸனம் (கண்டனம்) செய்வது. தத் - சாஸ்த்ரத்தையே ப்ரமாணமாகக் கொண்டமை சம்பவிப்பதே. ஸமன்வயாத் - ஸத்யம் ஜ்ஞானம். 'ஆனந்தோ ப்ரஹ்ம' முதலிய வாக்யங்களுக்கு ப்ரயோஜன பூதமான ப்ரஹ்மத்தை ஆனந்த ரூபமாக விளக்கும் தன்மையால் ஸமன்வயம் (பொருத்தம்) ஏற்படுவதால் சாஸ்த்ர யோனித்வம் கூடும் என்பது ஸூத்திரத்தின் பொருள்.

இவ்வாறு நான்கு அதிகரணங்களாலே சாஸ்த்ராரம்பத்தைச் சரியான தேயென்று நிலைநாட்டிப் பின் வரும் அதிகரணம் தொடங்கி, ப்ரஹ்ம விசாரத்தை சூத்ரகாரர் செய்ய முற்படுகிறார்.

## (5) ஈக்ஷத்யதிகரணம்

(5) (ஸூ) **ஈக்ஷதேர் நாசப்தம்** இவ்வதிகரணத்தில் எட்டு சூத்திரங்கள். முன் அதிகரணத்தில் வேதாந்த வாக்யங்களுக்கு ப்ரஹ்மத்தை பரம புருஷார்த்த ரூபமாக விளக்கம் தருபவையென்று ஸமன்வயம் (பொருத்தம்) கூறியது பொருந்தாது. புருஷார்த்தமல்லாத ப்ரதானம் (ப்ரக்ருதி) முதலியவற்றை காரணமாக விளக்குவதால் என்று முற் கூறியதை ஆக்ஷேபித்து இந்த அதிகரணம் தொடங்குகிறது என்பது ஸங்கதி.

சாந்தோக்யத்தில் - ''ச்வேதகேதுர் ஹாருணேய ஆஸ'' எனத் தொடங்கும் ஆறும் அத்யாயத்தில் - ஜகத்காரணமாகக் கூறப்படும் 'ஸத்' என்பது அனுமான ப்ரமாணத்தால் சித்திப்பதும் சாங்கியர்கள் கூறுவதுமான ப்ரதானமா (ப்ரக்ருதி) அல்லது முன் லக்ஷணங்கள் காட்டப்பட்ட பரப்ரஹ்மமா? என்று சம்சயம். ப்ரதானந்தான் என்ற பூர்வபக்ஷம். ஏனெனில், இதம் என்ற சொல்லால் கூறப்படும் - சேதனர்களின் போக்ய மான ஸத்வ ரஜஸ்தமோமயமாயுள்ள ஜகத்துக்கு அதேவிதமான ப்ரதானமே காரணம் என்கை உசிதமானது. ஜகத்தினைவிட விலக்ஷணமான பரமபுருஷன் காரணம் என்பது பொருந்தாது. ப்ரதானம் ஜகத்காரணம் என்பதற்கு அனுமானம் :- இந்த ஜகத்து தன்னைத்தவிர வேறெதையும் அல்லாமல் தன்னையே உபாதான காரணமாகக்கொண்டது. கார்யமாயிருப் பதால் - குடம்போல் என்பதும், இந்த ஜகத்து தன் காரணம் ஒன்றை யறிவதாலேயே முற்றும் அறியப்படுவது - கார்யமாயிருப்பதால் - ஒரே மண்ணுருண்டையால் தொடங்கப்பட்ட குடம்போல என்பதும் ஆகிய இரண்டு அனுமானங்களும் சாதனமானவையென்பது பூர்வபக்ஷம்.

பரமபுருஷனே ஜகத்காரணமென்றும் ஸத்தென்றும் சொல்லப்படும் பரப்ரஹ்மஸ்வரூபம். அவனே சூக்ஷ்மமான சேதனுசேதனங்களுடன் சேர்ந் தவன் என்ற ரூபத்தில் காரணமாலும் ஸ்தூலமான சேதனு சேதனங் களுடன் சேர்ந்தவன் என்ற ரூபத்தில் கார்யமாகிய ஜகத்தின் உருவத்தி லுள்ளவன் என்பதால் கார்யமும். காரணமும் ஒரேவிதமானவையாதலால் பரமபுருஷனே 'ஸத்' எனப்படும் ஜகத் காரணம் என்பது ஸித்தாந்த யுக்தி.

ஸூத்ரப் பொருள்: அசப்தம்-சப்தத்தைமட்டும் ப்ரமாணமாகக்கொள்ளாத அனுமானப்பிரமாண கம்யமான — ப்ரதானம் ந — 'ஸத்' எனப்படும் ஜகத் காரணமன்று. ஏனெனில், ஈக்ஷதே: — தான் பலவிதமாக மாறப்போகிறேன்

என்று ஸங்கல்பித்துக்கொண்டார். ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேய என்று ஸங்கல்பம் அசேதனமான ப்ரதானத்திற்கு பொருந்தாததாதலின், முன் கூறியபடி ஸர்வஜ்ஞத்வம் முதலியவற்றோடு கூடிய பர ப்ரஹ்மமே ஜகத்தின் காரணம் என்பதாம்.

## 6 (ஸூ) கௌணச்சேத் ந ஆத்ம சப்தாத்

தேஜஸ் பார்த்தது - தண்ணீர் பார்த்தது முதலிய வாக்யங்களில் 'ஈக்ஷ' என்ற வினைப்பகுதியால் ஸங்கல்பம் என்பதை **உபசார வழக்காக** (கௌணமாக) கொள்வதுபோல இங்கும் 'ஈக்ஷ' என்ற வினைப் பகுதியின் பொருளை உபசாரவழக்காகக் கொண்டால் ப்ரதானமே காரணமென்பதில் தடையேது மில்லையே. ஈக்ஷணம் என்பது ஸ்ருஷ்டிக்கு முந்தைய நிலையாகிய முக்கிய மல்லாத ஈக்ஷணத்தைச் சொல்வது என்றால் (கௌணச்சேத்) ந-அங்ஙனமில்லை ஏனெனில், ஆத்மசப்தாத் - ஐததாத்ம்யம் இதம் ஸர்வம், தத் ஸத்யம் ஸ ஆத்மா என்று-சேதன சேதன ரூபமான ஸர்வ ஜகத்துக்கும் ஸத் என்பதே ஆத்மா என்பதால் ப்ரதானம் ஸர்வ ஜகத்திற்கும் அந்தர்யாமியான ஆத்மாவாயிருத்தல் பொருந்தாது என்பது கருத்து.

## 7 (ஸூ) தந்நிஷ்டஸ்ய ச மோக்ஷோபதேசாத்

தந்நிஷ்டஸ்ய ச - ஸத்தே என் ஆத்மா என்றது ஸந்திக்கும் புருஷனுக்கு (உடலை விட்டதும்) மோக்ஷோபதேசாத் - ப்ரஹ்மத்தையடைத லென்கிற மோக்ஷத்தை உபதேசிப்பதால் அசேதநமான ப்ரதானம் - காரணமானால் - காரணமே த்யானிக்கப்படுவதால் - எதை உபாஸிக்கிறானோ அதுவே பலமாகிறது என்ற (தத்க்ரது) ந்யாயப்படி மூவகை தாபங்களுக்கும் காரணமான அசேதனத்தையடைதலே (ஸம்பத்தியே) மோக்ஷமென்றதாகும். ப்ரதானத்தைக் காரணமெனக் கூறும் சாங்க்யர்களும் இதனையேற்பதில்லையே யென்று கருத்து.

## 8 (ஸூ) ஹேயத்வாவசனாச்ச

ப்ரதானமே 'ஸத்' எனும் ஜகத்காரணமாகில் – மோக்ஷம் விரும்புபவ ச்வேத கேதுவிற்கு தன்னை ப்ரதானாத்மகன் என்று உபாஸிப்பது - மோக்ஷ விரோதியாதலின், அது விலக்கத்தக்கது என்று உபதேசித்திருக்கவேண்டும். அவ்வாறு உபதேசிக்காமையாலும் ப்ரதானம் காரணமன்று.

## 9 (ஸூ) ப்ரதிஜ்ஞா விரோதாத்

ப்ரதானம் காரணமெனில், செய்த ப்ரதிஜ்ஞையையும் விரோதிக்கும் அதாவது முதலில் யேநாச்ருதம் ச்ருதம்பவதி என்று காரணத்தையறிந்தால் கார்யங்கள் அனைத்தும் அறியப்பட்டுவிடும் என்று ப்ரதிக்ஞை செய்யப்பட்டது.

'ஸத்' என்பது பரப்ரஹ்மம் என்று ஏற்றாலே இந்த ப்ரதிஜ்ஞை பொருந்தும். ப்ரதானம் 'ஸத்' என்ற சொல்லின் பொருளென்றால் அவ்வசேதனம் சேதனத்திற்குக் காரணமாகமாட்டாது என்பதால் ஜகத்தனைத்தையும் அறியலாம் என்ற ப்ரதிஜ்ஞை பொருந்தாததாகும்.

## 10 (ஸூ) ஸ்வாப்யயாத்

இதனாலும் ப்ரதானம் காரணமன்று : ஸதாஸோம்யததா ஸம்பன்னோ பவதி - ஸ்வமபீதோபவதி முதலிய வாக்கியங்களில் ஸுஷுப்தி தசையில் ஜீவன் ஸத்திலே லயித்திருப்பதாகக் காண்கிறது. ப்ரளயமென்பது கார்யப் பொருள் காரணத்திலே லயம் அடைதல் - ப்ரதானம் ஜீவனுக்குக் காரணமாகாது. எங்கு இந்த ஜீவன் உறங்குகிறானோ எனுமிடத்தில் புருஷ என்ற சொல் விழித்திருக்கும் ஜீவனைச் சரீரமாகக் கொண்ட ப்ரஹ்மத்தைக் குறிப்பிடுகிறது. அந்த பிரஹ்மம் ஸுஷுப்தி காலத்தில் மனுஷ்யாதி நாம ரூப ஸம்பந்தத்தை விட்டு வெறும் 'ஸத்' என்ற சொல்லின் பொருளாகிறது என்பதாம்.

## 11 (ஸூ) கதி ஸாமான்யாத்

ஸ்ருஷ்டிக்கு முன் இந்த ஆத்மா ஒன்றேயிருந்தது : அந்த ஆத்மாவிடமிருந்து ஆகாசம் தோன்றியது : ஒரே நாராயணன்தானிருந்தான் முதலிய உபநிஷத் வாக்யங்களுக்கு எந்த கதியோ - ந்யாயமோ - அதே கதி முன்பு ஸத் ஒன்றேயிருந்தது முதலிய வாக்கியங்கட்கும் ஸமானம். ஆதலின், அவற்றில் பரமபுருஷனே ஜகத்காரணம் என்று நிச்சயிக்கப்பட்டிருப்பதால் பரமபுருஷனே 'ஸத்' என்ற சொல்லின் பொருளாம்.

## 12 (ஸூ) ச்ருதத்வாச்ச

இந்த ஸத்வித்யையிலும் 'ஸத்' என்பதே ஆத்மா என்ற பெயருடன் நாம ரூபங்களை ஏற்படுத்தியதென்றும் - சர்வஜ்ஞன், பாபங்கள் ஒட்டாதவன் என்று இவ்வாறு பல கல்யாண குணங்கள் இந்த ஜீவாத்மாவுடன் அனுப்ரவேசம் செய்து நாம ரூபங்களை விளக்குகிறேன். இந்த எல்லா ப்ரஜைகளும் ஸத்தை காரணமாகக் கொண்டவை : பாப சம்பந்தமற்றவன் ஜராமரணாதிகள் அற்றவன் முதலிய வாக்கியங்களில் பொருத்தமாகக் கூறப்படுபவன் - ஸத் எனப்படும் ஸகல ஜகத் காரணமான பரமபுருஷனே என்று சித்தாந்தம்.

இவ்வதிகரணத்தில் — பாரமார்த்திகமான முக்கியப் பொருள்கொண்ட ஈக்ஷணம் (ஸங்கல்பம்) முதலிய கல்யாண குணங்களைக்கொண்ட பரம்

பொருளே மோக்ஷத்தை விரும்புவோர் அறியவேண்டும் பர ப்ரஹ்மம் அதுவே ஸத் என்று ஸ்தாபிப்பதால் நிர்குணமாய்— நிர்விசேஷமாயுள்ளதே ப்ரஹ்மம் என்ற பிறர் மதம் கண்டிக்கப்பட்டதாகிறது.

## 6 ஆநந்தமயாதிகரணம்
## 13 (ஸூ) ஆநந்தமயோzப்யாஸாத்

இவ்வாறு மோக்ஷம் விரும்புபவன் அறிய வேண்டிய ப்ரஹ்மத்துக்கு முக்யமான ஈக்ஷணம் (ஸங்கல்பம்) இல்லாத அசேதனத்தைவிட வேறுபாடு கூறப்பட்டது. இவ்வதிகரணத்தில் முக்கியமான ஈக்ஷணம் ஸத்துக்குவேண்டும் என்றுல்—அத்தகைய ஈக்ஷணத்திற்குத் தகுதியுள்ள ஜீவனே ஸத் என்றும் காரணமாகட்டும்—அல்லது—ஸத்வித்யையில் 'அனேன ஜீவேன ஆத்மனா' என்றும், 'தத் த்வம் அஸி' என்றும் ஸாமாநாதிகரண்யத்தாலே (விசேஷண விசேஷ்ய பாவத்தால்) ஜீவப்ரஹ்மங்களுக்கு ஐக்யம் சொல்வதாலும் (விசேஷண விசேஷ்ய பாவத்தால்) ஜீவப்ரஹ்மங்களுக்கு ஐக்கியம் சொல்லுவதாலும் பத்தன்—முக்தா என்ற இரு நிலைகளையுமுடைய ஜீவனே காரணமாகட்டும் என்று சங்கித்து ஸத் எனப்படும் ப்ரஹ்மத்துக்கு ஜீவனைக் காட்டிலும் வேறுபாட்டை நிறுவுகிருர், என்பதே அதிகரண ஸங்கதி (பொருத்தம்).

தைத்திரீயத்தில் ஸவா ஏஷ புருஷ: அன்னரஸமய: 'என்று தொடங்கி, ''தஸ்மாத்வா ஏதஸ்மாத் . ... ………… ஆனந்த மய:'' என்பதுவரை விஷயவாக்யம். ஆனந்தமயம் என்பது பத்தனும் முக்தனுமல்லாத பரமாத்மாவா அல்லது ஜீவனு? என்று சம்சயம்—ஜீவனே என்று சாங்கியன் பூர்வபக்ஷம் செய்கிருன். '' ஏஷ ஏவ சாரீர ஆத்மா '' என்று ஆனந்தமயனை சாரீரமென்பதாலும், 'தத் த்வமஸி' என்பதாக ஸாமாநாதிகரண்யத்தால் ஜீவப்ரஹ்மங்களுக்கு ஐக்கியம் தோன்றுவதாலும், ஜீவனேயென்பது பூர்வபக்ஷம். சாரீரத்வம் என்னும் சரீர சம்பந்தம் ஜீவனுக்கே பொருந்தும்.

இவ்வாறு கூறிய ஸாங்க்யனை ப்ரஹ்மத்திற்கு அஞ்ஞானம் கூறும் சங்கரர் எதிர்க்கிருர். 'நநுச ப்ரஹ்ம புச்சம் ப்ரதிஷ்டா' எனத்தொடங்கி அவரைக் கண்டிக்கிருன் ஸாங்க்யன். அந்த ஸாங்கியனையும் 'நைவம்' எனத்தொடங்கி ஸித்தாந்தி கண்டிக்கிருர்.

### (ஸூ) "ஆநந்தமயோ ப்யாஸாத்"

ஆனந்தமயன் என்பவன் பரமாத்மா: அப்யாஸாத்-''ஸைஷாநந்தஸ்ய மீமாம்ஸாபவதி'' என்று தொடங்கி, 'யதோ வாசோ நிவர்த்தந்தே' என்று மனுஷ்யனின் ஆநந்தத்தில் தொடங்கி, நூறு நூறு மடங்கு உயர்ந்ததாய் எல்லையில்லாததாய் திருப்பித் திருப்பிக் கூறப்படும் ஆநந்தம் ஸ்வல்ப ஸுகத்தைப் பெறும் ஜீவனுக்கு ஸம்பவிக்காதது. ஆதலின், பரம புருஷனே

ஆனந்தமயனென்பது ஸித்தாந்தம். இந்த அதிகரணத்தில் பூர்வ பக்ஷ ஹேதுக்கள் இரண்டு :- தத்-த்வம் அஸி என்றும் ஸாமாநாதிகரண்யமும், சாரீரத்வமும், தத்-த்வம் என்ற சொற்களுக்கு நிர்விசேஷமே பொருள் என்றால் ப்ரகரணத்தின் விரோதமும், இரண்டு பதங்களின் பர்யாலோசனை யுடன்-ஸாமாநாதிகரண்யம் பற்றி ஆலோசியாமையும் குற்றமாகின்றன. பிறகு ஸாமாநாதிகரண்யம் என்பதற்கு வையாகரணர் கூறிய இலக்கணத்தை (வெவ்வேறு பொருளுள்ள பதங்கள் ஒரே பொருளை விளக்கும் நிலை என்றபடி) விசிஷ்டமான அர்த்தத்தைக் காட்டுவதாக சமர்த்திக்கின்றார். அந்த லக்ஷணமாவது-பின்னப்ரவ்ருத்தி நிமித்தானாம் சப்தானாம் ஏகஸ்மின்னர்த்தே வ்ருத்தி: என்பது - அதாவது - ப்ரவ்ருத்தியென்றால் ஒரு சொல் இந்த அர்த்தத்தைப் போதிக்கும் என்ற நியதி - சிறப்பாக விசேஷ்யமான சொல்லின் பொருளையே விசேஷணமும் போதிக்கைதான் ப்ரவ்ருத்தி. அதற்கு நிமித்தம் - த்வாரம் - விசேஷமான ஜாதி (இனம்) குணம் முதலியன. அவற்றைக் குறிப்பிடும் சொற்கள் ஒரே விசேஷ்யமான அர்த்தத்தை, வ்ருத்தி - போதித்தல். ஆகவே, வெவ்வேறு விசேஷணங்களான சொற்கள் அவ்விசேஷணப் பொருட்கள் சார்ந்துள்ள ஒரே விசேஷ்யத்தைக் குறிப்பிடும் நிலையே ஸாமாநாதிகரண்யமெனப்படும். இந்த ஸாமாநாதிகரண்யம் நிர்விசேஷத்தைப் போதிக்கமாட்டாதென்று கண்டித்ததுடன் தன் மதத்தில் - மீமாம்ஸகர் கூறும் அருணாதிகரண ந்யாயம் பொருத்தமாய் இருப்பதையும், அவ்வதிகரணத்திற்கு நிரீச்வர மீமாம்ஸகன் அர்த்தத்தைக் கண்டித்து, நம் மதப்படியான பூர்வபக்ஷ ஸித்தாந்தங்களையும், கூறியருளுதல்: பின்னர் தத், த்வம் என்ற இரு சொற்களுக்கும் விசிஷ்டார்த்தமே பொருளென நிறுவி ஜாதி (இனம்) குணம் இவற்றைக் குறிக்கும் சொற்கள் - கோ (பசு) முதலியவை, குறிப்பிட்ட வ்யக்தியை (பொருளை) விளக்குமாற்றல் பெற்றிருப்பதுபோலவே, சரீரத்தைக் கூறும் சொற்களும் சரீரியான ஆத்மா வரை பொருளைக் காட்டுபவையெனக் காட்டல். இவ்வாறு 'ஸாமாநாதிகரண்யம்' என்று ஹேதுவைக் கண்டித்துப்பின் சாரீரத்வம் (சரீர ஸம்பந்தம்) என்கிற ஹேதுவையும் கண்டிக்கிறார். பரமபுருஷனே - 'தஸ்யைஷ ஏவ சாரீர அத்மா' என்றும் ச்ருதி வாக்யப்படி சாரீரம் எனப் படுபவன் ஆதலின், அவனே ஆநந்தமயம் என்பதாம்.

## 14 [ஸூ] விகார சப்தாத் நேதிசேத் நப்ராசுர்யாத்

ஆனந்தமய: என்பதில் மய என்ற விகுதி புலப்படுவதால், விகாரம் என்ற பொருளில் அவ்விகுதியுள்ளமையின், நிர்விகாரமான ப்ரஹ்மத்தை ஆனந்தமயம் என்ற சொல் பொருந்தாது. இயற்கையாய் ஆனந்தரூபமான ஜீவனுக்கு சுகதுக்கங்களுக்குக் காரணமாக ஸம்ஸார நிலை விகாரமாதலின்

ஆனந்தமயன் என்பது ஜீவனே - பரமபுருஷன் ஆனந்தமயனல்லன், என்றுல் இதி சேந்ந - இவ்வாறு கூறுவது பொருந்தாது - ப்ராசுர்யாத் - யஜ்ஞும் அன்னமயம்: யாத்திரை முழுவதும் வண்டிமயம் என்பதுபோல ப்ராசுர்யம் மிகுதியென்ற பொருளிலும் 'மயட்' என்ற விகுதி பயன்படுத்தப்படுவதால்- நிகரற்ற ஆனந்தம் நிறைந்தவனுன பரமபுருஷனே ஆநந்தமயன் ஆவான். ஆனுல், ஆனந்தம் ப்ரசுரம் (மிகுதி) என்றுல் துக்கமும் ஸ்வல்பம் உண்டு என்று பொருளாகுமே-அப்போது ப்ரஹ்மம் துக்கமும் கலந்ததென்னலாகாதா? என்றுல், அஃதப்படியன்று-கிரணங்கள் மிகுந்தவன் கதிரவன் என்றுல், இருளும் சிறிது கலந்தவன் என்ற பொருள் எப்படி பொருந்தாதோ அப்படியே, அபஹதபாப்மா, விஜர: முதலிய வாக்கியங்களால் துக்கம் அல்பமும்- ப்ரஹ்மத்திடம் ஒட்டாதென்பது கருத்து.

## 15 [௧௫] தத் ஹேது வ்யபதேசாச்ச

"ஏஷஹ்யேவாநந்தயாதி" என்று ஜீவர்களின் ஆனந்தத்திற்குப் பரமாத்மாவே காரணமானவன் என்று கூறுவதால், ஆநந்தமடையும் ஜீவனை விட ஆனந்தத்தில் காரணமான பரமாத்மா வேருனவன் என்று தேறுகிறது.

## 16 [௧௬] மாந்த்ரவர்ணிகமேவ ச கீயதே

"ஸத்யம் ஜ்ஞானம் அனந்தம் ப்ரஹ்மா என்று மந்த்ர வர்ணங்களிலே கூறப்படும் ப்ரஹ்மமே ஆனந்தமயம் என்று கூறப்படுகிறது." ப்ரஹ்மவித் பரமாத்மாவையடைகிருன் என்று ப்ராஹ்மண வாக்யத்தில் ஜீவனுக்கு ப்ரஹ்மமே ப்ராப்யம் (அடையப்படும் பொருள்) என்று கூறி, அந்த ப்ரஹ்மத்தையே "ததேஷாப்யுக்தா" முதலிய ப்ராஹ்மணம், மந்த்ரவர்ணம் எனும் வாக்கியங்களாலே சொல்லி, அந்த ப்ரஹ்மமே ஆனந்தமயனென்று சொல்வதால் ஜீவனில் வேறுபட்டவன் என்று உறுதியாகிறது. இவ்வாறு ப்ரஹ்மத்துக்கு பத்தனான ஜீவனில் பேதத்தைக் கூறி மேல் முக்த ஜீவனில் பேதத்தைக் காட்டுகிருர்.

## 17 [௧௭] நேதரோ நுபபத்தே:

இதர: பரமாத்மாவின் வேறுபட்ட முக்தாத்மாவும், ந-மந்த்ர வர்ணத்தால் கூறப்படுபவனல்லன். அநுபபத்தே:- ஸோZச்னுதே ஸர்வான் காமான் என்று கூறப்படும் - இயற்கையான விப்ச்சித்த்வம். அதாவது இயற்கையான ஸத்ய ஸங்கல்பத்வம் - முக்தனுக்குக்கூடாதாதலின் - ஸோZ காமாயத பஹுஸ்யாம் ப்ரஜாயேய என்று குறிப்பிடப்படும் விபச்சித் த்வம் முந்தைய நிலையில் ஸம்ஸாரியாய் இருந்த முக்தனுக்கும் பொருந்தாதது என்பது கருத்து.

## 18. (ஸூ) பேதவ்யபதேசாச்ச

"தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மன ஆகாசஸ் ஸம்பூத:" என்றது முதலிய வாக்கியங்களாலே அன்னமயம், ப்ராணமயம், மனோமயங்களைக் காட்டிலும் வேறான விஜ்ஞானமயமான ஜீவனையும் காட்டிலும் வேறுபட்டவனாக "அன்யோந்தர ஆத்மா ஆனந்தமய:" என்று பரமாத்மாவுக்கு பேதத்தைக் கூறுவதால் மந்த்ரவர்ணத்தில் கூறப்படும் ஆனந்தமயன் ஜீவனல்லன் எனத் தெளிவாகிறது.

## 19. (ஸூ) காமாச்ச நாநுமானாபேக்ஷா

காமாச்ச - பஹூஸ்யாம் என்று அருளிய ஸங்கல்பத்தாலேதான் விசித்ரமான ஜகத்தின் ஸ்ருஷ்டி சொல்லப்படுகிறது. அதற்கு அனுமானாபேக்ஷாந - ப்ரதானத்தின் அபேக்ஷையில்லை. சதுர்முகாதிகளுக்கு சரீர நிலையையடைந்த ப்ரதானத்தின் சேர்க்கை தேவைப்படுவதுபோல் பரமாத்மா ஸங்கல்பத்தால் ஸ்ருஷ்டிப்பதற்குப் ப்ரதானத்தின் தேவையில்லை. ஆதலால், ஆனந்தமயன் என்பது ஜீவனின் வேறானவனே.

## 20. (ஸூ) அஸ்மின் அஸ்யச தத்யோகம் சாஸ்தி

இவ்வாறு ஆனந்தமயன் - முக்தனுக்குக் கிட்டியவுடன், தத்யோகம் - அவ்வானந்தத்துடன் ஸம்பந்தத்தை, சாஸ்தி - சாஸ்த்ரம் கூறுகிறது. சாஸ்த்ரமாவது - ரஸோவை ஸ: ரஸம் ஹ்யேவாயம் லப்த்வானந்தீபவதி என்பது. ஆகையால் - பத்த முக்தவிலக்ஷணனான பரமபுருஷனே ஆனந்தமயனென்பதாம். முன், தத் ஹேது வ்யபதேசாத் என்ற சூத்திரம். உபாஸன தசையில் ஆனந்தப்படுத்துகிறான் என்பதைக் கூறியது. இந்த ஸூத்ரமோ முக்தி தசையில் ஆனந்தப்படுத்துகிறான் என்பதைக் கூறுகிறது. ஆதலின் பௌனருக்த்யம் (கூறியது கூறல்) என்ற தோஷம் இல்லை.

## [7] அந்தரதிகரணம் [1-1-7]

## 21. [ஸூ] அந்தஸ் தத்தர்மோப தேசாத்

ஸங்கதி: ஸ்வல்ப புண்யர்களான ஜீவர்களால் ஸங்கல்ப மாத்ரத்தைக் கொண்டு ஜகத்தின் ஸ்ருஷ்டியும், மிகுந்த ஆனந்தமும், பயாபயஹேதுத்வமும் பெறமுடியாமல் போகலாம். ஆயினும், விலக்ஷணமான புண்யங் கொண்ட ஆதித்யன், இந்திரன், ப்ரஜாபதி முதலியோர்க்கு இந்த குணங்கள் சம்பவிக்கலாமேயென்று சங்கையை இங்கு நீக்குகிறார்.

மேலும், இவ்வதிகரணத்தில் அந்தர்யாமி என்ற தன்மையால் மட்டும் சரீராத்ம பாவம் சொல்லப்படவில்லை. பின் என்னெனில், பாணிபாத அக்ஷி கேசாதிகளான பிரிவுகள்போல் சரீர சம்பந்தமுள்ள புருஷன் கூறப்படுகிறுன். அந்த புருஷன் ஜீவன்தானென்று பூர்வபக்ஷம் தோன்றுவதே இங்கு ஸங்கதி. காரணவாக்யங்கள் பரமாத்ம போதகங்கள் என்று ஸ்தாபிப்பதே இவ்விடம் ப்ரஸக்தம். காரணவாக்யமில்லாத அந்தராதித்ய வித்யா நிரூபணம் அயுக்தமே. ஆயினும், முன் அதிகரணத்தின் சேஷமாக நிரூபிப்பதில் தவறில்லை. எப்படியெனில், ஆனந்தவல்லியில் ஸயச்சாயம் புருஷே யச்சாஸாவாதித்யே - ஸ ஏக: என்று ஆனந்தமயனுக்கு ஆதித்ய மண்டலத்தின் உள் இருப்பு கூறப்பட்டது. சாந்தோக்யத்தில், சொன்ன ஆதித்யாந்தர் வர்த்தியான புருஷனுக்கு கரசரணுதி விசிஷ்ட தேஹஸம்பந்தம் சொல்லுகையாலே இரண்டு இடங்களிலும் ஒருவனே பேசப்படுபவன். ஆகையால், ஆனந்தமயனும் ஜீவன்தானென்கிற சங்கையை நிவர்த்திக்க முன் அதிகரணத்தின் சேஷமாக இங்கு நிரூபிக்கிருர் என்று விடை.

அதற்கு சேஷமாவது அங்கங்கு தேவையான பொருளே விளக்குதல். அப்படியென்ருல் வெவ்வேறு அதிகரணங்கள் என்று எவ்வாறு பேதம் கூற முடியும்? — எனில் கூறிய நியாயயத்திற்கு விஷயமான உபநிஷத்து மாறுபட்டதால் பேதம் எனல் பொருந்தும்.

சாந்தோக்யத்தில் முதலத்யாயத்தில் ஆரும் காண்டத்தில் 'ய ஏஷோ ऽந்தராதித்யே புருஷோ ஹிரண்மய: த்ருச்யதே என்பது முதலிய வாக்கியம் இங்கு விஷயம். ய ஏஷோ ऽந்தரக்ஷிணிபுருஷோ த்ருச்யதே முதலிய வாக்யமும் விஷயம். கண்ணிலும், சூர்ய மண்டலத்திலும் இருக்கும் புருஷன் மிகுந்த புண்யங்களால் ஐச்வர்யம் மிக்க ஆதித்யாதி ஜீவனு? அன்றி பரமாத்மாவா? என்று சம்சயம். ஆதித்யன் போன்ற ஜீவ விசேஷமேயென பூர்வபக்ஷம். ஏனெனில், தங்கமயமான மீசை, கேசம் முதலியவற்ருல் சுக துக்காதி ஹேதுவான சரீர சம்பந்தம் சொல்வதால், ப்ரஹ்மா முதலிய தேவர்களில் ஒரு ஜீவன் மிகுந்த புண்யங்களையுடையவனுய் ஒவ்வோர் கல்ப காலத்திலும் ஜகத்தை ஸ்ருஷ்டித்தல் முதலியவற்றைச் செய்கிறுன் என்பது பூர்வபக்ஷம். அதைக் கண்டிக்கிருர்.

## ( ஸூ ) அந்தஸ் தத்தர்மோபதேசாத்

அந்த:- கண்ணினுள்ளும் - சூர்யமண்டலத்தினுள்ளும் இருப்பவனுகச் சொல்லப்படும் புருஷன் ஜீவனைக் காட்டிலும் இதரனை பரமாத்மாவே எப்படியென்ருல் - தத்தர்மோபதேசாத் - ச்ருத்யந்தரங்களில் பிரசித்தங்களான

பரமாத்ம தர்மங்களை உபதேசிப்பதால். அவையாவன:- ஸர்வபாபங்களி-லிருந்தும் விலகியுள்ளவன். மூப்பும், மரணமுமற்றவன். சோகம் அற்றவன் பசி தாகமற்றவன், ஸத்யகாம, சத்திய சங்கல்பம் முதலியனவும், ஸர்வ லோக ஸர்வ காம நியந்த்ருத்வமும், புண்டரீகாக்ஷத்வமும் செந்தாமரைக்கண் திவ்ய மங்கள விக்ரஹம் முதலிய தர்மங்களும் உபதேசிக்கப்படுகின்றன ஆதலின், ஜீவ விலக்ஷணனை ச்ரியப்பதியே ஆதித்ய மண்டலத்தில் ஒளிரும் புருஷன். இந்தச்ருதியில் கூறும் சரீரம் கர்மநிமித்தமானதன்று அது ஹேயமாகும். முமுக்ஷுக்களுக்கு ஹேய நிவ்ருத்தமான - திவ்ய மங்கள விக்ரஹமென்பதாம். யதோவா இமானி பூதானி ஜாயந்தே, ஸத்யம் ஜ்ஞான மனந்தம் ப்ரஹ்ம, முதலிய ப்ரமாண பலத்தாலே ஸத்யத்வ, ஜ்ஞானத் வாதிகள் சித்திப்பது போல, வித்யுத: புருஷாததி, ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத்; அஜாயமானோ பஹுதா விஜாயதே, அஜோபிஸன்னவ்ய யாத்மா, ஸம்பவாம்யாத்ம மாயயா முதலிய ப்ரமாணங்களாலே ஆச்ரிதர்-களை அனுக்ரஹிப்பதற்காக திவ்ய மங்கள விக்ரஹவத்வ ரூபமான தர்மமும் தத்தர்மோபதேசாத் என்கிற பதத்தில் கருதப்படுகிறது என்பது திருவுள்ளம்

## 22 (ஸூ) பேதவ்யபதேசாச்சான்ய:

அபஹத பாபனான இப்பரமாத்மா - அன்ய:- ஆதித்யாதி ஜீவர்களைக் காட்டிலும் வேறானவன்-பேதவ்யபதேசாச்ச-ய ஆதித்யேதிஷ்டன்யமாதித்யோ நவேத, யஸ்யாதித்யச் சரீரம்ய ஆதித்ய மந்தரோ யமயதி, ய ஆத்மனி திஷ்டன் யஸ்யாக்ஷரம் சரீரம், யஸ்ய ம்ருத்யுச் சரீரம் - என்று இப்படியாக ஹிரண்யகர்ப்பன் முதலிய ஸகல ஜீவர்களையும் சரீரமாகக் காட்டி - நாராயணனை அந்தராத்மாவாக பேதப்படுத்திக் காட்டுவதால் ஜீவனைக் காட்டிலும் பரமாத்மா அன்யன் தானென்பதாம்.

இப்படி ' யதோவா இமானி பூதானி ஜாயந்தே ' என்கிற வாக்யத்தால் ஜகத்தின் காரணம் ப்ரஹ்மமெனப்பட்டது. அத்தகைய ப்ரஹ்மம் எது என்று ஐயம் எழுந்தால், ஸதேவ ஸோம்யேதம் அக்ர ஆஸீத் - ஆத்மாவா இதமேக ஏவாக்ர ஆஸீத், முதலிய வாக்கியங்களாலே ஸாமான்யங்களான ஸத் ப்ரஹ்மாதி சப்தங்களாலே - ஸத் ப்ரஹ்மாதிகள் காரணங்களென்று குறிப்பிடப்பட்டன.

அடுத்து, ச்ருதி லிங்க வாக்ய ப்ரகரண ஸ்தான ஸமாக்யைகளில் முந்தையது பிந்தையதைவிட பலம் மிக்கதென்றபடி லிங்கத்தைவிட ச்ருதி பலம் மிக்கதென்றாலும், விசேஷமான லிங்கத்தைக் காட்டிலும் ச்ருதி துர்ப்பலையாதலின், விசேஷ லிங்கங்கள் ப்ரதானாதிகளை விலக்குவனவாய் ப்ரபலமாயிருப்பதால், ஈக்ஷத்யதிகரணத்தில் முக்கியமான ஈக்ஷணமும்,

ஆனந்தமயாதிகரணத்தில் ஆநந்த விசேஷமும், அந்தராதித்ய வித்யையில், திவ்யமங்களவிக்ரஹமும் ஆகிய அர்த்தஸ்வபாவமான (லிங்கங்களாலே) அடையாளங்களாலே ப்ரஹ்மத்துக்கு ப்ரதானம், ஜீவாத்மா இரண்டிலிருந்தும் பேதம் தீர்மானிக்கப்பட்டது. அப்படியிருப்பினும், முன் கூறியபடி ஸாமான்ய ச்ருதியை யபேக்ஷித்து விசேஷ லிங்கத்திற்கு ப்ரபலத்தன்மையிருந்தாலும், விசேஷ ச்ருதிக்கு விசேஷ லிங்கத்தைவிட ப்ராபல்யமிருப்பதால், ஸர்வாணி ஹவா இமானி பூதானி ஆகாசா தேவ ஸமுத்பத்யந்தே' என்பது போன்ற இடங்களில் ஆகாசம் முதலிய விசேஷ சப்தங்களாலே சொல்லப் பட்ட ப்ரஸித்தமான ஆகாசம், ப்ராணன் முதலியவையே காரண ப்ரஹ்மம் என்கிற சங்கையை நீக்கி கல்பிக்கப்பட்டயோகம் (காரணப்பெயர்) கல்பிக்க வேண்டிய ரூடியை (இடுகுறிப்பெயரை) பாதிக்கும் என்றும் நியாயப்படி யோகசக்தி கொண்டு (காரணத்தை அடிப்படையாய்க் கொண்டு) ஆகாசம் முதலிய சொற்கள் பரமாத்மாவையே போதிக்கவல்லவை யென்பதைக் கீழ் வரும் அதிகரணங்களாலே விளக்குகிறுர்.

## 8 — ஆகாசாதிகரணம்

## (23) (ஸ௭) ஆகாசः தல்லிங்காத்

சாந்தோக்யம் முதலத்யாயம் எட்டாவது கண்டத்தில் இந்தலோகத் திற்கு எது கதியென்று வினவ ஆகாசமேயென்று சொன்ஞர். இந்த பூதங்கள் அனைத்தும் ஆகாசத்திலிருந்தே தோன்றி அதிலேயேலயமடைந்து வருகின்றன. இவற்றைவிட ஆகாசமே பழமையான பரம ப்ராப்யமானது என்றுள்ளது. இதில் 'ஆகாசம்' என்பது பூதாகாசமா? அல்லது முன் லக்ஷணம் கூறப்பட்ட ப்ரஹ்மமா?என சந்தேகம். பிரசித்தமான ஆகாசம் தான் என்பது பூர்வபக்ஷம் — ஈக்ஷணம் (ஸங்கல்பம்) பற்றிய லிங்கத்தைவிட விசேஷ ச்ருதி பலம் வாய்ந்ததாததாலும், ஆகாசம் என்பது பூதாகாசத் திலேயே ப்ரசித்தமாதலாலும் ஸத், ப்ரஹ்ம முதலிய ஸாமான்ய சப்தங் களும் ப்ரஸித்தாகாசத்தையே கூறுபவையாகும் என்பது பூர்வபக்ஷ ஹேது.

ஸித்தாந்தம் — ஆகாச: அசேதனமான ஆகாசத்தைவிட வேறு பட்டவனை பரமாத்மாவே ஆகாசம் என்று கூறப்படுபவன். தல்லிங்காத் — அந்த பரம புருஷனுக்குரிய லிங்கங்கள் (அடையாளங்கள்) காணப் படுவதால் — அவையாவன:— உலகனைத்திற்கும் காரணமாதல், எல்லா வற்றையும்விடப் பழமை, அனைத்திற்கும் சிறப்பான ப்ராப்யம் (அடைக் கலம்) ஆதல் முதலிய தர்மங்கள் — 'தஸ்மாத் விராட் அஜாயத' ஏகோஹவை நாராயண ஆஸீத் முதலிய உபநிஷத் வாக்யங்களில் கூறப்

பட்ட விராட் புருஷத்வம், நாராயணத்வம் முதலிய தர்மங்கள் — ஆகையால் ஆ = நாற்புறமும் = காச = பிரகாசிப்பது என்று காரணப்பெயராகக் கொண்டு பரம புருஷன்தான் ஆகாசம் எனப்படுவான் என்பதாம்.

இங்குள்ள சிறப்பாவது - காரணப்பெயரைவிட (யோகத்தைவிட) இடுகுறிப்பெயரே (ரூடி) மேலானது என்று நியாயம் இருந்தாலும் கல்பிதமான யோகம் கல்பிக்கப்பட விருக்கிற ரூடியைப் பாதிக்கும் என்னும் நியாயத்தின்படி இங்கு 'யதேஷ ஆகாச ஆனந்தோ நஸ்யாத்' என்னும் வாக்கியத்தில் ஆகாச சப்தத்திற்கு யோகத்தால் (காரணத்தால்) பொருள் கல்பிக்கப் பட்டிருப்பதால், இந்த யோக சக்தியை (பொருளை) ரூடிசக்தி பாதிக்க மாட்டாது. ஆதலின், முன் கூறிய ஈக்ஷணம், ஆனந்த விசேஷம், திவ்ய மங்கள விக்ரஹம் முதலிய சிறப்பான லிங்கங்களினுல், ஸத், ப்ரஹ்ம முதலிய பொதுச் சொற்களும், ஆகாசம் போன்ற சிறப்புச் சொற்களும், ஸமஸ்த ஜகத்காரணனுய் — சர்வஜ்ஞத்வம் முதலிய கல்யாண குணங்களையுடைய வனுன பரம புருஷனை விளக்குகின்றன எனத் திருவுள்ளம்.

அடுத்தபடி ஆகாசம் என்பது பரமாத்மா என்ற காரணம் இருக்கட்டும் ஸகல ஜனங்களுக்கும் ஸ்திதியோ, ப்ரவ்ருத்தியோ ப்ராணனைச் சார்ந்தி-ருப்பதால் - சாந்தோக்யம் முதலத்யாயம் ஒன்பதாம் கண்டத்திலே 'ப்ரஸ்தோதர்யா தேவதா ப்ரஸ்தாவ மன்வாயத்தா' எனத் தொடங்கி, இந்த பூதங்களனைத்தும் ப்ராணனையே சார்ந்திருக்கின்றவை என்று கூறப்பட்டிருப்ப-தால் - ப்ரசித்தமான ப்ராணனே ஜகத்காரணம் என்று கூறலாமேயென்று, மேற்கொண்டு அதிகமான ஓர் சம்சயம் தோன்றிற்று. அதைக் கண்டிப்பதற்காக அடுத்து ப்ராணுதிகரணத்தைக் கூறுகிறுர்.

## 9. ப்ராணுதிகரணம்

## 24 (ஸூ௨) அதஏவ ப்ராண:

அத ஏவ - ஆகாசத்திற்குக் கூறியபடி ஸகல ஜகத்தின் உள் நுழைதல் வெளியேறுதல் முதலிய பரமாத்மலிங்கங்கலிருப்பதாலேயே, ப்ராண: ப்ராணன் என்ற சொல்லால் கூறப்படுபவனும், பரமாத்மாவேயென்பது பொருள்— சேதனர்களிடம் ப்ரசித்தமான ப்ராணன் உள் நுழைவதும், வெளியேறுவது மிருப்பினும், அசேதனமான கல், மரக்கட்டை முதலியவற்றில் அது சம்பவிக்காது. ஆதலின், பரமாத்மாவிற்கே அது பொருந்துமென்பதைக் கொண்டு எதிலும் உள் நுழையவும், வெளியேறவும் வல்ல பரமாத்மாவே ப்ராணன் என்றபடியாம்.

## 10. ஜ்யோதிரதிகரணம்

## 25 (ஸூ) ஜ்யோதிச் சரணுபிதாநாத்

இனி காரணத்வத்தை நிரூபிக்கவல்ல நிரதிசயமான தீப்தி (ப்ரகாசம்) ஹி த த ம ம ா ன உபாஸனத்திற்குரிய கர்மா ( செயப்படுபொருள் ) என்ற தன்மை இவற்றுடன் கூடிய ஜ் யோ தி ஸ் என்பதும், இந்த்ரன், ப்ராணம் முதலிய சொற்களால் கூறப்படுவதும், உலகில் ப்ரஸித்தமான ஒளி, இந்த்ரன் இவற்றைவிட்டு விலக்ஷணமான ப்ரஹ்மமேயென்பதை இந்த அதிகரணத்-தாலும், இந்த்ரப்ராணுதிகரணத்தாலும் நிலைநாட்டுகிறுர் என்பது ஸங்கதி. அது மட்டுமின்றி ச்ருதியிலே, ஆகாசாத் வாயு: வாயோரக்னி: என்று கூறியுள்ள க்ரமப்படி முதலில் ஆகாசம், பின் வாயு ( ப்ராணன் ) அ டு த் து அக்னி என்ற க்ரமத்தைப்பின்பற்றி ஆகாசாதி கரணத்தின் பின்-ப்ராணன்பற்றியும் பின் ஜ்யோதிஸ் ( அக்னி ) பற்றியும் விசாரிக்கிருரென்றும் மற்ருேர் சங்கதி.

சாந்தோக்யம் — மூன்ருமத்யாயத்தில், மது வித்யைக்குப் பிறகுகாயத்ரீ சப்தப் பொருளான பரமாத்மா, ஜ்யோதிர் வித்யையில் பே ச ப் ப டு கி ரு ர். 'அதயதித: பரோதிவோ ஜ்யோதிர்தீப்யதே விச்வத: ப்ருஷ்டேஷு ஸர்வத: ப்ருஷ்டேஷு அநுத்தமேஷு உத்தமேஷு, லோகேஷு இதம் வாவ ஸர்வத: தத்யதிதம் அஸ்மின் அந்த: புருஷே ஜ்யோதி:' என்பது இங்கு விஷயவாக்யம் 'ஜ்யோதிஸ்' என்று ஏராளமான ஒளி பொருந்தியது என்பது, ப்ரஸித்தமான ஸூர்யாதிகளாம் ஜோதிஸ்வ ரூபங்களையே குறிப்பிடுவதா அல்லது உலக காரணமாகிய எல்லையில்லாத ஒளிவடிவமான பரமாத்மாவைக் குறிப்பதா என்று சம்சயம்.

ஆகாசம், ப்ராணன் பற்றிய வா க் ய ங் க ளி ல் போ ல, இந்த வாக்யத்தில் நிகில ஜகதேக காரணத்வம் போன்ற பரமாத்மாவின் சிறப்பான லிங்கமேதுமில்லாமையால், இதம் வாவதத் எனத் தொடங்கி, புருஷனின் வயிற்றிலுள்ள ஜோதியுடன் இந்த ஜோதியை ஒன்ருகக் கூ று வ த ா ல் ப்ரஸித்தமான ஜோதியேயிருக்கலாமென பூர்வபக்ஷம். அதைக்கண்டிக்கிருர்;

### ஜ்யோதி: சரணுபிதாநாத்

ஜ்யோதி: — தேவலோக ஸ்ம்பந்தியாகக் கூறப்பட்ட ஏராள ஒளியுள்ள ஜோதியென்பது பரமபுருஷனே; ஏனெனில், சரணுபிதாநாத் — பாதோஸ்ய விச்வா பூதானி, த்ரிபாதஸ்யாம்ருதம் திவி' என்று ஸர்வபூதங்களும் இந்த ஜோதிஸ்ஸுக்கு ஒரு பாதமாகவும் பரம பதத்திலே மூன்று பாதங்களிருப்ப தாயும் சொல்வதால், ப்ரஸித்தமான எந்த சோதிக்கும் அது பொருந்தாது ஆதலின், பரமபுருஷனே ஜ்யோதிச் சப்தத்தின் பொருளாவான்.

இந்த தேவலோக ஸம்பந்தி ஜ்யோதிஸ்ஸை ஜாடராக்னியை சரீரமாகக் கொண்டதென்று உபாஸித்தால் ஆபிரூப்யாதிகள் (பொருத்தமான அழகு) சித்திக்கும் என்பதற்காக கௌக்ஷேய (வயிற்று) ஜ்யோதிஸ்ஸுடன் ஐக்யம் கூறுகிறது என்பது திருவுள்ளம்.

## 26. (ஸூ) சந்தோபிதானந் நேதிசேந்ந ததா சேதோர்ப்பண நிகமாத் ததாஹி தர்சனம்

அதயதத: பரோ திவோ தீப்யதே என்ற வாக்யத்திற்கு முன்பு காயத்ரீ சந்தஸ்ஸைச் சொல்லி, பின்னர், 'ததேதத் ருசாப்யுக்தம்' என்று கூறிய ருக்குக்கும் காயத்ரீ என்னும் சந்தஸ்ஸே விஷயமாகையால் இங்கு பரமபுருஷனைப் பற்றிய பேச்சே இல்லையென்று ஐயம் தோன்றிற்று. இதிசேத் ந - இவ்வாறு கூறுவது தவறென்கிறார். ஏனெனில், ததாசேதோர்ப்பண நிகமாத் - அவ்வாறு சித்தத்தாலே அனுஸந்தானம் விதிக்கப்படுவதால் - அந்த காயத்ரியைப் போலவே, பரம ஜ்யோதிஸ்ஸை, நான்கு பாதங்களுள்ள தாக அனுஸந்திக்கச் சொல்கிறபடியால், நிகமாத் - நிச்சயிக்கப்படுவதனுல் சப்த ரூபமான காயத்ரீ ஸர்வ பூதாத்மிகையென்பது பொருந்தாமையால் - பரமபுருஷனைக் காயத்ரீ துல்யமாக நான்கு பாதமுள்ளவனுக அனுஸந்திக்க வேண்டுமென்று நிச்சயிக்கிறபடியால், பரமபுருஷனே காயத்ரீ சப்தத்தின் பொருளாம். ததாஹி தர்சனம் - அவ்வாறு நான்கு பாதங்களுள்ள காயத்ரியும், சிலவிடங்களில் காணப்படுகிறது. இந்த்ரச்சசீபதி; வலேநபீடித: துச்ச்ய வனே வ்ருஷா, ஸமித்ஸுஸாஸஹி: என்று காணலாம்.

## (27) (ஸூ) பூதாதி பாதவ்யபதேசோபபத்தேச் சைவம்

பூதப்ருதிவீ சரீரங்களைச் சுட்டி இது நான்கு காலுள்ளதென்பதற்குப் பொருத்தம் வரவேண்டுமானுல் ஏவம் - இவ்வாறு ப்ரஹ்மமே காயத்ரீ என்ற சொல்லின் பொருள் என்றுலே பொருத்தம் ஏற்படும். பூதப்ருதிவீ சரீர ஹ்ருதயங்களை என்பதில் பூதம் - ஆத்மவர்க்கம், ப்ருதிவீ - இந்த லோகம், சரீரம் - கர்மாக்களால் ஆர்ஜிதமான போகத்திற்குரிய இடமும், அதன் உபகரணமும்; ஹ்ருதயம் என்பது ஆத்மா தங்குவதற்கான இடம்.

## 28 (ஸூ) உபதேசபேதாத் நேதிசேந்ந உபயஸ்மின்னப்யவிரோதாத்

பூர்வ வாக்யத்தில் த்ரிபாதஸ்யாம்ருதம் திவி என்று த்யுலோகத்தை ஆதாரமாகவும் இந்த வாக்யத்தில் திவ: என்று த்யுலோகத்தைக் காட்டிலும் என்று எல்லையாகவும் உபதேசம் வேறுவேருய் இருப்பதால் - முன் வாக்யத்தில் கூறிய ப்ரஹ்மம் இந்த வாக்யத்தில் தோன்றவில்லை,

இதிசேத் ந - என்று கூறுவது சரியில்லை; உபயஸ்மின்னபி அவிரோதாத் - இரண்டுக்கும் அர்த்தஸ்வபாவம் ஒன்றேயாதலின் - நினைவுக்கு விரோத மில்லை. மரத்தின் நுனியில் பருந்து என்றாலும், மரத்தின் நுனிக்கு மேலே பருந்து என்றாலும் பொருள் ஒன்றேயாவதுபோல் - இங்கும் அர்த்தம் ஒன்றே யாதலின், ஏதாவான் அஸ்ய மஹிமா, பாதோஸ்ய விச்வாபூதானி என்ற புருஷ ஸூக்த நினைவாலே. ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் என்கிற எல்லையில்லா ப்ரகாசமுடைய புருஷோத்தமனே அதயதத: பரோ திவோ ஜ்யோதி: என்று கூறப்படுகிறான் என்று திருவுள்ளம்.

ஸ்ரீபாஷ்யத்தில் இவ்வதிகரணத்தின் அவதாரிகையில், எல்லையில்லாத ப்ரகாசம என்ற லிங்கத்தாலே பூர்வபக்ஷம் தோன்றுகிறது என்று காட்டி பின்பு - ப்ரசித்தவத் நிர்தேசம் இருந்தாலும், ஆகாசம் - ப்ராணன் இவற்றைப் போல தன் வாக்யத்தில் எடுக்கப்பட்ட பரமாத்மத்வத்திற்கான லிங்க மில்லாமையால் - என்று அருளியது முன் பின் முரணுயுள்ளதேயென்னில்,

'அதயதத: பரோ' என்னும் வாக்கியத்தில் காரணத்தைக் காட்ட வல்ல ஸர்வத: ப்ரகாசமயமான தன்மை எனும் லிங்கமுள்ளது. அப்படி யிருந்தாலும் உபயலிங்கவாதிகள் கூடியதும் - பரமபுருஷனை நிலை நிறுத்தக் கூடியதுமான ஜகத் காரணத்வம் என்னும் லிங்கம் - அதயதத: பர: என்கிற வாக்கியத்தில் கிடையாதென்னும் பூர்வபக்ஷியின் கருத்தால் அருளிச் செய்வதால் முரண்பாடில்லை. அப்படியான சிறப்பான லிங்கம் தன் வாக்கியத் திலிருப்பதாகத் திருவுள்ளம்.

## 11. இந்த்ரப்ராணாதிகரணம்

### 29 (ஸூ) ப்ராண: ததாநுகமாத்

இப்படி எல்லையிலா ப்ரகாசமுள்ள ஜோதிஸ்ஸு பரம புருஷனேயென்று கூறி, இனி காரணத்வத்தோடு வியாப்தமான - முமுக்ஷுக்களால் உபாசிக்கத் தக்க தன்மையையுடையவனாகச் சொல்லப்பட்ட 'இந்த்ரப்ராணன்' என்று சொல்லப்படுபவனும் பரமபுருஷனேயென்று இவ்வதிகரணத்தில் சாதிக்கிறார். வாஜஸனேயகத்தில் — கௌஷீதகீப்ராஹ்மணத்தில் ''ப்ரதர்த்தனோஹவை தைவோதாஸி:' என்று தொடங்கி ப்ரஜ்ஞாத்மாவான ப்ராணனாயிருக்கிறேன் ஆதலின், அந்த என்னை ஆயுஸ்ஸென்றும் அம்ருதம் என்றும் உபாஸிப்பாயாக' என்ற வாக்கியம் இங்கு விஷயமாக விசாரிக்கப்படுகிறது. ஹிததமமாக உபாஸனம் செய்யத்தக்கவனென்றும் இந்த்ரப்ராணனென்றும் கூறப்படுபவன் ஜீவனேயா அல்லது அவனைவிட்டு வேறான பரமாத்மாவா என்று சம்சயம். ஜீவன்தான் என்பது பூர்வபக்ஷம். ஏனெனில், இந்த்ரசப்தம் ஜீவனைக்குறிப்ப-தாகவே ப்ரசித்தமாதலால், நான் என்று குறிப்பிடும் இந்த்ரன் என்பதாகவும்,

ப்ராணன் என்பதாகவும் உள்ளது — ப்ரசித்தமான இந்திரனையே குறிப்பிடுவதாகும் என்றால் அது பொருந்தாது.

## (ஸூ) ப்ராண: ததானு கமாத்

ப்ராண: ப்ராணோஸ்மிப்ரஜ்ஞாத்மா என்று சொன்ன இந்த்ரப்ராண சப்தவாச்யன், ஜீவனல்லன். அவனைவிட விலக்ஷணமான பரப்ரஹ்மமே யாகும். ஏனெனில், த தா அனுகமாத் அப்படியே தொடர்வதால்; ''ஸ ஏஷஏவ ப்ரஜ்ஞாத்மா ஆனந்தோ'ஜரோSம்ருத:'' என்று ஆனந்தம் முதலிய தர்மங்களுக்கு தர்மியாக ப்ராணனைத் தொடர்வதாலே ப்ரசித்தமான இந்த்ரனுக்கு ஆனந்தத்வாதிகள் கூடாமையாலே பரமபுருஷனே இந்த்ர ப்ராணன் என்ற சொல்லின் பொருளாம்.

## 30 (ஸூ) நவக்துராத்மோபதேசாதிதிசேத் அத்யாத்ம ஸம்பந்த பூமா ஹ்யஸ்மின்

ந — இந்த்ர ப்ராண சப்தத்தின் பொருள் பரப்ரஹ்மமன்று ஏனெனில், வக்து: ஆத்மோபதேசாத் — தொடக்கத்தில் — மூன்று தலையுள்ள த்வாஷ்ட்ரனைக் கொன்றேன். எனக்கூறி விச்வ ரூபவதம் முதலியவற்றால் — ப்ரஸித்தமான ஜீவபாவத்துடன், ப்ரஜ்ஞாத்மாவான ப்ராணனாயிருக்கிறேன் என்று பேசும் தன் ஆத்மாவையே உபாஸி என்று உபதேசிப்பதால் ஜீவன்தான் என்றால். அத்யாத்ம சம்பந்த பூமா ஹி அஸ்மின் — ப்ராண சப்தத்தால் குறிப்பிடும் இந்த (ப்ரஹ்மத்திடம்) உள்ள குணங்கள் — தர்மங்கள்.

அத்யாத்ம தர்மங்கள், அவற்றின் சம்பந்தங்கள், அவற்றின் பூமா — மிகுதி உள்ளதல்லவா? உபக்ரமத்தைவிட மஹாவாக்யம் ப்ரபலமாகையால், இந்த ப்ரதர்த்தன வித்யையில் ஆதி முதல் அந்தம் வரை பரமாத்மாவின் சிறப்பான தர்மங்கள் பேசப்படுகின்றன. அதாவது, ப்ரதர்த்தனன் இந்திரனிடம் ''நீயே மனிதர்கட்கு ஹிததமமாய் எண்ணும் வரத்தைக் தருக.'' என்று கூறிப்பின் அனைத்து நல்ல காரியங்களையும் நிறைவேற்றுபவனாகவும், தேரின் குடத்தில் (ஆரங்களில்) சக்ரம் நிலைபெற்றதுபோல் உலகிற்கே ஆதாரமாய் இருக்குமவனும், ஆனந்தவடிவாய் ஜரை (முதுமை) மரணம் முதலியன அற்றவனும், உலகின் தலைவனும், ஸகல கல்யாண குணாகரனுமாக இந்த வித்யையிலே சொல்லப்படுகையால் பரமபுருஷனே இந்த்ர-ப்ராணனென்பது கருத்து.

ஆனால், இந்திரன், தன்னையே உபாஸிக்குமாறு கூறல் பொருந்துமா? என்ற ஐயத்திற்கு மேலே விடைதருகிறார்.

## (31) (ஸூ) சாஸ்த்ர த்ருஷ்ட்யா தூபதேசோ வாமதேவவத்

'து' என்ற சொல் சந்தேகத்தைப் போக்குகிறது. உபதேச முமுக்ஷுக்கள் தன்னை உபாஸிக்கவேண்டுமென்று உபதேசித்தல். சாஸ்த்ர த்ருஷ்ட்யா - ய ஆத்மநிதிஷ்டன், ஆத்மனோऽந்தர: யமாத்மா நவேத யஸ்யாத்மா சரீரம், முதலிய சாஸ்த்ரத்தாலே - ஜீவசரீரகனை பரமாத்மாவை அறிந்து ஜீவனைக் குறிக்கும் அஹம், த்வம் முதலிய சொற்களும் பரமாத்மாவையே போதிப்பன என்றறிந்து - என்னையேயறிந்து உபாஸனை செய் என்று தன் ஆத்மாவைச் சரீரமாகக் கொண்ட பரமாத்மாவை உபதேசிக்கிருன் - இந்த்ரன்; வாமதேவவத் - வாமதேவர் என்ற மஹரிஷி இப்படிச் சாஸ்த்ரக் கண்ணோட்டத்தில் 'அஹம் மனுரபவம், ஸூர்யச்ச' (நானே மனுவாகவும் ஸூர்யனுகவும் இருந்தேன்) என்று கூறுகிருரே அப்படி இந்த்ரனும் கூறுகிருன் என்றபடி - ப்ரஹ்லாதனும் இப்படியே எம்பெருமான் எங்கும் நிறைந்திருப்பதால் அவனுகவே நானும் இருக்கிறேன். என்னிடமிருந்து எல்லாம் தோன்றுகிறது. நானே எல்லாமும் ஆவேன் என்று கூறுகிருன் என்பது கருத்து.

இந்த ப்ரகரணத்தில் ஜீவாத்மாவைக் குறிக்கும் சொற்களாலும், ப்ராணுதி சப்தங்களாலும், உபாஸ்யமான பரப்ரஹ்மத்தைச் சொல்லுகையில் காரணத்தைச் சந்தேகம் தெளிவிப்பதன் மூலம் அருளுகிருர்.

## 32 (ஸூ) ஜீவமுக்யப்ராணலிங்காத் நேதிசேந்ந, உபாஸா த்ரைவித்யாத் ஆச்ரிதத்வாதிஹ தத்யோகாத்

த்வாஷ்ட்ரவதம் முதலிய ஜீவலிங்கங்களாலேயும், 'இவ்வுடலில் ப்ராணனுள்ளவரைதான் ஆயுள்' என்று கூறும் முக்கிய ப்ராணலிங்கத்தாலும், பரமாத்ம விஷய ஸம்பந்தம் மிகுதியென்பதில்லை. இதிசேத் ந. என்று கூறுவது தவறு. உபாஸாத்ரைவித்யாத் - மூன்றுவிதமாய் உபாஸிக்க வேண்டும் என்றே உபதேசிக்கிருர் - அந்த ஜீவாதிசப்தங்களால் ப்ரஹ்மத்தைச் சொல்கிறது. மூன்றுவித உபாஸனமாவது:

1 ஸமஸ்தகாரணனை ப்ரஹ்மத்தை ஸத்யத்வ, ஜ்ஞானத்வாதிகளுடையதாய் உபாஸிப்பது.

2 போக்த்ருவர்க்கமான ஜீவர்களைச் சரீரமாகக் கொண்டது என்று உபாஸிப்பது.

3 போக்யபோகோபகரண (அசேதன)ங்களைச் சரீரமாகக் கொண்டதாக உபாஸிப்பது என மூன்றுவித உபாஸனம்,

ஆச்ரிதத்வாத் - தைத்திரிய ச்ருதியிலும் ஆச்ரயிக்கப்பட்டிருக்கிறது. ஸத்யம், ஜ்ஞானம், அனந்தம் ப்ரஹ்ம, ஆனந்தோ ப்ரஹ்ம - முதலிய இடங்களில் பகவத் ஸ்வரூபானுஸந்தானம் கூறப்படுகிறது. பின்னர் தத்ஸ்ருஷ்ட்வா, ததேவானு ப்ராவிசத் எனத் தொடங்கி - சேதன சரீரகமாயும், அசேதன சரீரகமாயும் அனுஸந்தானம் கூறப்படுகிறது. இஹதத் யோகாத் - இந்த உபநிஷத்திலேயும், அந்த மூன்றுவித உபாஸனங்களும் கூடும். எப்படியென்றால், என்னை உபாஸி என்றதால், என்னைச் சரீரமாகக் கொண்ட பரமாத்மவை உபாஸி என்று சேதன சரீரக ப்ரஹ்மானுஸந்தானமும், ப்ரஜ்ஞாத்மாவான ப்ராணனாயிருக்கிறேன் என்றதால், அசேதன சரீரக ப்ரஹ்மானுஸந்தானமும் சொல்லப்படுகின்றன. ஆநந்தோZ ஜரோZம்ருத என்று ப்ரஹ்ம ஸ்வரூப அனுஸந்தானம் சொல்லப்படுகிறது. இவ்வாறு வேறு உபநிஷத்துக்களிலும் பரமாத்மாவின் சிறப்பான தர்மங்கள் சொல்லப்பட்டன. ஹிரண்ய கர்ப்பாதிகளைக் குறிக்கும் சொற்களும், பரமாத்மாவைக் குறிக்குமாம். ஆகையால் இங்கு இந்த்ரப்ராண சப்தத்தால் குறிக்கப்படுபவன் ஜீவனைவிட வேறுபட்ட பரமாத்மாவே என்று தேறிற்று.

இந்த பாதத்தில் ஆகாசாதிகரணம் முதல் இறுதிவரை நான்கு அதிகரணங்களிலும், ஆகாசம் - ப்ராணம் என்ற சொற்கள் பிரித்துப் பொருள் கொள்ளும் காரணப் பெயராய் ''யதேஷ ஆகாச ஆநந்தோ நஸ்யாத்'' முதலிய ச்ருதிகளில் க்லுப்தமானபடியாலே ரூடிசக்தியை விட்டு சர்வார்த்ர்யாமியாய் - ஸர்வ ப்ராணிகளையும் உயிரூட்டுபவனாய் உள்ளவன் என்பதாக நிமித்த பேதங்காரணமாக - ஸ்ரீமந் நாராயணனையே போதிப்பவையென்றும், ஜ்யோதிஸ் சப்தம் குக்ஷிகதமான ஜ்யோதிஸ்ஸுடன் ஒன்றாக உபதேசித்து விசேஷ லிங்கமிருந்தாலும், ரூடிசக்தியால், பரமபுருஷனையே குறிக்கிறது. இந்த்ரப் ப்ராணாதி சப்தங்களும் - த்வாஷ்ட்ர வதாசிலிங்கங்கள் இருப்பினும், அத்தகைய லிங்கங்களுடன் கூடிய இந்த்ராதி சரீரகனான பரமாத்மாவையே போதிப்பன என்பதாக ஆசார்யர்கள் நிரூபித்துள்ளனர்.

பரவித்யாஸு ஜீவோக்தி: நிருக்த்யாதே: பராச்ரயா ।
தல்லிங்காநந்யதா ஸித்தெள தத்விசிஷ்டாபிதாயினீ ॥

என்று விளக்கினார்கள்.

(பரவித்யைக்களில் காணும் ஜீவனைக் குறிக்கும் சொற்கள் பரமாத்மாவையே குறிப்பவை. அதன் லிங்கங்கள் மாற்றமுடியாமல் நிற்கையில் சேதனாதிகளைச் சரீரமாய் கொண்ட ப்ரஹ்மம் என்ற பொருளைக் குறிப்பிடுவனவாம் என்றவாறு).

இந்த பாதத்தில் அதிகரணங்கள் பதினொன்று. முதல் நான்கும் சாஸ்திரத்தில் உபோத்காதமாம் (முன்னுரை) பின் ஏழு அதிகரணங்களில் ச்ரியப்பதியான ஸ்ரீமந்நாராயணனின் ஏழு கல்யாண குணங்கள் அனுபவிக்கப் பெறுகின்றன. ஈக்ஷத்யதிகரணத்தில் ஸ்வேச்சையால் ஸர்வத்திற்கும் காரணத்வமும் - ஆனந்தமயாதிகரணத்தில், சுபமான குணகனங்களுடன் எல்லையிலா ஆனந்தமுடைமையும், அந்தராதித்யாதிகரணத்தில், கர்ம சம்பந்தமற்ற சுத்தமான திவ்ய மங்கள விக்ரஹ யோகமும், ஆகாசாதி கரணத்தில் எல்லையற்று நாற்புறமும் பிரகாசித்தலும், ப்ராணாதிகரணத்தில், சேதனம், அசேதனம் என்னும் இருவகை ஜகத்தையும், உயிர் வாழ்விக்கும் திறனும், ஜ்யோதிரதிகரணத்தில் திவ்யமாய் நிகரற்ற ஜ்யோதிஸ் ஸ்வரூபமும், இந்த ப்ராணாதிகரணத்தில், ப்ராணன், இந்த்ரன் முதலியவற்றிற்கு அந்தராத்மாவாய் விளங்குவதுமாகிய கல்யாண குணங்கள் ஏழும் உடைய பரம புருஷன் முதல் பாதத்தில் விளக்கப்பட்டான்.

முதல் அத்தியாயம் முதல் பாதம் முற்றிற்று.



## முதல் அத்தியாயம் – இரண்டாம் பாதம் ஸர்வத்ர ப்ரஸித்தாதிகரணம்.

## 1 (ஸூ) ஸர்வத்ர ப்ரஸித்தோபதேசாத்

முதல் பாதத்திலே மிகவும் தெளிவற்ற (அஸ்பஷ்டதரமான) ஜீவாதிகளின் லிங்கங்களையுடைய 'ஸதேவ ஸோம்யேத மக்ர ஆஸீத்' முதலிய வேதாந்த வாக்யங்களை பரமபுருஷனே காரணமென்று விளக்குவன வென்று ஸ்தாபித்த ஸ்ரீ பாஷ்யகாரர் பின்வரும் மூன்று பாதங்களால் அஸ்பஷ்டமாயும், ஸ்பஷ்டமாயும், ஸ்பஷ்டதரமாயுமுள்ள, ஜீவாதி லிங்கங்களைக் கொண்ட வாக்யங்களை முறையே பரமபுருஷ காரணத்வத்தை விளக்குவனவென்று ஸ்தாபிக்கிறார் என்பது இவ்விடம் ஸங்கதி. மேலும் முதல் பாதத்தால் - வேதாந்த வாக்யங்கள் ப்ரஹ்ம பரமல்ல என்ற அயோகம் விலக்கப்பட்டது. (அயோக வ்யவச் சேதம்) பின்வரும் மூன்று பாதங் களாலும் அவ்வாக்யங்கள் ப்ரஹ்மத்தைத் தவிர வேறெதையும் விளக்கா தென்று அன்யயோகவ்யவச்சேதம் செய்யப்படுகின்றது, என்று மற்றோர் ஸங்கதி - மேலும் - முதல் பாதத்தில் ஸர்வ வேதாந்த வாக்யங்களும் ப்ரஹ்மத்தைப் போதிப்பவனவல்ல என்று ஆக்ஷேபித்து ப்ரஹ்ம போதகங்களே யென்று நிரூபிக்கப்பட்டது. பின்வரும் மூன்று பாதங்களிலோ ஒவ்வொரு வாக்யம் ப்ரஹ்மபரமானாலும் மற்றோர் வாக்யம் அப்படியல்லவென்று க்ரமமாகப் பல வாக்கியங்களையும் ஆக்ஷேபித்து - ப்ரஹ்மபரமேயென்று சாதிக்கப்படுகிறது என்று மூன்றாவது ஸங்கதி. இதனால் முதல் பாதம், அடுத்து த்ரிபாதீ என்று இரு பிரிவாகப் பேசப்படுகிறது. இரண்டாம் பாதத்தில் ஜகத்து பகவானின் சரீரமென்றும், மூன்றாவதில் பகவான் உலகில் ஆதாரமானவன் என்றும், நான்காவதில் நாம் சொல்லும் கருத்துக்களுக்கு விரோதமாக வாதம் செய்யும் ஸாங்க்யாதிகளான பரபக்ஷிகள் பக்ஷம் கண்டிக்கப்படுகிறது என்றும் ஸங்கதி.

முன் அதிகரணத்தில் - ப்ரதர்த்தன வித்யையில் - இந்த்ர ப்ராணாதி சப்தங்கள் மஹாவாக்ய ஸ்வாரஸ்யத்தாலே எவ்வாறு ப்ரஹ்ம பரங்களா கின்றனவோ அப்படியே சாண்டில்ய வித்யையும் மஹாவாக்ய ஸ்வாரஸ்யத் தாலே ஜீவாத்ம பரமென்று சங்கையால் இவ்வதிகரணத்திற்கு ஸங்கதி.

## பூர்வபக்ஷம்.

சாந்தோக்யம் - இரண்டாம் அத்யாயத்தில் ஜ்யோதிர் வித்யைக்குப் பிறகு சாண்டில்ய வித்யை - 'ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலான்' என்று தொடங்குகிறது. தன் கருத்தையும் பிறர் கருத்தையும் பின்பற்றி இங்கு பாஷ்யத்தில் இரண்டு நிர்வாஹங்கள் காட்டப்படுகின்றன. ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாவிதி சாந்த உபாஸீத என்னுமிடத்தில், ப்ரஹ்ம என்னும்

சொல் ஜீவனைக் குறிப்பதா? பரமாத்மாவையா? என்று சந்தேஹம். இங்கு பரமாத்மாவல்ல - ப்ரத்யகாத்மா (ஜீவனே)வே யென்று பூர்வபக்ஷம். ஏனெனில், ஜீவனுக்கே, ஸர்வ பாபங்களுடன் ஸமானமான இடத்திலிருக்கும் நிலையுண்டு. ஸர்வம் என்று குறிப்பிடும் ப்ரஹ்மா முதல் தாவரம் வரையான ஜகத்தின் வடிவம் என்பது ஜீவனுக்கே கூடும் என்கிறார். இதனைக் கண்டிக்கிறார் சூத்ரகாரர்.

## (ஸூ-ம) ஸர்வத்ர ப்ரஸித்தோபதேசாத்.

ஸர்வத்ர - ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம என்ற வாக்கியத்தில் ஸர்வம் என்பதால் கூறப்படும் ஜகத்தில் - ப்ரஹ்ம என்ற சொல்லால் கூறப்படும் ஜகத்தில் - ஆத்மா - ப்ரத்ய காத்மா (ஜீவன்) அன்று. ப்ரஸித்தோபதேசாத்- வேறு ச்ருதிகளிலும் ப்ரஸித்தமான ஜன்ம ஸ்திதிலய காரணத்வத்தை ஜகதாத்மத்வத்திற்கு ஹேதுவாக 'தஜ்ஜலான்' என்று உபதேசிக்கையால் தஜ்ஜமாயும் - தல்லமாயும், ததனமாயும் இருப்பதால் என்று மூன்று ஹேதுக்கள் ஆகின்றன. தஜ்ஜலான் என்கிற பதம் நகாராந்தம். ஜகத்தில் ஜன்மாதி ஹேதுத்வம் - ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் - முதலிய இடங்களில் ப்ரஹ்மத்திற்குத்தானே ப்ரஸித்தம் - ப்ரஹ்மம் ஜகதாத்மகம், என்பது இரண்டும் ஸ்வரூபத்தால் ஒன்றென்பதன்று. ஸர்வத்திற்கும் காரணம் அந்தர்யாமி என்ற காரணத்தால் ஜகதாத்மகம் என்கிறோம். இப்படி தாதாத்ம்யம் (அபேதம்) கூறினால் சரீரமான ஜகத்திலுள்ள தோஷங்கள் சரீரியான ப்ரஹ்மத்திடம் ஒட்டாதவையாகும் என்பது திருவுள்ளம்.

## 33. (ஸூ-௨) விவக்ஷித குணோபபத்தேச்ச

மனோமய: ப்ராண சரீரோ பாரூப: முதலிய மேல் வாக்கியங்களில் கூறப்படும் மனோமயத்வம் முதலிய குணங்கள் பரமாத்மாவிடம் கூடுவன - வாதலாலும் அவனே ப்ரஹ்மமெனப்படுவான். அந்த குணங்களாவன:- மனோமயத்வம் = பக்தியால், பரிசுத்தமான மனத்தால் க்ரஹிக்கப்படும் நிலை. ப்ராணசரீரத்வம் ஸர்வ ப்ராணங்களுக்கும் ஆதாரமாய், நியந்தாவாய், சேஷுமுமாயிருக்கை, பாரூபத்வம் - எல்லையில்லாப் பிரகாசமுள்ள திருமேனி யுள்ளமை, ஸத்ய ஸங்கல்பத்வம் = ஆகாசம்போல் நிர்மலமான சூக்ஷ்ம ஸ்வரூபத்தைக் கொண்ட தன்மை, ஸர்வ கர்மாக்களாலும் ஆராதிக்கப்படும் தன்மை, முதலிய கல்யாண குணங்கள் இந்த சாண்டில்ய வித்யையில் கூறப்படுபவை பரம புருஷனுக்கே பொருத்தமானவை.

ஆனால், இத்தகைய, குணங்கள் பத்தரான ஜீவாத்மாக்களுக்குக் கூடாவிட்டாலும் முக்தாத்மாவுக்குப் பொருந்தலாமேயென்னில், அதற்கு விடை :

## 34 (ஸூ) அநுபபத்தேஸ்து நசாரீர:

து சப்தம் சங்கையை நிவாரணம் செய்கிறது. முன் நிலையில் தீய குணங்களுக்கு இருப்பிடமாயிருந்த முக்தனுக்கும் இந்த கல்யாண குணங்கள் தகாதவையாதலின், சரீர சம்பந்தயோக்யனான முக்தனும் ப்ரஹ்மமல்லன்.

## 35 (ஸூ) கர்மகர்த்ருவ்யபதேசாச்ச

இங்கிருந்து சென்று, நான் இப்பரப்ரஹ்மத்தையடைகிறேன் என்று '(ஏத மித: ப்ரேத்யாபி ஸம்பவிதாஸ்மி)' ப்ரஹ்மம் ப்ராப்யமாயும், முக்தன் ப்ராப்தா (அடைபவன்) என்றும் சொல்வதால் அடைபவனான ஜீவனும் - அடையப்படும் பிரஹ்மமும் ஒன்றாக முடியாது.

## 36 (ஸூ) சப்தவிசேஷாத்

"ஏஷமே ஆத்மாந்தர் ஹ்ருதயே" என்கிற வாக்யத்தில் 'மே' என்ற ஆறும் வேற்றுமைச் சொல்லாலே ஜீவன் குறிப்பிடப்படுகிறான். உபாஸ்யமான ப்ரஹ்மம், ஏஷ:. என்று ப்ரதமாந்த சப்தத்தால் குறிப்பிடப் பட்டது. ஆகையால் ஜீவன் ப்ரஹ்மமாகக்கொள்ளத்தகாதவன்.

## 37 (ஸூ) ஸ்ம்ருதேச்ச

"ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்ட: என்கிற ஸ்ம்ருதியும், ஜீவனை உபாஸகனாகவும், ப்ரஹ்மத்தை உபாஸ்யமாயும் சொல்கிறது.

## 38 (ஸூ) அர்ப்பகௌகஸ்த்வாத் தத்வ்யபதேசாச்ச நேதிசேந்ந நிசாய்யத்வாதேவம் வ்யோமவச்ச (7)

அர்ப்பகௌகஸ்த்வம் - சிறிய இடத்தைக்கொண்டிருக்கை: ஹிருதயத் தினுள்ளே இருப்பதாகக் கூறுவதால் அல்பமான ஹ்ருதயத்தை இடமாகக் கொண்டவன் ஆதலாலும், தத்வ்யபதேசாச்ச - தான்யங்களைக் காட்டிலும் சிறிய அணுஸ்வரூபமானவன் என்று கூறப்படுவதாலும், இவன் விபுவான (எங்கும் பரந்துள்ள) பரமாத்மாவாகக் கூடாது. ஜீவனாகத்தான் இருக்க வேண்டும். இதிசேந்ந - இவ்வாறு கூறுவது தவறு; நிசாய்யத்வாத் ஏவம்- பரமபுருஷன் தானே இப்படி உபாஸ்யனாகப் பேசப்படுகிறான். விபுவான பரமாத்மாவே உபாஸகர்களை அனுக்ரஹிக்க ஹ்ருதயத்திற்குள் அடங்கிய திருமேனியையுடையவனாயிருக்கிறான். ஆதலால், இப்படி அவனை உபாஸிக்க வேண்டுமென்பது அல்பமாய்ச் சொல்வதன் கருத்தாகும்.

வ்யோமவச்ச: விபுவான ஆகாசம் போலேயும் இந்த பரமாத்மா பேசப் படுகிறான். ''ஜ்யாயான் ப்ருதிவ்யா: ஜ்யாயான் அந்தரிக்ஷாத்'' முதலிய வாக்யங்களால் அளவிட முடியாத ரூபமுள்ளவனாகச் சொல்லப்படுகிறான். ஆதலின், அர்ப்ப கௌகஸ்த்வம் - சிறிய இடத்தைப் பெற்றிருத்தல் உபாஸகனின் ஸௌகர்யத்திற்காகக் கூறப்பட்டது.

## 39. (ஸூ) ஸம்போக ப்ராப்திரிதிசேந்த வைசேஷ்யாத்

ஜீவனுக்குப்போலே பரப்ரஹ்மத்துக்கும் சரீரத்திலுல் இருப்பு ஒப்புக் கொண்டால், ஜீவனைப்போல் சரீரசம்பந்த ப்ரயுக்தமான ஸுகதுக்கோப போகம் ஏற்படாதோ என்ற சந்தேகத்திற்கு விடை - ஸம்போக ப்ராப்தி: இதிசேந்ந - சுகதுக்கங்கள் ஏற்படுமேயென்றால், அஃதல்ல, வைசேஷ்யாத்: விசேஷமான ஹேதுவிருப்பதால்; சுகதுக்க போகத்திற்கு - சரீரத்தின் உள்ளிருப்பு மட்டும் காரணமன்று. புண்ய பாப ரூப கர்ம பரவசத்வமே விசேஷ காரணமாகும். அது பாப சம்பந்தமற்ற ப்ரஹ்மத்திற்குப் பொருந்தாது. இவ்வாறே ச்ருதியும் கூறுகிறது. 'தயோரன்ய: பிப்பலம் ஸ்வாது அத்தி அனச்னன் அன்யோऽபிசாகசீதி', என்றபடி.

### அதிகரணம் 2

## 40. (ஸூ) அத்தா சராசர க்ரஹணாத்

இப்படி பரமாத்மா கர்ம பல போக்தா அல்லன் என்றால் கடவல்லியில் போக்தாவாகத் தோன்றுபவனும் ஜீவனாகவே ஏற்க நேரும், என்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார் என்று ஸங்கதி. மேலும், முன் அதிகரணத்தில் ஹ்ருதயமென்னும், அல்பஸ்தானத்தில் உள்ள பரமபுருஷன் சிந்திக்கப் பட்டான். இவ்வதிகரணத்தில் குஹாம் ப்ரவிஷ்டௌ என்று ஹ்ருதய குஹைக்குள் உள்ள பரம புருஷனே சிந்திக்கப்படுகிறான் என்பது கருத்து.

கடவல்லியில் - யஸ்ய ப்ரஹ்மச க்ஷத்ரஞ்ச உபே பவத ஓதன: ம்ருத்யுர் யஸ்யோப ஸேசனம் க இத்தா வேத யத்ரஸ: என்கிற வாக்யத்தில் ஓதனத்திற்கு உபஸேசனம் (ப்ரசாதத்திற்கு ஊறுகாய்) என்று குறிப்பிடப் பட்ட அத்தா சாப்பிடுபவன் ஜீவனா அல்லது பரமாத்மாவா என்று சம்சயம். ஜீவன்தானென்று பூர்வபக்ஷம். போக்தா என்ற தன்மை கர்ம நிமித்தமாகையால் ஜீவனுக்கே அது கூடுகையால் என்ற பக்ஷத்தைக் கண்டிக்கிறார்.

அத்தா - அன்னத்தைப் புஜிப்பவன் பரமபுருஷன்தான். ஜீவனன்று; ஏனெனில், சராசரக்ரஹணாத் - ப்ராஹ்மண க்ஷத்ரியாதிகளான ஸமஸ்த

சராசரரூபமான ஜகத்தையும் ஓதனமாக க்ரஹிக்கையாலே இந்த போக்த்ருத்வம் கர்மநிமித்தமானதன்று, ஜகத்தின் ஜன்ம ஸ்திதி லயங்களுக்கு ஹேதுவான பகவானின் ஸர்வத்தையும் ஸம்ஹரிக்கும் தன்மையையே குறிக்கிறது. மேலே வழியைக் கடந்து எம்பெருமானின் பரமபதத்தை யடைகிறான் என்று குறிப்பிடுவதாலும், ம்ருத்யுவை உபஸேசனமாக (வ்யஞ்ஜனமாக) குறிப்பிடுவதாலும், ப்ரஹ்ம க்ஷத்ர சப்தங்கள் அனைத்து சராசரங்களையும் போக்யமாகச் சொல்கிறது. உபஸேசநமென்பது தானுண்ணப்படுவதுடன் வேறொன்றை உண்ணவும் ஹேதுவாயிருப்பது. இப்படியானஅத்தா (போக்தா)வின் தன்மை ஜீவனுக்குக் கூடாது.

## 41 (ஸூ) ப்ரகரணாச்ச

இந்தப்ரகரணமும் பரமாத்ம விஷயம், மஹாந்தம் விபுமாத்மானம் மத்வா தீரோ நசோசதி நாயமாத்மா ப்ரவசனேனலப்ய: முதலிய வாக்கியங்களில் பரமாத்மாதான் ப்ரக்ருதமாயிருக்கிறான். "கஇத்தாவேத யத்ரஸ:" என்ற முன் வாக்யமும் பகவத் அனுக்ரஹம் அன்றி யவனையறிய முடியாதென்று கூறுகிறது. பகவான் எந்த ப்ரகாரத்தில் இருக்கிறானோ அதனை அவன் அனுக்ரஹமன்றி எவன் அறிவான்? என்பது அதன் பொருள்.

மேலேயொரு சங்கை தோன்றுகிறது. "அத்தா" என்பது பரமாத்மாவாகாது. மேல் வாக்கியத்திலே 'ருதம் பிபந்தௌ ஸுக்ருதஸ்ய லோகே குஹாம் ப்ரவிஷ்டௌ பரமே பரார்த்யே', என்று கர்மபல போக்தாவான ஜீவனும், ப்ராணனும் ஹ்ருதய குகையில் ப்ரவேசித்து உள்ளனர் என்று கூறப்படுகிறது. ருதம் பிபந்தௌ - கர்ம பலத்தை அனுபவிப்பவர்கள் என்று பொருள். கர்ம பலபோகத்திற்கு உபகரணமான ப்ராணனையும் கர்த்தாவென்று உபசாரமாகக் கூறி பிபந்தௌ என்று ஜீவனையும் ப்ராணனையும் கூடச் சொல்கிறது என்ற இந்த சங்கைக்கு விடையாக அடுத்த சூத்திரம் தோன்றுகிறது.

## 42. (ஸூ) குஹாம் ப்ரவிஷ்டாவாத்மானௌஹி தத்தர்சனாத்

குஹாம் ப்ரவிஷ்டௌ,, என்றும் ருதம் பிபந்தௌ என்றும் ஜீவனும் ப்ராணனும் கூறப்படவில்லை - ஜீவனும் பரமாத்மாவுமே குறிப்பிடப்படுகின்றனர் - ஏனெனில், தத்தர்சனாத் - அப்படிக் காண்கையால்: இந்த ப்ரகரணத்தில் இரு ஆத்மாக்களே குஹையில் ப்ரவேசித்ததாகக் குறிப்பிடப்படுகின்றனர். "தம் துர்தர்சம் கூடமனுப்ரவிஷ்டம் - குஹாஹிதம் கஹ்வரேஷ்டம் புராணம்" என்று பரமாத்மாவுக்கு குஹாப்ரவேசம் கூறப்படுகிறது.

"யா ப்ராணேந ஸம்பவதி அதிதிர் தேவதாமயீ ।
குஹாம் ப்ரவிச்ய திஷ்டந்தீ யா பூதேபிர் - வ்யஜாயத" ॥

என்று ஜீவனுக்கு குஹாப்ரவேசம் கூறப்படுகிறது. 'அத்தி' என்ற காரணத்தால் (கர்ம பலன்களைச் சாப்பிடுபவன்) அதிதி எனப்படுபவன் ஜீவன். ப்ராணேந-ஸம்பவதி - ப்ராணனுடன்கூட இருக்கிறது. தேவதாமயீ இந்த்ரியங்களுக்கு அதீனமான போகங்களையுடையது. குஹாம் ப்ரவிச்ய திஷ்டந்தீ - ஹ்ருதய கமலத்தினுள் இருப்பது பூதேபி: - பஞ்சபூதங்களுடன், வ்யஜாயத - தேவாதி ரூபங்களில் பலவாருகத் தோன்றுகிருன் என்பது பொருள்.

## 43 (ஸூ) விசேஷணச்ச

இந்தப் ப்ரகரணத்தில் ஜீவனும், பரமாத்மாவுமே - உபாஸகன் - உபாஸ்யனென்றும், ப்ராப்தா, ப்ராப்யன் என்றும், விசேஷண விசேஷ்யங்கள் கொண்டு விளக்கப்படுகிருர்கள். "ப்ரஹ்ம ஜஜ்ஞம் தேவமீட்யம் விதித்வா, நிசாய்யேமாம் சாந்தி மத்யந்தமேதி" ப்ரஹ்மத்திடம் தோன்றியதால் ப்ரஹ்மஜம் ஜீவன் என்பது ஜ்ஞன் - ஜ்ஞாதா: இத்தகைய ஜீவனை, ஈட்யம் தேவம் விதித்வா - வாஸுதேவ ஸ்வரூபியாக அறிந்து ; நிசாய்ய - உபாசித்து அத்யந்த ஸம்ஸார நிவ்ருத்தியையடைந்து விடுவான்.

விஜ்ஞான ஸாரதிர்யஸ்து மன: ப்ரக்ரஹவான் நர:
ஸோऽத்வன: பாரமாப்னோதி தத்விஷ்ணோ: பரமம்பதம் !!

என்று விஷ்ணுவை ப்ராப்யமென்றும், ஜீவனைப் ப்ராப்தாவாகவும் சொல்கிறது. இந்த "ருதம் பிபந்தௌ" என்ற மந்திரத்திலும், சாயாதபௌ என்று ஜீவனும், பரமாத்மாவும், அஜ்ஞனும், ஸர்வஜ்ஞனுமாக முறையே குறிப்பிடப்படுகின்றனர். ஆதலின், பரமாத்மாவே அத்தா, ஜீவனல்லன் என்று தேறுகிறது.

### ந. அந்தராதிகரணம்.

## 44, (ஸூ) அந்தர உபபத்தே: (13)

இப்படி ப்ரஹ்மத்திற்கு 'தம் துர்த்தர்சம் கூடம்', 'கஇத்தாவேத' என்று காணமுடியாதவன் என்று சொல்வதாலும், "ய ஏஷோऽக்ஷிணி புருஷோ த்ருச்யதே" என்று கண்ணின் உள்ளே காணக் கூடியவன் என்று சொல்வதாலும் பரமாத்மா வல்லன், என்று சங்கை தோன்ற அதனை இங்கு பரிஹரிக்கிருர்.

முன் அதிகரணத்தில் உபாசகனின் ஹ்ருதய குகையில் இருக்கும் புருஷன் பரமாத்மாவென்று நிருபிக்கப்பட்டது. அதில் உபாஸகனின் கண்ணில் இருக்கும் புருஷன் பரமாத்மா என்று நிருபிக்கப்படுகின்றது என்பது ஸங்கதி.

சாந்தோக்யம் நான்காம் அத்தியாயத்தில் உபகோஸல வித்யையில் "ய ஏஷோzக்ஷிணி புருஷோ த்ருச்யதே ஏஷ ஆத்மேதி ஹோவாச ஏததம்ருதம் அபயம் ஏதத் ப்ரஹ்ம" என்று கண்ணில் இருப்பதாகக் கூறப்படும், புருஷன், ப்ரதி பிம்ப ஸ்வரூபமா, சக்ஷுரிந்த்ரியத்திற்கு அதிஷ்டாதாவான தேவதையா? ஜீவாத்மாவா? பரமாத்மாவா? என்று நான்கு விதமான சம்சயம் - ப்ரதிபிம்ப ஸ்வரூபம் என்று முதல் பக்ஷம். 'ய ஏஷ' என்று ப்ரசித்தம்போல் சுட்டிக்காட்டுவதால், ஜீவனாகவும் இருக்கலாம். ஜீவனுக்கும் கண்ணினுள் சிறப்பாக இருப்பு பொருந்தும். கண் திறந்தால்தானே சரீரத்தில் ஜீவனுக்கு ஸ்திதியையும் கதியையும் ஜனங்கள் நிச்சயிக்கிறார்கள் கண்ணுக்கு அதிஷ்டான தேவதையுமாய் இருக்கலாம். சூர்ய தேவதையாக 'ரச்மிபிரேஷோzஸ்மின் ப்ரதிஷ்டித:' என்று வேதப் ப்ரசித்தியிருப்பதால் என்று பூர்வ பக்ஷம், இதற்கு விடையாக :-

## (ஸூ) அந்தர: உபபத்தே:

அந்தர: - கண்ணுக்குள் இருப்பவனான புருஷன் பரமாத்மாவே ஏனெனில், உபபத்தே: — 'ஏதத்அம்ருதமபயம் ஏதத் ப்ரஹ்ம - ஏதம் ஸம்யத் வாம இத்யாசதே, முதலிய வாக்யங்களில் கூறிய ஆத்மத்வம், அம்ருதத்வம், அபயத்வம், ப்ரஹ்மத்வம், ஸம்யத் வாமத்வம் முதலிய கல்யாணகுணங்கள் பரமபுருஷனுக்கே பொருந்துவதால் ; 'ஸம்யத் வாமத்வம்' என்பது சிறந்த சுகமான புருஷார்த்தங்களுக்கெல்லாம் இருப்பிடமாதல், (ஸம்யந்தி வாமாநி - ஸுகாநி என்று வ்புத்பத்தி) — வாமநீத்வம் — ஆச்ரிதர்களை அபீஷ்ட ஸுகங்களை யடைவித்தல் பாமநீத்வம் — எல்லையில்லா ப்ரகாசமுடைமை இந்த குணங்கள் பரமபுருஷனுக்கே கூடுவன என்பது திருவுள்ளம்.

## 45. (ஸூ). ஸ்தாநாதி வ்யபதேசாச்ச [14].

கண்ணிற்குள் ஸ்திதி - நியமனம் முதலியவை பரமாத்மாவுக்கே கூறப்படுகின்றன. "ய: சக்ஷுஷி திஷ்டன்" முதலிய ச்ருதிகளில் காணப்படுகிறான் என்று ப்ரத்யக்ஷமாகக் குறிப்பிடுவது யோகிகளால் காணப்படுகிறான் என்பதாகப் பொருந்துவதே.

## 46. (ஸூ) ஸுகவிசிஷ்டாபிதாநாதேவச [15].

கம் ப்ரஹ்ம, கம் ப்ரஹ்ம என்று ஸுகமயமாகக் கூறப்படும் ப்ரஹ்மத்தின் உபாஸனத்திற்கான ஸ்தானத்தை விதிப்பதற்காகவும், ஸம்யத், வாமத்வம்

முதலிய குணங்களை விதிக்கவும் - யஏஷோzக்ஷிணி புருஷோத்ருச்யதே என்று கூறப்படுகிறது. அதனுல் கண்ணை ஆதாரமாகக் கொண்டவன் புருஷோத்தமனே. இந்தவித்யையில் ஸத்ய காமர் என்கிற ரிஷி உபகோஸலர் என்ற சிஷ்யனுக்குத்தான் வேறு தேசம் செல்கையில், ப்ரஹ்மத்தை உபதேசிக்காமையால் வருந்தியிருக்க அவன் சுச்ருஷையால் மகிழ்ந்த த்ரேதாக்னிகள் அவனுக்கு - ப்ராணோ ப்ரஹ்ம, கம் ப்ரஹ்ம, கம் ப்ரஹ்ம என்று உபதேசித்தன: அந்த ப்ரஹ்மவித்தைக்கு அங்கமாக அக்னி வித்யையையும் உபதேசித்தன. பிறகு ஆசார்யன் வந்து அக்ஷிஸ்தானம், ஸம்யத்வா. மத்வாதிகுணங்கள், அர்ச்சிராதி மார்க்கம் அனைத்தையும், உபதேசித்தார்- ஆகவே நடுவில் கூறிய அக்னி வித்யை-ப்ரஹ்மவித்யைக்கு விருத்தமன்று, தன் அங்கம் தன்னை மறைக்காதென்பது நியாயம் என்று திருவுள்ளம்.

## 47. (ஸூ) அதஏவச ஸப்ரஹ்ம [13].

அதஏவச — யத்வாவ கம் ததேவகம் என்று அளவற்ற ஸுகஸ்வரூப மான ப்ரஹ்மத்தைச் சொல்லியிருப்பதாலேயே அந்த கம் எனும் ஆகாசம் — ப்ரஹ்மமே. ப்ரஸித்தாகாசமோ ப்ரஸித்த சுகமோ அன்று என்பதாம்.

## 48. (ஸூ) ச்ருதோபநிஷத்க கத்யபிதானுச்ச [17]

ச்ருதமான உபநிஷத்தை (ப்ரஹ்மம்) உடையவர்கள் — பகவதுபாஸகர்கள் அவர்களின் கதி — அர்ச்சிராதி மார்க்கம் — அதன் அபிதானத்தாலும் அக்ஷிபுருஷன் பரமாத்மா — தேzர்ச்சிஷமபிஸம்பவந்தி அர்ச்சிஷோzஹ: அஹ்ன ஆபூர்யமாண பக்ஷம் ஆபூர்யமாண பக்ஷாத்யான் ஷடுதங்ஙேதிமாஸான், மாஸேப்ய: ஸம்வத்ஸரம் ஸம்வத்ஸரா தாதித்யம், ஆதித்யாத் சந்த்ரமஸம், சந்த்ரமஸோ வித்யுதம், தத்புருஷோzமானவ: ஸ ஏனுன் ப்ரஹ்ம கமயதி ஏஷதேவ பதோ ப்ரஹ்ம பத: ஏதேன ப்ரதிபத்யமானு இமம் மானவம் ஆவர்த்தம் நாவர்த்தந்தே'' என்று அர்ச்சிராதிகதி உபதேசிக்கப்பட்டது.

## 49 (ஸூ) அனவஸ்திதே ரஸம்பவாச்ச நேதர: 11 (18)

அனவஸ்திதே: - ப்ரதிபிம்பாதிகளுக்குக் கண்ணில் எப்போதும் ஸ்திதி இல்லாததாலும் நிருபாதிகமான அம்ருதத்வம் முதலிய குணங்கள் - ப்ரதி பிம்பாதிகளுக்கு சம்பவியாது என்பதாலும், நேதர: - பிரதி பிம்பாதிகள் அக்ஷி புருஷனல்ல: ஆகவே, அக்ஷி புருஷன் என்பது பரம புருஷனேயாம்.

## (4) அந்தர்யாம்யதிகரணம்

### 50 (ஸூ) அந்தர்யாம்யதிதைவாதிலோகாதிஷு தத்தர்மவ்யபதேசாத் (18)

இதற்குமுந்தைய மூன்றதிகரணங்களும் ஒரு பேடிகை (பெட்டி) அவற்றில் உபாஸகனின் சரீரம், ஹ்ருதயம் முதலியவற்றில் குறிப்பிட்ட அளவு இடமுள்ள பரமாத்மாவே உபாஸ்யன் என்று கூறிப் பின் மூன்று அதிகரணங்களாலான ஒரு பேடிகையில் விஸ்தாரமான பிரதேசத்தோடுகூடிய பரமாத்மா உபாஸ்யன் என்று கூறுவது ஓர் சங்கதி. ஸ்தானுதிவ்யபதேசாச்ச என்னும் சூத்ரத்தில் கண்ணிற்குள் ஸ்திதி நியமனம் முதலியவற்ருல் அக்ஷிபுருஷன் பரமாத்மாவென்று சாதிக்கிருர். அந்த ஸ்திதி நியமனுதிகளை இவ்வதிகரணத்தில் ஸ்தாபிக்கிருர் என்று சங்கதி.

ப்ருஹதாரண்யகத்தில் உத்தாலகாருணி ப்ராஹ்மணத்தில் காண்வ பாடத்திலும், மாத்யந்தின பாடத்திலும் ய:ப்ருதிவ்யாம் திஷ்டன், ப்ருதிவ்யா அந்தரோ யம் ப்ருதிவீ நவேத, யஸ்ய ப்ருத்வீ சரீரம்; ய: ப்ருதிவீ மந்தரோயமயதி ஏஷதே ஆத்மாந்தர்யாம்யம்ருத: இத்யாதி வாக்யங்களாலே கூறப்படும் அந்தர்யாமீ ப்ரத்யகாத்மாவா (ஜீவனு) பரமாத்மாவா என்று சம்சயம். ப்ரத்யகாத்மாதானென்று பூர்வபக்ஷம். ஏனெனில், வாக்யசேஷத்தால் அத்ருஷ்டோ த்ரஷ்டா முதலியவற்ருல் கண் முதலிய இந்திரியங்களைக் கொண்டு ஏற்படும் ஜ்ஞானவானென்று சொல்வதால் என்னும் பூர்வ பக்ஷத்தை நிரஸனம் செய்கிருர் இந்த ஸூத்ரங்களால்.

அதிதைவாதிலோகாதி பதங்களால் குறிப்பிடும் வாக்யங்களில் பேசப்படும் அந்தர்யாமீ அபஹதபாப்மாவான (பாபமற்றவனுய்) பரமாத்மாவே-ஜீவனல்லன். ஏனெனில், தத்தர்மவ்யபதேசாத் - பரமாத்மாவிற்கே சிறப்பாய் உரிய தர்மங்கள் பேசப்படுவதால் என்றபடி, ஸர்வலோக ஸர்வபூத ஸர்வ தேவாதிகளையும் ஒருவனுய்ப் புகுந்து அந்தர்யாமியாய் நியமிக்கை - ஸ்ரீமந் நாராயணனின் தர்மமாக ப்ரஸித்தம் - அப்படியே உத்தாலகர் ஸர்வலோக பூதங்களையும் நியமனம் செய்யும் அந்தர்யாமியைப்பற்றி எனக்குக்கூறுக எனக் கேட்கிருர்,

### 51 (ஸூ) நச ஸ்மார்த்தம் அதத்தர்மாபிலாபாத் சாரீரச்ச

ஸ்மார்த்தம் - கபிலஸ்ம்ருதியில் கூறப்பட்ட ப்ரதானம், சாரீர :- ஜீவன், இந்த இரண்டும் - நச - அந்தர்யாமியல்ல - ஏனெனில், அதத்தர்மாபிலாபாத் - ஜீவனுக்கும் - ப்ரதானத்துக்கும் ஸம்பவிக்காத ஸர்வ நியாமகத்வம் போன்ற தர்மங்களைப் பேசுவதால், எப்படி அசேதனமான

ப்ரதானம் ஸர்வஜ்ஞத்வாதிகள் கூடாமையாலே அந்தர்யாமியன்றே அப்படியே சாரீரனும் (ஜீவனும்) அந்தர்யாமியல்லன் என்று கருத்து.

## 52 (ஸூ) உபயேऽபி ஹி பேதேனைநம் அதீயதே

உபயே பி ஹி - காண்வர்களும் - மாத்யந்தினர்களும், ஏநம் - இந்த அந்தர்யாமியை, பேதேந :- ஆத்மநியந்தாவென்றும் - நியாம்யன் என்றும் பேதத்தாலே, அதீயதே - யஆத்மனி திஷ்டன் இத்யாதி வாக்யங்களிலே படிக்கிறார்கள். ஆதலின், அந்தர்யாமி என்பவன் ஸ்ரீமந் நாராயணனே என்பது உறுதியாகிறது.

## (5) (ஸூ) (அத்ருச்யத்வாதிகரணம்)

## 53. (ஸூ) அத்ருச்யத்வாதிகுணகோ தர்மோக்தே:

முன் அதிகரணத்தில் அந்தர்யாமி வித்யையில் பரமபுருஷனுக்கு ஜீவநியாமகத்வம், அத்ருஷ்டமாய் த்ரஷ்டாவாதல் (பிறரால் காணப்படாமல் தான் காண்பவனாதல்), இவை கூறப்பட்டமையால் ஜீவன் அந்தர்யாமி யல்லன் எனப்பட்டது. பரவித்யையில் இத்தகைய அத்ருஷ்டனைய் த்ரஷ்டா என்று கூறப்படவில்லை. அத்ருச்யன் (காணமுடியாதவன்) என்று மட்டும் கூறப்பட்டுள்ளது ஆதலின், அத்ருச்யனையும், அக்ஷராத் பரத: பரனையும் உள்ளவர், ப்ரக்ருதி அல்லது ஜீவனையாகக் கூடும் எனும் சந்தேகத்தால் ஸங்கதி.

அதர்வசிகையில் - முண்டகோபநிஷத்தில் - பரவித்யையில் அத பராயயா ததக்ஷரமதிகம்யதே, யத்ததத்ரேச்ய மக்ராஹ்யம், அக்ஷராத்பரத: பர: என்னும் வாக்கியங்களில் சொல்லிய அத்ருச்யத்வம் முதலான குணங்களையுடையதும், அக்ஷராத்பரத: பர: எனப்படுவதும் ப்ரக்ருதி ஜீவர்களா? இரண்டும் பரமாத்மாவைக் குறிப்பனவா? என்று சந்தேஹம். ப்ரக்ருதியும், புருஷனுமேயென்று பூர்வபக்ஷம். ஏனெனில், இந்த அக்ஷரத்திற்கு, அத்ருஷ்டோ த்ரஷ்டா முதலியவை போலே த்ரஷ்ட்ருத்வாதிகளான சேதன தர்மங்கள் சொல்லவில்லை. மேலும் அக்ஷராத் பரத: பர: என்று ஸர்வ விகாரங்களைக் காட்டிலும் பரமாய் அக்ஷரம் என்று சொல்லப்படும் ப்ரதானத்தைக் காட்டிலும் பரனான ஜீவனென்னும் ஸமஷ்டி புருஷன் விளக்கப்படுகிறான். புருஷனால் அதிஷ்டிதமான பிரதானமே மஹத் முதலிய விகாரங்களின் ஹேது என்ற பக்ஷத்தை இங்கு கண்டிக்கிறார்.

## (ஸ) அத்ருச்யாத்வாதி குணகோதர்மோக்தே:

அத்ருச்யத்வாதி குணங்களையுடையவனும், அக்ஷராத் பரத: பரனும், பரமாத்மாவே; தர்மோக்தே: - 'யஸ் ஸர்வஜ்ஞ: ஸர்வவித்' முதலிய வாக்கியங்களில் ஸர்வஜ்ஞத்வம் முதலான தர்மங்கள் சொல்லப்படுவதால், இங்கு அத்ருச்யத்வாதி குணக: என்று புல்லிங்கத்தால் அக்ஷராத் பரத: பர: என்ற வாக்யமும் இங்கு விஷயம் என்று குறிப்பால் உணர்த்தப்பட்டது

## 54 (ஸூ) விசேஷண பேதவ்யபதேசாப்யாஞ்ச நேதரௌ

"கஸ்மின்னு பகவோ விஜ்ஞாதே இதம் ஸர்வம் விஜ்ஞாதம் பவதி" முதலிய இடங்களில் காரணத்தையறிவதால் கார்யப் பொருளனைத்தும் அறியப் படலாம் என்ற ப்ரதிஜ்ஞையால் இந்த பூதயோனியான அக்ஷரத்தை விசேஷ்ய மாகக் குறிப்பதாலும், அக்ஷராத் பரத: பர: என்று பேதத்தைக் குறிப்பதாலும் நேதரௌ - ப்ரதானமும் ஜீவனும் குறிப்பிடப்படவில்லை. இங்கு யயாததக்ஷரம் என்று ப்ரஹ்மம் கூறப்படுகிறது. அக்ஷராத் பரத: பர: என்ற இடத்தில் ஐந்தாம் வேற்றுமையீருன அக்ஷர பதத்தால் ப்ரதானம் கூறப்படுகிறது. ப்ரதானத்தைவிடப் பரனுன ஜீவனைவிட மேம்பட்டவன் என்று இவ்வாக்யம் பரமாத்மாவைக் குறிப்பதாம்.

## 55 (ஸூ) ரூபோபந்யாஸாச்ச (24)

அக்நிர் மூர்த்தா சக்ஷுஷீ சந்த்ர ஸூர்யௌ. திச: ச்ரோத்ரே - வாக்விவ்ருதாச்ச வேதா: வாயு: ப்ராணோ ஹ்ருதயம் என்ற வாக்யத்தில் விச்வரூப உபன்யாஸத்தாலும், பரம புருஷனே அத்ருச்யத்வாதி குணகன் - அக்ஷராத் பரத: பரனென்றும் நிரூபிதமாயிற்று.

## 5. (வைச்வாநராதிகரணம்)

## [56 ஸூ] வைச்வாநர: ஸாதாரண சப்த விசேஷாத் 25

இப்படி கூறப்பட்ட விச்வரூபம் ப்ரஹ்மத்தைத் தவிர வைச்வாநர னுக்கும் கானப்படுவதால் இந்த ரூபத்தால் பரப்ரஹ்மத்தைச் சாதிக்க முடியாது என்று சங்கித்து - அந்த வைச்வாநரனும் பரமாத்மாவேயென்று சாதிக்கிருர் என்று சங்கதி.

மேலும் "ரூபோபன்யாஸாச்ச" என்ற சூத்ரத்தில் விச்வ ரூபோபன்யாஸத்தாலே த்யுமூர்த்தத்வாதி (ஆகாயமேதலை) கல்பனையாலும், பகவானுக்குப் பரமபுருஷத்வம் சாதிக்கப்பட்டது. இந்த அதிகரணத்தில்

ஷெ கல்பனையால் வைச்வாநரன் என்பதும் பரமபுருஷன் என்று ஸ்தாபிக்கப் படுவதால் ப்ரஸங்க ஸங்கதி.

சாந்தோக்யம் ஐந்தாமத்யாயத்தில் ''ஆத்மானமேவ இமம் வைச்வாநரம் ஸம்ப்ரத்யத்யேஷி. தமேவநோ ப்ரூஹி என்று தொடங்கி, ''யஸ்த்து ஏதமேவம் ப்ராதேசமாத்ரம் அபிவிமானம் வைச்வாநரம் உபாஸ்தே'' என்ற வாக்யத்தில் சொன்ன வைச்வாநரம் பரமாத்மா என்று தீர்மானிக்கலாமா கூடாதா என்று சம்சயம். கூடாதென்று பூர்வபக்ஷம். ஏனெனில், வைச்வாநர சப்தத்திற்கு நான்கு அர்த்தங்களில் பிரசித்தியுள்ளது. ஜாடராக்னியும், பஞ்ச பூதங்களில் மூன்ருவதான நெருப்பிலும், அக்னி தேவதையிலும், பரமாத்மாவிலும் ப்ரயோகமிருப்பதால் ஒரு தரப்பாக தீர்மானிக்க முடியாது என்ற பூர்வ பக்ஷத்திற்கு உத்தரம்.

## ஸூ வைச்வாநர: சாதாரண சப்தவிசேஷாத்:

வைச்வாநரம் என்பது பரமாத்மாவே. ஏனெனில், நான்கு பொருட்களுக்கும் சாதாரணமான இந்த சப்தத்தை இங்கு பரமாத்மாவிற்கு (அசாதாரண தர்மங்களாலே) விசேஷமாகச் சொல்கையால்; அந்த தர்மங்களாவன: ஔபமன்யவர் முதலிய மஹர்ஷிகள் ஐவர் உத்தாலகரிடம் நமக்கு ஆத்மா யார்? எது ப்ரஹ்மம்? என்று கேட்டு வந்தனர். பூஜ்யர்களே! இந்த கேகய மன்னன் இந்த வைச்வாநரம் என்னும் ஆத்மாவை உபாஸனம் செய்கிருர். அவரிடம் சென்று விசாரிப்போம் என்று கூறினர். இவ்விடம் நம் ஆத்மா யார்? என்று கேட்கையில், ஜீவன் ஆத்மா இல்லையென்பதும் ப்ரஹ்மமெனவும் தொடங்கப்பட்டது. ஆத்மானம் வைச்வாநரம் என்கிறவிடத்தில் ப்ரஹ்ம சப்தத்தின் ஸ்தானத்தில் வைச்வாநரம் என்ற சப்தம் ப்ரயோகிக்கப்பட்டது. ஆதலின், ஆத்மத்வமும் வைச்வாநரனுக்கே தோன்றுகிறது. மேலும் முடிவில் வைச்வாநராத்ம விஜ்ஞான பலம் கூறுவதும் வைச்வாநராத்மாவை பரமாத்மாவென்று தோன்றச் செய்கிறது. இதனலும் வைச்வாநரம் பரமாத்மாவே.

## 57. ஸூ ஸ்மர்யமாணம் அநுமானம் ஸ்யாதிதி

த்யுலோகம் முதல் ப்ருதிவீலோகம்வரை வைச்வாநரனுக்கு மூர்த்தாதி அவயவமாக உபதேசிக்கப்படுகிறது. இந்த ரூபம் - ச்ருதியிலும் ஸ்ம்ருதிகளிலும் பரம புருஷனின் ரூபமாக ப்ரசித்தம். இதி சப்தம் ப்ரகாரத்தைச் சொல்லுகிறது. இதி ஸ்மர்யமணம் - இந்த ப்ரகாரமான ரூபம். இந்த வைச்வாநர வித்யையில் ஸ்மரிக்கப்படுவதாய்க் கொண்டு வைச்வாநரன் பரமாத்மாவே என்பதில் அநுமானம் ஸாதகலிங்கமாகின்றது. ஆதர்வணத்தில்

அக்நியே மூர்த்தா, சந்த்ர ஸூர்யர்களே கண்கள் என்று முன் ச்ருதி காட்டப்பட்டது. ஸ்ம்ருதியாவது - யஸ்யாக்னிராஸ்யம் - த்யெளர் மூர்த்தா கம் நாபி: சரணௌ க்ஷிதி: ஸூர்யச் சக்ஷு: திச: ச்ரோத்ரம், தஸ்மை லோகாத்மனே நம: என்று பாரதத்தில் உள்ளது. இந்த வித்யையிலும் த்யெளர் மூர்த்தா எனத்தொடங்கி மேலே சொல்லப்படுகிறது. ஆகையால், இத்தகைய தலை முதலியனகொண்ட வைச்வாநரன் பரமபுருஷனேயென்பது கருத்து. இதில் மேலும் பரிஹாரம் கூறுகிறார்

## 58. (ஸூ) சப்தாதிப்யோऽந்த: ப்ரதிஷ்டானாச்ச நேதிசேந்த தததாத்ருஷ்ட்யுபதேசாத் அஸம்பவாத் - புருஷமபி சைவமதீயதே

வைச்வாநரன் பரமாத்மாவல்லன்: சப்தாதிப்ய: - அக்னி சப்தம், த்ரேதாக்னி கல்பனம், ப்ராணாஹுதிக்கு ஆதாரமாதல், சரீரத்துக்குள் நிலைபெறல், இவற்றால், ஜாடராக்னியே வைச்வாநரம் என்று தோன்றுகிறது. அதாவது :- வாஜஸனேயகத்தில் வைச்வாநர வித்யாப்ரகரணத்திலே அக்னியை வைச்வாநரன் என்று கூறுகிறது. சாந்தோக்யத்தில் ஹ்ருதயம் முதலான இடங்களிலுள்ள வைச்வாநரனுக்கு மூன்று அக்னிகள் கல்பிக்கப்படுகின்றன. ப்ராணாஹுதிக்கு ஆதாரமென்றும் மேலே கூறப்படுகிறது. ஆதலால் பரமாத்மாவை வைச்வாநரன் என்று கூறல் இயலாது என்ற சங்கையைப் பரிஹரிக்கிறார். இதிசேந்ந - என்று. **தததாத்ருஷ்ட்யுபதேசாத் -** அப்படி ஜாடராக்னியை சரீரமாகக் கொண்டவன் என்று பரமாத்மாவை உபாஸிக்க விதிப்பதனால்: அக்னி சப்தம் முதலியவற்றால் கேவலம் ஜாடராக்னி தோன்றவில்லை.

**அஸம்பவாத் :** கேவலம் ஜாடரனுக்கு த்ரைலோக்யத்தையும் சரீரமாகக் கொள்ளுதல் முதலியன ஸம்பவிக்கக் கூடாமையால்: கீதையில் - நான் வைச்வாநரனாகி ப்ராணிகளின் சரீரத்தையாச்ரயித்திருக்கிறேன்' என்றதற்கும், ஜாடரானலத்தைச் சரீரமாகக் கொண்டு என்று பொருள். ஆக அக்னி சரீரகனாக உபாஸிக்கவேண்டும் என்று உபதேசிக்கப்படுகிறது.

**புருஷமபிசைனம் அதீயதே:** இந்த வைச்வாநரனை வாஜஸனேயிகள் - வைச்வாநர புருஷனாகப் படிக்கிறார்கள். நிருபாதிக புருஷன் பரமாத்மா தான் " ஸஹஸ்ர சீர்ஷா புருஷ: " என்று ஓதப்படுகிறது.

## 59. (ஸூ) அதரவ ந தேவதா பூதஞ்ச

மேற்கூறிய காரணங்களாலேயே அக்னி தேவதையும் நெருப்பு என்ற மஹாபூதமும் வைச்வாநரமல்ல.

## 60. ஸூ ஸாக்ஷாதப்ய விரோதம் ஜைமினி:

'ஸ ஏஷோऽக்நிர் வைச்வாநர:' என்னுமிடத்தில் அக்னி சப்தம் அக்னி சரீரக பரமாத்ம பரம் என்று பாதராயணரின் திருவுள்ளம். ஆனால் ஜைமினியோ 'அக்நி' என்பது 'அக்ரம் நயதி' என்றபடி விரித்துப் பொருள் கொள்ளும் முறையால் நேராகவே பரமாத்மாவைக் குறிப்பதென்று கருதுகிறார். அப்படியே விச்சே ச தே நராச்ச விச்வநரா: தேஷாம் அயம் (நேதா) வைச்வாநர: என்று விரித்துக் கூறுவதால் அது நேரே பகவானைக் குறிப்பதாகும் என்பதும் அவர் கருத்து.

"யஸ்த்வேத மேவம் - ப்ராதேசமாத்ரம் அபிவிமானம்" என்று நாற்புறமும் அளவற்ற ப்ரஹ்மத்துக்கு தேவலோகத்திலிருந்து பூமி வரை அளவுள்ளதென்று கூறுவது உபாஸகர்களுக்கு அபிவ்யக்தி (தெளிவு) ஏற்படவேயென்று ஆச்மரத்யர் கூறுகிறார்.

தலையிலிருந்து பாதம் வரை அவயவ விசேஷங்கள் உடைய புருஷனாய் விளக்கியது. மோக்ஷம் விரும்புவோர் அப்படி உபாஸிக்கவேண்டும் என்பதற்காக என்று பாதரி கருதுகிறார். அதுவும் தவறன்று. இங்கு ஓர் சங்கை தோன்றுகிறது. வைச்வாநரன் பரமாத்மாவானால், மார்பு முதலியவற்றை வேதி (திண்ணை) முதலியவையாகக் கல்பனை செய்தது எப்படி பொருந்தும்? ஜாடராக்னியை வைச்வாநரன் என்று கொண்டால்தான் அக்கல்பனையெல்லாம் பொருந்தும் என்பதே சங்கை அதற்கு விடை.

## 62 (ஸூ) ஸம்பத்தேரிதி ஜைமினி: ததாஹிதர்சயதி

ஸம்பத்தே: -இந்தவைச்வாநர வித்யைக்கு அங்கமான ப்ராணாஹுதிக்கு அக்நி ஹோத்ரத்வத்தை நிரூபிப்பதற்காக - (மார்பு முதலியவை வேதி முதலியவையாக உபதேசிக்கப் பெற்றன) என்று ஜைமினி கூறுகிறார். ததாஹி தர்சயதி - பரமாத்மோபாசனம் ஸர்வ பாப நிவர்த்தகம் என்றும், ப்ராணாஹுதியே அக்னிஹோத்ரம் என்றும் சுருதியே காட்டுகிறது. அதய ஏததேவம் வித்வான் அக்னிஹோத்ரம் ஜுஹோதிதஸ்ய ஸர்வேஷு, லோகேஷு, பூதேஷு, ஸர்வேஷு, ஆத்மஸு,ஹுதம் பவதி, தத்யதா இஷீகதூலம் அக்னௌ ப்ரோதம் ப்ரதூயேத ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மான: ப்ரதூயந்தே. என்றபடி.

## 63 (ஸூ) ஆமனந்தி சைநம் அஸ்மின்

ஏநம் - இந்த பரமபுருஷனை அஸ்மின் - இந்த உபாஸகனின் சரீரத்தில் - ப்ராணாஹுதியின் ஆதாரமாக, ஆமனந்தி - வேதங்கள் பேசு

கின்றன. தஸ்யஹவா ஏதஸ்யாத்மந: வைச்வாநரஸ்ய மூர்த்தைவ ஸுதேஜா: முதலிய வாக்யங்கள் மூலமாக - முன் உபாஸிக்க வேண்டியதாகக் கூறிய உபதேசிக்கப்பட்ட வைச்வாநரனுக்கு இந்த உபாஸகனின் தலையே - ஸுதேஜஸ் எனப்பெயர்கொண்ட தேவலோகம்; அவன் கண்ணே உபாஸ்ய தேவதையின் ப்ருதக் வர்த்மா என்ற பெயருள்ள ப்ராணன்.

உபாஸகனின் மத்யகாயம் (இடைப்பகுதி) பரமாத்மாவின் இடையான பஹுளம் எனும் ஆகாசம், இவனது வஸ்தியே அவனுடைய வஸ்தியான ரயி எனப்படும் நீர் (அப்பு) இவனுடைய பாதங்களே அவன் பாதங்களான ப்ரதிஷ்டையெனப்படும் ப்ருதிவீ என்று பொருள். இவ்வாறே உபாஸகன் தன் சரீரத்திலே பரமாத்மாவை அனுஸந்தித்து ப்ராணுக்நி ஹோத்ரத்தாலே வைச்வானரனென்னும் பரமாத்மாவை ஆராதித்து உபாஸிக்க வேண்டும் என்பதாம். ஆதலின், பரமாத்மாவான புருஷோத்தமனே வைச்வாநரன் - என்று முடிவு பெறுகிறது. பரப்ரஹ்ம உபாஸனத்தால்தான் மோக்ஷம் கிட்டும் என்பது பிரஸித்தம். இவ்விடம் ஸ்வர்க்கலோகம், சூர்யன், வாயு, ஆகாசம், நீர், பூமி இவைகளில் பரமாத்மா என்று த்ருஷ்டி பண்ணியும்-உபாஸகன் சரீரத்திலே உபாஸ்ய ஸ்வரூபமாக த்ருஷ்டி பண்ணியும் உபாஸனம் செய்யுமாறு விதிக்கப்பட்டிருக்கிறது. இது தன்னைக் கருடன் என்று தெரிந்து கொள்ளவேண்டும் என்பது போலவும், நாமத்தை ப்ரஹ்மமென்று உபாஸிக்க வேண்டுமென்பது போலவும், ஒன்றை மற்றொன்றாக எண்ணும் ப்ராந்தியாதலின் தத்வஜ்ஞான மாகாதபடியால் - இது எவ்வாறு முக்திக்கு ஹேதுவாகும் என்பது ஆக்ஷேபம்.

இங்கு ப்ரஹ்மமென்னும் த்ருஷ்டியுடன் வேறு பொருள் ப்ரதானமாக த்யானிக்கவோ உபாஸிக்கவோ வேண்டுமென்று விதிக்கவில்லை. ஸ்வர்க்கத்தை தலையாகவும், இம்மாதிரி ஸ்வரூபமும் கொண்ட ப்ரஹ்மமே ப்ரதானமாக த்யேயம் ஆதலால், அன்யப் பொருளை ப்ரதான த்யேயமாக விதிக்கவில்லை என்பதால் மேற்படி சங்கைக்கு இடமேயில்லை.

இந்த இரண்டாம் பாதத்தின் அதிகரணங்களது கருத்து :-

1 ஸர்வத்ரப்ரதீஸித்தாதிகரணத்தில் தனக்கதீனமாக ஜகத்தின் இருப்பு முதலியவற்றைக் கொண்டு ஸர்வபாவத்துடன் இருப்பது என்ற கல்யாண குணம்.

2 அத்ரதிகரணத்தில் - உலகுண்ட பெருவாயனெனும் மங்கள குணம்.

3 அந்தராதிகரணத்தில் - கண்ணில் எப்போதும் நிலைபெற்றிருத்தல் என்ற திருக்குணம்.

4 அந்தர்யாம்ய அதிகரணத்தில் - ஸர்வத்தையும் சரீரமாகக் கொண்டமை என்ற கல்யாண குணம்.

5 அத்ருச்யத்வாதிகரணத்தில் - கல்பிதமான அக்ன்யாதி சரீரகத்வம் என்ற குணம்.

6 வைச்வாநராதிகரணத்தில் ஸ்வர்லோகாதிகளை அங்கமாய்க் கொண்ட வைச்வாநரன் என்னும் பதத்திற்கு விஷயமாதல் என்ற கல்யாண குணம்

என இவை முறையே ஆறு அதிகரணங்களிலும் விளங்குகின்றன, என்பது ஸ்வாமி தேசிகனின் அருள் மொழி.

இரண்டாம் பாதம் முற்றிற்று



## (47) முதல் அத்யாயம் மூன்றும் பாதம் த்யுப்வாத்யதிகரணம்

## (64) (ஸூ-௧) த்யுப்வாத்யாயதனம் ஸ்வசப்தாத் 1

சென்ற இரு பாதங்களால் அஸ்பஷ்டதரமாயும், அஸ்பஷ்டமாயுமுள்ள ஜீவாதிகளின் லிங்கங்களைக் கொண்ட வாக்யங்கள் நிரூபிக்கப்பட்டன. பின் இரண்டு பாதங்களால் ஸ்பஷ்டமாயும், ஸ்பஷ்டதரமாயுமுள்ள, ஜீவாதி லிங்கங்களையுடைய வாக்யங்கள் நிரூபிக்கப்படும். இப்பாதத்தில் ஸ்பஷ்டமான பலவாறு தோன்றல். நாடீ சம்பந்தம் முதலிய லிங்கங்களேயுடைய வாக்கியங்கள் நிரூபிக்கப்படவிருக்கின்றன. ஆதலின், முன் பாதத்தோடு ஸங்கதி. முன் அதிகரணத்தில் த்யுப்ருதிவ்யாதி ஸம்பந்தி புருஷன் பரமாத்மாவேயென்று கூறப்பட்டது. அதனை இவ்வதிகரணத்தில் பலவாறு தோன்றுதல் - நாடீ சம்பந்தம் முதலிய லிங்கங்களால் ஆக்ஷேபித்து ஜீவனுகத்தானிருக்கக்கூடுமென்று பூர்வபக்ஷம் செய்ய, அதற்கு உத்தரம் தருகிருர் என்று ஸங்கதி.

மேலும், அத்ருச்யத்வாதிகரணத்தில் முண்டக வாக்யங்களுக்கு த்ரைலோக்ய சரீரபரமாத்மபரத்வம் ஸ்தாபிக்கப்பட்டது. அதையொட்டி வைச்வாநராதி கரணத்தில், சாந்தோக்யத்திலுள்ள வைச்வாநர வித்யா வாக்யங்களுக்கும், த்ரைலோக்ய சரீரத்வம் எனும் லிங்கத்தால் வைச்வாநர ரூப ஜீவ பரத்வத்தை சங்கித்து பரமாத்மபரத்வமே ஸ்தாபிக்கப்பட்டது. இந்த அதிகரணத்திலே, ப்ரஸங்கத்தால் ப்ராப்தமான வேறு உபநிஷத்தின் வாக்கிய விசாரம் முடிந்தவுடன், அத்ருச்யத்வாதிகரண விஷயத்தை ஸ்தாபிப்பதாக அதன் சேஷமாக முண்டகத்திலுள்ள த்யுப்வாதி வாக்யமே இங்கு சமாதானம் செய்யப் படுகிறது. முதல் பாதத்தைவிட்டு மூன்ரும் பாதத்தில் அது ஏன் சொல்லப் படுகிறது ?' என்ருல் விலக்கத்தக்க ஜீவலிங்கங்கள் இங்கு ஸ்பஷ்டமாயிருப்பதால் அது பொருந்துவதாகும், இதற்கு 'ப்ரகரணுத்' என்னும் சூத்திரத்தில் பலன் ஸ்பஷ்டமாயுள்ளது.

அதர்வணத்தில் - முண்டகத்தில் "யஸ்மின் த்யௌ: ப்ருதிவீ சாந்தரிக்ஷஞ்ச" எனத் தொடங்கும் வாக்கியத்தில் தேவலோகம் ப்ருதிவீ முதலியவை கட்கு ஆதாரமாகக் கூறப்படுபவன் ஜீவனு பரமாத்மாவா என்று சம்சயம்.

ஜீவனென்று பூர்வபக்ஷம் - ஏனெனில், "அரா இவரதநாபௌ ஸம்ய தாயத்ர நாட்ய:", ஸஏஷோऽந்தச்சரதே பஹுதா ஜாயமான: என்னும் மேல் ச்லோகத்திலும், இந்தச் ச்லோகத்திலும், நாடீ சம்பந்தமும், பஹுதா ஜாயமாநத்வமும் மன: ப்ராண சம்பந்தமும் ஜீவலிங்கங்களாக காணப் படுவதாலே ஜீவனேயாகலாம் என்பதாம். இதற்கு விடை.

## (ஸூ) த்யுப்வாத்யாயதனம் ஸ்வசப்தாத்.

த்யுப்ருதிவீ ஆதிகளுக்கு ஆயதனமாகக் கூறப்படுபவன் பரமாத்மாவே, ஜீவன் அல்லன்.

**ஸ்வசப்தாத்**-அம்ருதஸ்ய ஏஷ ஸேது: என்றபடி தனக்கே அசாதாரண மான சப்தத்தால் கூறுகிற தமேவம் வித்வான் அம்ருத இஹ பவதி, நான்ய: பந்தா: இத்யாதிகளில் மோக்ஷ ஹேதுத்வம் பரம புருஷனுக்குத்தானே பிரஸித்தமாயுள்ளது.

## 65 (ஸூ) முக்தோபஸ்ருப்ய வ்யபதேசாச்ச (2)

இந்த த்யு ப்ருதிவ்யாதிகளை ஆயதனமாகக் கொண்டவனெனக் கூறப் பட்டவன். **முக்தர்களுக்கு உபஸ்ருப்யன்** - ப்ராப்யன், என்று வ்யபதேசத்தால் சொல்லப்படுவதாலும் - பரமபுருஷன் த்யுப்வாத்யாயதனம் - யதா பச்ய: பச்யதே ருக்மவர்ணம் கர்த்தாரமீசம் புருஷம் ப்ரஹ்மயோனிம் ததா வித்வான் புண்ய பாபே விதூய நிரஞ்ஜன: பரமம் ஸாம்ய முபைதி - இது முதலிய இடங்களில் முக்தனுக்குப் ப்ராப்யனென்று சொல்லப்படுகிறது.

## (ஸூ) நாநுமாநமதச் சப்தாத் ப்ராணப்ருச்ச (3)

இந்தப் பிரகரணத்தில் **அநுமானப்** பிரமாண கம்யமான ப்ரதானம் ந - த்யுப்வாத்யாயதனமாகாது. **அதத் சப்தாத்** அந்த ப்ரதானத்தைக் குறிக்கும் சொல் இல்லாமையால் ; **ப்ராண ப்ருச்ச ந** - இவ்வாறே ஜீவனுமாகமாட்டான்.

## 67 (ஸூ) பேதவ்யப தேசாச்ச (4)

"ஸமானே வ்ருக்ஷே புருஷோ நிமக்னோऽநீசயா சோசதி முஹ்யமான: ஜுஷ்டம் யதா பச்யத்யன்ய மீசம் அஸ்ய மஹிமானம் இதி வீதசோக:" முதலிய வாக்யங்களில் ப்ரக்ருதிக்கு அதீனனான இந்த ஜீவனின் சோகத்தை நீக்குபவனாக இந்த த்யுப்வாத்யாயதனனை வேறுபடுத்திக் கூறுவதாலும் அந்த ஆயதனன் ஜீவன் அல்லன்.

## 68 (ஸூ) ப்ரகரணாத் (5)

இந்தப் ப்ரகரணம் பரப்ரஹ்ம விஷயகம் என்று அத்ருச்யத்வாதி கரணத்தில் விளக்கப்பட்டது. இங்கும் சொல்வானேன்? என்றால் நாடீ ஸம்பந்தம், பஹுதா ஜாயமானத்வம், மனஸ் - ப்ராணன்களின் ஆதாரத்வம் என்பவற்றால் நடுவில் பரப்ரஹ்ம ப்ரகரணத்திற்குத் தடை (இடையூறு) ஏற்பட்டு விட்டதோ என்ற சங்கையைத் தீர்க்கவே இந்த அதிகரணம் ஆரம்பிக்கப்படுகிற தென்று கருத்து.

## [69] (ஸூ) ஸ்தித்யதனுப்யாம் ச [6]

த்வா ஸுபர்ணு ஸயுஜா ஸகாயா ஸமானம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே
தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத்வத்தி அநச்நன் அன்யோऽபிசாகசீதி.

என்று ஜீவனுக்கு கர்ம பலங்களை யனுபவித்தலேயும், அதனையனுபவியாமலே ப்ரகாசமாயுள்ள பரமாத்மாவிற்கு உடலினுள் இருப்பையும் சொல்லுகையாலே த்யுப்வாத்யாயதனம் பரமாத்மாவேயென்று உறுதிப்படுகிறது. அஜாயமானு பஹுதா விஜாயதேயென்றபடி ராம க்ருஷ்ணதி அவதாரங்கள் பலவற்றுடன் தோற்றமும் நாடீ ஆதாரத்வாதிகளும் பரம புருஷனுக்கே பொருத்தமென்பது கருத்து.

## பூமாதிகரணம் (32)

## 70 (ஸூ) பூமா ஸம்ப்ரஸாதாத் அத்யுபதேசாத் (7)

பரமாத்ம ப்ரகரணத் தொடர்ச்சியாலே, முண்டகோபநிஷத்தில் அடி முதல் முடிவு வரை, பரமாத்ம பரமென்று நிறுவப்பட்டது. அப்படியாகில் சாந்தோக்யத்தில், பூமவித்யையில் ஜீவப்ரகரணத் தொடர்ச்சியாலே ஜீவன் நிரூபிக்கப்படுகிருன் என்று பூர்வபக்ஷம் தோன்றவே ப்ரமாணங்களின் மூலம் நிறுவுகிற இந்த அதிகரணம் பொருந்துகிறது.

முன் அதிகரணத்தின் விஷயமாக முண்டக உபநிஷத்தில் உள்ள யேநாக்ஷரம் - புருஷம் வேத ஸத்யம் என்று ஸத்ய அக்ஷர சப்தங்களால் குறிக்கப்படும் பரமபுருஷனே ஸத்ய சப்த வாச்யன் என்பதை இவ்வதிகரணத்தில் சாதிக்கிருர் என்பது ஸங்கதி.

சாந்தோக்யத்தில் ஏழாம் அத்தியாயத்தில் "யத்ர நாந்யத் பச்யதி நான்யத் ச்ருணேதி நாந்யத் விஜாஞதி ஸ பூமா" முதலிய வாக்கியத்தில் பூம குணத்துடன் கூடியவன் ப்ரத்யகாத்மாவா (ஜீவனு) அல்லது பரமாத்மாவா என்ற சந்தேஹத்தில் ப்ரத்யகாத்மாதான் என்று பூர்வபக்ஷி கூறுகிருர். ஏனெனில், ஆத்மாவை அறிய விரும்பும் நாரதருக்கு ஸநத் குமாரர், நாமம் முதல் ப்ராணன் வரை பலவற்றையும் உபாஸிக்கத் தக்கவையாக உபதேசித்தார் நாமத்தைவிடச் சிறந்தது உள்ளதா? வாக்கைவிடச் சிறந்தது உள்ளதா? என்ற வினுக்களும், வாக்கு நாமத்தை விடப் பெரியது - மனம், வாக்கை விடப் பெரியது முதலிய விடைகளும் ப்ராணனை உபதேசிப்பதற்கு முன்னர் காணப்படுகின்றன. பின்னர் ப்ராணனை விட எது பெரியது என்று வினுவோ, விடையோ காணப்படவில்லை. ஆதலால், ப்ராணன் என்னும் ஜீவன்வரையிலுமே ஆத்மோபதேசம் என்று தோன்றுகிறது. இதற்குமேல் சொல்லும் பூமா என்பதும் ப்ரத்யகாத்மாவே என்பது பூர்வபக்ஷம்,

## ஸித்தாந்தம்.

## (ஸூ-ஒ) பூமா ஸம்ப்ரஸாத தத்யுபதேசாத்:

பூமகுண விசிஷ்டன் பரமாத்மாவே, ஏனெனில், ஸம்ப்ரஸாதனென்னும் ஜீவனைவிட உயர்ந்தவனை ஸத்யம் எனப்படும் பரமபுருஷனையே உபதேசிக்கையால் ... "ஏஷ ஸம்ப்ரஸாதோzஸ்மாத் சரீராதுத்தாய பரம் ஜ்யோதி ரூப ஸம்பத்ய ஸ்வேன ரூபேண பிநிஷ்பத்யதே" என்று உபநிஷத்திலே ஸம்ப்ர ஸாதன் என்று ஜீவனைச் சொல்வதால் - அவனுக்கு மேல் குணம் நிறைந்தவனுயுள்ள பரமபுருஷனையே இங்கு உபதேசிப்பதால், ஏஷது வா அதிவததி ய: ஸத்யேந அதிவததி - ஸுகம் த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்யம்; 'பூமாத்வேவ விஜிஜ்ஞாஸிதவ்ய:' என்று ஏராள ஸுகம் உடையவனுய் ஸத்யம் எனப்படு பவனுய் உள்ள பரமபுருஷனை உபதேசிப்பதால், 'பூமா' எனப்படுபவன் பரமாத்மாவே என்று தேறுகிறது. ப்ராண சப்தத்தின் பொருளே ஆத்மாவென எண்ணி, ப்ராணனைவிடப் பெரியது உள்ளதா? என்று கேட்கவில்லை. ஆசார்யரும் க்ருபையாலே ஸத்யமே அறியத்தக்கது என்று ஏஷது வா அதிவததி முதலிய வாக்கியத்தில் உபதேசிக்கிருர். அதி வாதித்வம் என்பது, தான் உபாஸிக்கும் பொருளையே எல்லாவற்றையும் விடச் சிறந்ததெனக் கூறல்.

## 71 (ஸூ-ஒ) தர்மோபபத்தேச்ச (8)

'அந்த பகவான் எதில் ப்ரதிஷ்டை செய்யப் பெற்றிருக்கிருர்? தன் மஹிமையில்' முதலிய வாக்கியங்களில் விளக்கப்பட்ட தன் மஹிமையில் ப்ரதிஷ்டை பெறல், ஸர்வ காரணத்வம், ஸர்வாத்மத்வம் முதலிய தர்மங்கள் பகவானிடமே உபபந்நம் (பொருந்துவன) ஆவதால், பூமா - பரமாத்மாவே என்று உறுதியாகிறது. இந்த வித்யையில் நாமம் தொடங்கி ப்ராணன் எனப்படும் ஜீவன்வரை த்யானிக்கத் தக்கவையாகச் சுருக்கமாகச் சொன்ன வஸ்துக்கள் ஆசார்யர் கூறிய முறைப்படி காட்டப்படுகின்றன. நாமம், வாக், என்ற சொல் அந்தப் பொருளிலேயே ப்ரஸித்தமாயுள்ளது. தஸ்மின் யதந்த: ததன்வேஷ்டவ்யம் என்று தேட வேண்டிய பொருளுக்கு ஆதாரமான தஹராகாசத்தைச் சொல்லுகையாலும் பூதாகாசமே என்பது முதல் பக்ஷம். இதற்கு விடை கூறுகிருர், இந்த சூத்திரத்தில்,

**தஹர:**- தஹராகாசமானது, பரப்ரஹ்மம் தான் பூதாகாசமன்று, ஏனெனில், **உத்தரேப்ய:**- மேல் வாக்கியங்களில், சொல்லப்படும் ஹேதுக்களால் .. ஏஷ ஆத்மா அபஹத பாப்மா விஜரோவிம்ருத்யு: என்பது தொடங்கிய வாக்கியம் ,, யம் காமம் காமயதே ஸோzஸ்ய ஸல்கல்பாதேவ ஸமுத்திஷ்டதி" முதலிய வாக்கியங்களால் கூறப்படும் குணங்கள் பூதாகாசத்திற்குப் பொருந்தாதவை,

இப்படி தஹராகாசத்தைப் பூதாகாசமன்று என்று நிரூபித்து மேலே ப்ரத்யகாத்மாவாக இருக்கலாமேயென்று சங்கையையும் நிராகரணம் செய்கிறார்.

அதய ஏஷ ஸம்ப்ரஸாதோ஽ஸ்மாத் சரீராத் ஸமுத்தாய என்கிற வாக்யத்தில்; **இதர பராமர்சாத்** - ப்ரஹ்மத்தைத் தவிர வேறான ஜீவனைப் பேசுவதால் ஸ **இதிசேத்** - இந்த தஹராகாசம் என்பது ஜீவனேயென்றால் - ந= அது தவறு;

**அஸம்பவாத்** - கூறிய அபஹத பாப்மத்வாதி குணங்கள் ஜீவனிடம் சம்பாவிதமல்லவாதலின், என்றபடி, ஸம்ப்ரஸாதன் என்பது பகவானின் சம்பந்த ஜ்ஞானத்தால் ரஸிகனான ஜீவனைக் குறிக்கிறது.

ஸங்கல்பநாமா, சித்தம், த்யானம், விஜ்ஞானம், பலம், அன்னம், நீர், தேஜஸ், ஆகாசம், மன்மதன், திசை, ப்ராணனென்னும் ஜீவன், இவ்வனைத்திற்கும் மேல் ஸத்ய சப்தப் பொருளாக பரமாத்மாவே பூம குண விசிஷ்டனும் த்யானிக்கத் தக்கவனும் சொல்லப்படுகிறான் என்று கருத்து.

## அக்ஷராதிகரணம் 3

## 72 (ஸூ). அக்ஷரமம்பராந்தத்ருதே: 9

கீழ் அதிகரணங்களில் ஸத்யம், அக்ஷரம் என்ற சொற்களுக்கும் பொருளாகக் கூறப்பட்ட பரமபுருஷனே பூமாதிகரணத்தில் ஸத்ய சப்தத்தின் பொருள் என்பதை ஸ்தாபித்து. இவ்வதிகரணத்தில், அக்ஷரம், என்ற சொல்லின் பொருளும் அவனேயென்று ஸ்தாபிக்கப்படுகிறது.

வாஜஸனேயகத்தில் கார்கியின் வினாவில் - ஏதத்வை ததக்ஷரம், கார்கி ப்ராஹ்மணா அபிவதந்தி அஸ்தூலம் - அநணு - அஹ்ரஸ்வம் என்ற வாக்யத்தில் சொன்ன அக்ஷரம் ப்ரதானமா? ஜீவனா? பரமாத்மாவா? என்ற சம்சயம் ஏற்பட முதலில் ப்ரதானமேயென்று பூர்வபக்ஷம் - ஏனெனில், "அக்ஷராத்பரத: பர: என்ற இடத்தில், அக்ஷரசப்தத்திற்கு ப்ரதானம் என்ற பொருளில் ப்ரயோகம் காணப்படுகிறது என்பதால்; இதற்கு விடை,

### (ஸூ) அக்ஷரம் அம்பராந்த த்ருதே:

**அக்ஷரம்:-** அக்ஷர சப்தத்தின் பொருள், பரப்ரஹ்மமே, ஏனெனில், அம்பராந்தத்ருதே: - ஆகாசத்தின் எல்லையான (முடிவான) - காரணமான ஆகாசத்தினைத் தாங்குவதாகக் கூறுவதால், எதில் ஆகாசம் பின்னப்பட்டு உள்ளது? ஸர்வ விகாரப் பொருட்களுக்கும் காரணமாய் ஆகாசமெனும் சொல்லின் பொருளாயுள்ள ப்ரதானத்துக்கும் ஆதாரமாகச் சொல்லப்பட்ட

அக்ஷரம் ப்ரதானமாக இருக்க முடியாது. பரமாத்மாதான் அது ப்ரதானத்திற்கு ஆதார பூதம் அவனேயன்றி ப்ரதானம் எப்படியாக முடியும்?

ஆனல், ஜீவனுக்கும், அசேதனமான ப்ரதானத்துக்கான ஆதாரத்வம் கூடுமே அக்ஷரம் என்பது ஜீவனுகலாமென்ற பக்ஷத்தை அடுத்துக் கண்டிக்கிறுர்.

## 73 (ஸூ) ஸச ப்ரசாஸனுத் 10

ஸாச=அம்பராந்தமான ப்ரதானத்தின் த்ருதியும் (தாங்குதலும்) **ப்ரசாஸனுத்** - இந்த அக்ஷரத்தின் நியமனத்தாலேயே ஏற்படுகிறது. "ஏதஸ்யவா அக்ஷரஸ்ய ப்ரசாஸனே கார்க்கி ஸூர்யா சந்த்ரமஸௌவித்ருதௌதிஷ்டத: என்று இது முதலியவற்றில் தன் நியமனத்திற்கு (ஆளுகை) உட்பட்ட ஸர்வ வஸ்துக்களையும் தாங்குதல் பத்தனுக்கோ, முக்தனுக்கோ கூடாது. ஆதலின் புருஷோத்தமனே ப்ரசாஸ்தாவான அக்ஷரமாம்.

## 74 (ஸூ) அன்யபாவ வ்யாவ்ருத்தேச்ச 11

அந்ய பாவ:- வேறுதன்மை; ப்ரதானத்வமும், ஜீவத்வமும்; **வ்யாவ்ருத்தேச்ச** - விலக்கப்படுவதால் - அக்ஷரம் என்பது பரமாத்மாவேயாம். கார்கி இந்த அக்ஷரத்தினிடமே ஆகாசம் குறுக்கும், நெடுக்குமாகப் பின்னப் பட்டுள்ளது; இந்த அக்ஷரமே பிறவற்றுல் காணப்படாமல் தான் அனைத்தையும் காண்கிறது என்று சொல்கையால், இப்படி ஸர்வஜ்ஞனுயும், ஸர்வாந்தர்யாமியுமான ஸர்வாதாரன் எனும் அக்ஷரம் - ப்ரதானத்திலிருந்தும், ஜீவனிடம் இருந்தும் பிரிதாய் விலக்கிக் கூறப்படுகிறது என்று சித்தாந்தம்.

## ஈக்ஷதிகர்மாதிகரணம் 4

## 75 (ஸூ) ஈக்ஷதிகர்மவ்யபதேசாத்ஸ: 12

"அத்ருஷ்டம் த்ரஷ்ட்ரு" என்று பரமாத்மா இதரங்களால் காணப் படாதவனென்று கூறப்பட்டது. அப்படியாயின், "பராத்பரம் புரிசயம் புருஷம் ஈக்ஷதே" என்று காணப்படுபவனுகக் கூறப்படுபவன் பரமாத்மாவாயிருக்க முடியாது என்ற சங்கை இவ்வதிகரணத்தில் தீர்க்கப்படுகிறது என்பது ஸங்கதி

அதர்வணத்தில் ஸத்யகாம ப்ரச்னத்தில்: "ய; புனரேதம் த்ரிமாத்ரேண ஓமித்யனேனைவாக்ஷரேண பரமபுருஷ மபித்யாயீத எனத் தொடங்கி, "பராத்பரம் புரிசயம் புருஷமீக்ஷதே" என்னும் பகுதியில் த்யானிக்கவும், பார்க்கவும் படும் புருஷன் ஜீவ ஸமஷ்டி ரூபனுன நான்முகனு? அல்லது பரமபுருஷனு? என்பது சம்சயம். ஸமஷ்டி ஜீவனுன சதுர்முகனேயென்பது

பூர்வபக்ஷம். ஏனெனில், அங்கு ஒரு மாத்திரையளவுள்ள ப்ரணவத்தை உபாஸிப்பதற்கு மனுஷ்யலோக ப்ராப்தி பலமென்றும், இருமாத்திரைப் ப்ரணவத்தின் உபாஸனத்திற்கு அந்தரிக்ஷப்ராப்தி பலமென்றும், மூன்று மாத்திரையாக அதன் உபாஸனத்துக்கு ப்ரஹ்மலோக ப்ராப்தி பலமென்றும் சொல்லப்பட்டது. இந்தப் ப்ரஹ்மலோகம் என்று தோன்றுகிறுது. அந்த லோகத்தையடைந்து புருஷனாலே காணப்படுபவன் நான்முகன் என்பது பொருத்தமாயிருக்கும். என்பது சங்கை. இதற்குச்சமாதானம்

(ஸூ) ஈக்ஷதிகர்ம வ்யபதேசாத் ஸ:

**ஈக்ஷதிகர்ம** - பார்வைக்கு விஷயமானவன் - ஸ: அந்தச்ருதிப்ரதிபாத்யனை பரமாத்மாவே - சதுர்முகனன்று, ஏனெனில், வ்யபதேசாத் - சாந்தமாய், ஜரை, மரணமற்ற, அம்ருதமும், அபயமும் பரமுமான ப்ரஹ்மத்தை ஓங்காரத்தாலேயே வித்வான் அடைகிருன் என்று பற்பல தர்மங்களைக் காட்டிப் பேசுவதால், கர்மவச்யனை நான்முகனுக்கு அத் தர்மங்கள் பொருந்தாமையால் பரம புருஷனே முக்தனின் பார்வைக்கு விஷயமாகிருன் என்று கருத்து. அந்தரிக்ஷ லோகத்துக்கு மேல் நான்முகனின் லோகம் என்பதும் சரியன்று. இடையில் மஹர்லோகாதிகள் இருப்பதால் - ஆகவே ஸர்வ ப்ராக்ருத லோகங்களுக்கும் மேல் உள்ள வைகுண்டமே ப்ரஹ்ம லோகமென்று சொல்லப் படுகிறது. யத்தத் கவயோ வேதயந்தே என்று ஸூரிகளால் காணப்படுவதாகச் சொல்வதால் நான்முகனின் லோகமன்று என்று திருவுள்ளம்

## தஹராதிகரணம் [3. 5].

### 76 (ஸூ) தஹர உத்தரேப்ய: 13

இப்படி கார்க்ய க்ஷர வித்யையில் அறியத்தக்க - புரிசயனை புருஷனுக்குப் பரமாத்மா என்ற நிலையை ஸ்தாபித்து தஹரவித்யையில் ஆகாசம் எனப்படும் புரிசய புருஷனுக்கும் அபரமாத்மத்வம் இல்லை - அவன் பரமாத்மாவே என்று ஸ்தாபிப்பது ஸங்கதி.

சாந்தோக்யம் எட்டாம் அத்தியாயத்தில், அத யதிதம் அஸ்மின் ப்ரஹ்மபுரே தஹரம் புண்டரீகம் வேச்ம தஹரோ஽ஸ்மின் அந்தர ஆகாச: தஸ்மின் யதந்த: ததன்வேஷ்டவ்யம் தத்வாவ விஜிஜ்ஞாஸிதவ்யம் என்னும் வாக்கியத்தில் ஹ்ருதய புண்டரீகத்தின் நடுவில் உள்ள தஹராகாசம் என்பது பஞ்சபூதங்களில் ஒன்ரு, ப்ரத்யகாத்மாவா, பரமாத்மாவா என்று சம்சயம், பஞ்சபூதங்களில் ஒன்று என்பது முதல் பக்ஷம். ஏனெனில், ஆகாசம் என்ற சொல் அந்தப்பொருளிலேயே ப்ரஸித்தமாயுள்ளது. தஸ்மின் யதந்த: ததன்

வேஷ்டவ்யம் என்று தேடவேண்டிய பொருளுக்கு ஆதாரமான தஹராகாசத்தைச் சொல்லுகையாலும் பூதாகாசமே என்பது முதல் பக்ஷம். இதற்கு விடை கூறுகிறுர் இந்த சூத்திரத்தில்.

(ஸூ) **தஹர உத்தரேப்ய:**

*தஹர: —* தஹராகாசமானது, பரப்ரஹ்மம் தான் - பூதாகாசமன்று! ஏனெனில், உத்ரேப்ய:- மேல்வாக்யங்களில், சொல்லப்படும் ஹேதுக்களால் -ஏஷ ஆத்மா அபஹத பாப்மா விஜரோ விம்ருத்யு: என்பது தொடங்கிய வாக்யம் - ''யம் காமம் காம்யதே ஸோSஸ்ய ஸங்கல்பாதேவ ஸமுத்திஷ்டதி'' முதலிய வாக்யங்களால் கூறப்படும் குணங்கள் பூதாகாசத்திற்கு பொருந்தாதவை என்பதாம். அன்வேஷ்டவ்யம் என்று சொன்னதும் கல்யாண குணங்களைப் பற்றியே. அதயதித மஸ்மின் 'என்ற இவ்வதிகரணத்தின் விஷய வாக்யத்தின் பொருள் பின்னுல் தரப்படும்.

## 76 (ஸூ) கதிசப்தாப்யாம் ததாஹித்ருஷ்டம் லிங்கஞ்ச 14

" தத்யதா ஹிரண்யநிதிம் நிஹிதம் அக்ஷேத்ரஜ்ஞா உபர்யுபரி ஸஞ்சரந்தோ நவிந்தேயு: ஏவமேவ இமா: ஸர்வா: ப்ரஜா:- அஹரஹர் கச்சந்த்ய: ஏதம் ப்ரஹ்மலோகம் நவிந்தந்தி நிலத்திற்குள் புதைந்து கிடக்கும் புதையலை யறியாத மக்கள் அந்த நிலத்தின் மீதே அடிக்கடி நடமாடியும் அதனை யறிவதில்லை. அதேபோல் எல்லா மக்களும் ஒவ்வோர் நாளும் இந்த தஹராகாசம் எனும் ப்ரஹ்மலோகத்தை நெருங்கியிருந்தும் அடைவதில்லையென்கிற உபநிஷத் வாக்கியத்தில் 'ஏதம்' என்று தஹராகாசத்தைக் குறிப்பிட்டு, அதிலேயே எல்லா சேதனர்களும் ஸுஷுப்தி காலத்தில் செல்வதும் - செல்லத்தக்கதான தஹராகாசத்தை ப்ரஹ்மலோகம் என்று குறிப்பதும் - தஹராகாசத்தைப் பரப்ரஹ்மமென்று சாதிக்கின்றன, இப்படி கமனத்தாலும், ப்ரஹ்மலோக சப்தத்தாலும் குறிப்பது, தஹரம் என்பது ப்ரஹ்மமேயென்று சாதிக்கவல்லது.

**ததாஹி த்ருஷ்டம்** - இப்படி வேறு உபநிஷத்துக்களிலும் காணப்படுகிறது ஏவமேவ இமா: ஸர்வா: ப்ரஜா: ஸதிஸம்பத்ய நவிது: ஸதிஸம்பத்யாமஹே இதி – முதலான வாக்யங்களில் காணப்பட்டது,

**லிங்கஞ்ச** - மற்றச்ருதிகளைவிட்டு இதே ச்ருதியில் சொல்லும், கதியும், ப்ரஹ்மலோக சப்தமும். தஹரம் என்பது பரமாத்மாவே எனச் சாதிப்பதில் வேறெதையும் அபேக்ஷிக்காத போதிய அடையாளம் (லிங்கம்) என்று பொருள்.

## 77 த்ருதேச்ச மஹிம்னோ ஃஸ்யாஸ்மின் உபலப்தே: [15]

இந்த பரமாத்மாவிற்கு, **த்ருதே: மஹிம்நச்ச** ஜகத்தினைத் தாங்குவ—தென்னும் மஹிமை **அஸ்மின** - இந்த தஹராகாசத்திலே.

**உபலப்தே:-** தோன்றுகையால், இந்த மஹிமைக்கு ஆச்ரயமான தஹராகாசம் பரமாத்மாதான். "ய ஆத்மா ஸ ஸேதுர் வித்ருதி: ஏஷாம் லோகானும் அஸம்பேதாய என்றிது முதலிய வாக்கியங்களிலே தாரண ரூபமான மஹிமை சொல்லப்படுகிறது.

## 78 (ஸூ) ப்ரஸித்தேச்ச [16]

"யதேஷ ஆகாச ஆநந்தோ **ந**ஸ்யாத்" என்னும் ச்ருதியிலே, ஆகாச சப்தம் பரமாத்மாவைக் குறிப்பதில் ப்ரஸித்தம் - அபஹத பாப்மத்வாதி குணங்களோடு கூடிய ப்ரஸித்தி, பூதாகாசத்தில் உள்ள ப்ரஸித்தியைவிட ப்ரபலியானது என்பது திருவுள்ளம்.

இப்படி தஹராகாசத்தைப் பூதாகாசமன்று என்று நிரூபித்து மேலே ப்ரத்யகாத்மாவாக இருக்கலாமேயென்று சங்கையையும் நிராகரணம் செய்கிறார்.

## 79 (ஸூ) இதர பராமர்சாத் ஸ இதிசேந்த அஸம்பவாத்: [17]

அதய ஏஷ ஸம்ப்ரஸாதோ ஃஸ்மாத் சரீராத் ஸமுத்தாய என்கிற வாக்யத்தில்; **இதர பராமர்சாத்** ப்ரஹ்மத்தைத் தவிர வேறான ஜீவனைப் பேசுவதால் ஸ **இதிசேத்** - இந்த தஹராகாசம் என்பது ஜீவனேயென்றால்-ந-அது தவறு.

**அஸம்பவாத்** - கூறிய அபஹத பாப்மத்வாதி குணங்கள் ஜீவனிடம் சம்பாவிதமல்லவாதலின், என்றபடி, ஸம்ப்ரஸாதன் என்பது பகவானின் சம்பந்த ஜ்ஞானத்தால் ரஸிகனான ஜீவனைக் குறிக்கிறது.

## 80 (ஸூ) உத்தராத் சேத் ஆவிர்ப்பூத ஸ்வருபஸ்து [18]

**உத்தராத் சேத் —** ப்ரஜாபதி வாக்யத்தால் - மேலே ஜீவனுக்கும் இந்த அபஹத பாப்மா என்றது போன்ற குணங்களைக் கூறுவதால், ஜீவனுக்கு அவை சம்பவிக்காதவை என்று கூறலாகாது என்றால், **ஆவிர்ப்பூதஸ்வருபஸ்து** முதலில் கர்மசம்பந்தமுள்ள சரீரத்தைக் கொண்டமையால், விழிப்பு, உறக்கம், ஸுஷுப்தி முதலிய நிலைகளில் ப்ரக்ருதி சம்பந்தத்தால் மறைக்கப்பட்ட ஸ்வரூபத்தையுடைய ஜீவன் - பின்பு பரமாத்ம ஸம்பத்தியால் ஸ்வஸ்வ

ரூபத்தைப் பெற்றவனாய் அபஹதபாப்மத்வம் முதலிய எட்டு குணங்களையும் திரும்பப் பெறுகிறான் என்று ப்ரஜாபதி வாக்யம் கூறுகிறது.

து - தஹராகாசனேவென்றால் - ஆவிர்ப்பூதஸ்வரூபம் போலன்றி மறைக்கப்படாத ஸகல கல்யாண குணங்களையுடையவனாயுள்ள முக்தனுக்கு ஸ்வரூபாவிர்ப்பாவத்துக்குக் காரணமான பரம புருஷனாகையால் - அவன் ஜீவனல்லன். ஸத்யன் என்ற சொல்லின் விளக்கப்படி சேதன சேதன நியந்தா என்பது போன்ற குணங்களாலும் தஹராகாசம் என்பது பரமாத்மாவேயன்றி ஜீவன் ஆகமாட்டான்.

இப்படியாகில் தஹர வாக்யத்தில் "ஸம்ப்ரஸாத:" என்று ஜீவனை ஏன் ப்ரஸ்தாபிக்கவேண்டும்? என்றால் -

## 81 (ஸூ) அன்யார்த்தச்ச பராமர்ச: [19]

தஹரவாக்யத்திலே பராமர்ச: ஜீவனைப் பிரஸ்தாபித்தது ; அன்யார்த்த: தஹராகாச ப்ராப்தியாலே முக்தனுடைய ஸ்வரூபாவிர்பாவம் ஏற்படுகிறது என்று அவனது கல்யாண குணத்தை விளக்குவதற்காகவேயாம் என்றவாறு

## 82 (ஸூ) அல்பச்ருதேரிதி சேத் ததுக்தம் [20]

தஹராகாசத்திற்கு தஹரத்வம் என்னும் அல்பத்வம் கூறப்படுவதால் அவ்வல்பத்வம் - 'ஆராக்ர ஸதபாகஸ்ய' என்ற வாக்யப்படி அணுபரிமாணனான ஜீவனுக்கே கூடுவதால், எல்லாவற்றையும்விடப் பெரியவனான பரமாத்மாவுக்கு அல்பத்வம் பொருந்தாததால் — தஹரம் என்பது ப்ரஹ்மமல்ல என்றால் தத் உக்தம் — ஸர்வத்ரப்ரஸித்தாதிகரணத்தில், நிசாய்யத்வாதேவம் என்ற ஸூத்ரத்திலே அதற்குப் பதில் கூறப்பட்டுவிட்டது. உபாஸகர்களின் அனுக்ரஹத்திற்காகக் கட்டை விரல் அளவுள்ள திருமேனியுள்ளவனாய் ஹ்ருதயத்தில் எழுந்தருளியிருப்பதால் தஹரத்வம் (அல்பபரிமாணத்வம்) சொல்லப்படுகிறது என்பது திருவுள்ளம்.

## 83 (ஸூ) அனுக்ருதேஸ்தஸ்யச [21]

தஸ்ய-அந்த பரமாத்மாவின், அனுக்ருதே: -ஸாம்யத்தையடைகையாலும், ஸாம்யத்தையடையும் ஜீவனைக்காட்டிலும், ஸாம்யத்தையுண்டாக்கும் — பரமாத்மாவுக்கு (தஹரத்திற்கு) பேதம் ஸித்தமாயிற்று. "நிரஞ்ஜன: பரமம் ஸாம்யமுபைதி" என்று முக்தனுக்கு எம்பெருமானோடு பரம ஸாம்யம் சொல்லப்படுகிறது.

## 84 (ஸூ) அபிஸ்மர்யதே [22].

இதம் ஜ்ஞான முபாச்ரித்ய மமஸாதர்ம்யமாகதா: என்று பகவது பாஸனத்தாலே அவனுடன் ஸாம்யத்தையடைவதான அனுகாரம் பகவானுலேயே கீதையென்னும் ஸ்ம்ருதியில் அருளப்படுகிறது.

**இங்கு கவனிக்கவேண்டியதோர் பொருள்.**

அதயதிதம் அஸ்மின் ப்ரஹ்மபுரே தஹரம் புண்டரீகம் வேச்ம என்று அனுவதித்து, தஹரோ zஸ்மின் அந்தர ஆகாச; என்ற வாக்யத்தில் அஸ்மின் இந்த அல்பமான இதயம் என்னும் தாமரையில், அந்தர ஆகாச: உள்ளிருக்கும் ஆகாசம் எனப்படும் பரமாத்மா, ய: எவன் உள்ளானே, தஸ்மின்-அவனிடம், யத் எந்த - எந்த கல்யாண குண ஜாதம் உள்ளதோ, தத்-அந்த ப்ரஹ்மமும் உள்ளேயுள்ள கல்யாண குண ஜாதமும் என இரண்டும் உபாஸிக்கத் தக்கவை என்று யத் என்ற சப்தத்தை வருவித்துக் கொண்டு (அத்யாஹாரம் செய்து) கூறும் பொருள். அந்தச் சொல்லை வருவித்துக் கொள்ளாமலும் வேறு விதமாகப் பொருள் கூறுவதுண்டு.

## 12 ப்ரமிதாதீகரணம் [1. 3. 6]

## 85 (ஸூ) சப்தாதேவ ப்ரமித: [23]

அல்பச்ருதே: என்ற ஸூத்திரத்தில் கூறிய அல்பபரிமாணத்வம் ஜீவனுக்கும் கடவல்லியிலே கூறப்படுவதால் - அங்குஷ்ட ப்ரமிதன் (கட்டை விரல் அளவுள்ள) ஜீவனுகலாமென்று சந்தேகத்தை இவ்வதிகரணத்தில் பரிஹரிக்கிருர் என்பது ஸங்கதி.

கடவல்லியில் "அங்குஷ்ட மாத்ர: புருஷ: மத்ய ஆத்மனி திஷ்டதி" ஈசானே பூதபவ்யஸ்ய நததோ விஜுகுப்ஸதே என்றும் மேலே, "அங்குஷ்ட மாத்ர: புருஷோ ஜ்யோதிரிவாதுமக:" என்றும் ஹ்ருதயே ஸம்நிவிஷ்ட: என்றும் முதல் - இடை - இறுதிகளில் கூறப்பட்ட அங்குஷ்ட ப்ரமிதன் ஜீவனு பரமாத்மாவா என்று சந்தேஹம். ஜீவனேயென்று பூர்வபக்ஷம். ஏனெனில், "ப்ராணுதிபஸ் ஸஞ்சரதி ஸ்வகர்மபி:", "அங்குஷ்ட மாத்ரோ ரவி துல்ய ரூப:" என்று வேறு ச்ருதியில் ப்ராணுதிபனுன ஜீவனையே வெளிப்படையாக அங்குஷ்ட ப்ரமிதன் என்று சொல்லியிருப்பதால் என்ற பக்ஷத்தை நிரஸனம் செய்கிருர்.

### (ஸூ) சப்தாதேவ ப்ரமித:

அங்குஷ்ட **ப்ரமிதன்** பரமாத்மாவே, ஜீவனல்லன், ஏனெனில், **சப்தாதேவ** பரமாத்மாவுக்கு அஸாதாரணமான ஈசானே பூதபவ்யஸ்ய என்னும்

சப்தத்தாலேயே - பரமாத்மாவிற்கான அசாதாரண சப்தத்தாலேயே ப்ராணதிப: - ஸஞ்சரதி ஸ்வகர்மபி: என்ற வாக்யத்தில் கர்ம ஸம்பந்தம் என்னும் ஜீவலிங்கமிருப்பதுபோல் பரமாத்மலிங்கம் இங்கிருப்பதால் - பரமாத்மாவே - ஜீவனல்லன் என்பது திருவுள்ளம்.

ஆனல் விபுவான பரமாத்மாவிற்கு அங்குஷ்ட ப்ரமிதத்வம் எவ்வாறு பொருந்துமென்பதை விளக்குகிறர்.

## 86 (ஸூ) ஹ்ருத்யபேக்ஷயாது மநுஷ்யாதிகாரத்வாத் [24]

'து' என்பது சங்கையை விலக்குவது. ஹ்ருதி - மனிதனின் ஹ்ருதயத்தில் - உபாஸனர்த்தம் - (அல்பவிக்ரஹ விசிஷ்டனுயிருப்பதால் உபாஸகர்களின் ஹ்ருதயம் அவரவர் அங்குஷ்ட அளவினதாதலின் தத்பேக்ஷயா அத்தை அபேக்ஷித்து விபுவான பரப்ரஹ்மத்துக்கு அந்த அளவு கூறப்பட்டது. உபாஸனத்தை விதிக்கும் சாஸ்த்ரம் மனிதர்களை உத்தேசிக்கையாலே அவர் ஹ்ருதயத்தை முன்னிட்டே ப்ரஹ்மத்திற்கு இந்த அளவு கூறப்பட்டது.

இந்த அதிகரணம் நான்கு ஸூத்ரமுள்ளது. அதற்குப்பின் மனிதர்களுக்கு உபாஸனத்தில் அதிகாரம் ப்ரஸ்தாபிக்கப்பட்டு, பின் தேவதாதிகரணமும், மத்வாத்யதிகரணமும், அபசூத்ராதிகரணமும், ப்ரஸங்க ஸங்கதியால் இடையே வந்தன. இப்படி விசேஷாதிகாரம் பற்றி நிருபிப்பதால் - ஸாமான்யமான அதிகாரத்தைப் பற்றிப்பேசும் - மூன்றுமத்யாயம் நான்காம் பாதத்துடன் கலப்பு (ஸாங்கர்யம்) என்ற தோஷமில்லை. இப்படி ப்ரஸங்காத் வந்த மூன்று அதிகரணங்களில் முதலில் தேவதாதிகரணத்தால் தேவதைகளுக்குப் பொதுவாக உபாஸனத்தில் அதிகாரம் உண்டா என்று கேட்டு அதனை ஸ்தாபிக்கிறர்.

## 13. தேவதாதிகரணம் (1. 3. 7.)

## 87. (ஸூ) தது பர்யபி பாதராயண: ஸம்பவாத் [25]

பரப்ரஹ்மோபாஸநத்தில் மனுஷ்யனுக்கே அதிகாரமுள்ளது என்றல், ப்ரஹ்மவித்யையில் தேவதைகளுக்கு அதிகாரமுண்டா இல்லையா? என்று சம்சயம்வர அதிகாரமில்லையென்று பூர்வபக்ஷம். ஏனெனில், பரிநிஷ்பந்நமாய் ஸித்தமான ப்ரஹ்மத்தை - ஸத்யம், ஜ்ஞானம் முதலிய சொற்கள் காட்டுவனவென்றலும், தேவதைகளுக்குச் சரீரமிருப்பதாக ப்ரமாணங்கள் கூறுமையால் மனத்தால் அனுஷ்டிக்கவேண்டிய உபாஸனத்தில் அவர்களுக்கு அதிகாரம் இருக்க முடியாதென்றவாறு - இதற்கு விடை.

(ஸூ) ததுபர்யபி பாதராயண: ஸம்பவாத்

தத்-அந்த ப்ரஹ்மோபாஸனம், உபர்யபி-ஸ்வர்கத்திலுள்ள தேவர்களுக்கும் உண்டு, என்று பாதராயணர் கூறுகிருர். ஏனெனில், ஸம்பவாத் அனேன ஜீவேனுத்மநாநு ப்ரவிச்ய நாம ரூபே வ்யாகரவாணி என்று நாம ரூப வ்யாகரணம் பற்றிச் சொல்வதால், தேவதைகளுக்கும் சரீரம் உண்டு என ஏற்படுவதால், மோக்ஷத்திலாசையும், ஸாமர்த்யமும் கூடுவதால் தேவதைகளுக்கும் பகவதுபாஸனம் கூடும் என்பதாம்.

88 (ஸூ) விரோத: கர்மணீதிசேந்ந அநேக ப்ரதிபத்தேர் தர்சனுத் (26)

தேவதைகளுக்குச் சரீரம் உண்டென்று ஏற்ருல் யாகாதி கர்மாக்களில் விரோதம் ஏற்படும். அனேக மனிதர்கள் ஒரே காலத்தில், ஒரே யாகத்தைச் செய்தால் இந்திராதி தேவர்கள் எந்த யாகத்திற்குச் செல்வார்கள்? என்ருல் அவ்வாக்ஷேபம் தவறு-ஏனெனில் அநேகப் ப்ரதிபத்தே: தர்சனுத்-யோக சாமர்த்யமுள்ள ஸௌபரிபோன்றவர்கள் அனேக சரீரங்களைப் பெற்றமை புராணங்களில் பிரசித்தமாயுள்ளதால், அதுபோல் இந்த்ராதிதேவதைகளுக்கும் ஒரே வேளையில் பல இடங்களில் சரீரத்துடன் செல்லுதல் பொருந்துவதேயாதலின் கர்மாக்களில் விரோதம் வராது.

89 (ஸூ) சப்த இதி சேந்நாத: ப்ரவாத் ப்ரத்யக்ஷானுமானுப்யாம் (27)

விரோத: என்ற சொல்லை முன் சூத்திரத்திலிருந்து எடுத்துக்கொள்ளுகிரேம். கர்மாவில் விரோதம் வராவிட்டாலும், சப்தே-வைதிக சப்தத்திலே விரோதம் வரும். எப்படியென்ருல் தேவதைகளுக்குச் சரீரத்தை உண்டெனக் கொண்டால், அவை அவயவங்களோடு கூடியவையாதலின் உத்பத்தியும் - விநாசமுமுள்ளவையாகும். அப்போது அவற்றின் உத்பத்திக்கு முன்னரும், விநாசத்திற்குப் பிறகும் - இந்த்ரன் முதலிய சொற்களுக்கு உரிய பொருள் இல்லாமல் போகும். அநித்யத்வமும் ஏற்க நேரிடும். இதிசேந்ந என்பது தவறு.

அத: ப்ரபவாத் - இவ்வைதிக சப்தங்களிலிருந்தே தேவதைகளின் உத்பத்தி ஏற்படுவதால் உலகில் தேவதத்தன் முதலியவர் தோன்றிய பிறகு அவர் பெயர்கள் (சப்தம்) தோன்றுவதால் அந்த சப்தங்கள் அநித்யமாயின. இங்கோ முன் உள்ள இந்த்ராதிகள் நசித்தவுடன் - நித்யமான வேதத்திலே கூறிய இந்த்ராதியரின் ஆக்ருதிகளை நினைத்து பிரம்மா அப்படியே புதுப்புது இந்திராதியரைப் படைக்கிருன் என்று "தாதாயதா பூர்வமகல்பயத்" என வேதம் கூறுவதால் - வேதங்களுக்குப் பொருளற்ற நிலையோ அநித்யத்வமோ வாரா - இதற்குப் ப்ரமாணம் ஏதென்ருல் - ப்ரத்யக்ஷானுமானுப்யாம் ச்ருதியாலும்

ஸ்ம்ருதியாலும் தெரிந்து கொள்கிறோம். ஆதலின், அவையே ப்ரமாணம் - வேதத்தில் - வேதேநநாம ரூபே வ்யாகரோத் - ஸதா ஸதீப்ரஜாபதி: என்று ஸ்ம்ருதியில்.

ஸர்வேஷாஞ்ச ஸ நாமானி கர்மாணி விவிதானி ச
வேதசப்தேப்ய ஏவாதௌ ப்ருதக் ஸம்ஸ்தாச்ச நிர்மமே

என்றும் கூறப்பட்டதைக் கவனிக்க வேண்டும் என்பதாம்.

## 90 (ஸூ.) அதஏவச நித்யத்வம் (28)

அத ஏவ - ப்ரஹ்ம தேவன் வைதிக சப்தத்தால் ஜகத்தில் ஆகாரத்தை நினைத்து ஸ்ருஷ்டி செய்வதாலேயே - ***நித்யத்வம்*** - வேதத்திற்கு நித்யத்வம் ஸித்திக்கிறது. நைமித்திகப்ரளயம் முடிந்தவுடன் ப்ரஹ்மதேவன் வஸிஷ்ட விச்வாமித்ராதியரின் பதவிகளுக்குரிய புண்யம் மிக்க ஜீவர்களை நினைத்து ' விஸ்வாமித்ரஸ்ய ஸூக்தம் பவதி ' முதலிய வேதபாகங்களையும் ஆராய்ந்து முன் கல்பங்களிலுள்ளபடி விச்வாமித்ராதிகளைப் போலவே இந்த கல்பத்திலும் ஸ்ருஷ்டித்து - அவர்கள் மூலமாக மந்த்ரங்கள் - ஸூக்தம் முதலியவற்றைப் பரப்பச் செய்தார். அவர்களும் அப்படியே வேதத்தை ப்ரவசனம் செய்கிறார்கள். ஆகவே வேதத்திற்கு நித்யத்வம் ஸித்திக்கிறது. ஆனால், ப்ராக்ருத ப்ரளயத்தில் ப்ரஹ்மாதிகள் யாவரும் நசித்து விடுவதால் அவ்யாக்ருதபரிணமரூபமான சப்தஸ்வரூபம் பெற்ற வேதங்களும் மறைவன. ஆகையால்-ப்ராக்ருத ஸ்ருஷ்டி மறுபடி தொடங்கும்போது வேதம் நித்யம் என்பது எப்படி பொருந்தும்? என்று தோன்றும் சங்கையை மேல் தீர்க்கின்றார்.

## 91 (ஸூ.) ஸமான நாம ரூபத்வாச் சாவ்ருத்தாவபி அவிரோத: தர்சனாத் ஸ்ம்ருதேச்ச (29)

ப்ராக்ருத ஸ்ருஷ்டியினை மறுபடி துவங்குகையிலும், படைக்கப்படுபவையும் முன் கல்பம் போலவே ஸமமான நாமங்களையும், ரூபங்களையும் கொண்டிருப்பதால் வேத நித்யத்வத்திற்கு விரோதமில்லை. முதல் ஸ்ருஷ்டியிலும், பரம புருஷன் முன் இருந்த ப்ரகாரத்தை நினைத்து ஜகத்தை அப்படியே ஸ்ருஷ்டி செய்கிறார். வேதங்களையும் முன் வரிசை மாறாமல் ப்ரம்மனுக்கு உபதேசிக்கிறார். இதற்குப் பிரமாணம் - ஸ்ம்ருதியே - " யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம் - யோவை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை " - என்பதும், " யதர்த்துஷூ - ருதுலிங்கானி நாநாரூபாணி பர்யயே - த்ருச்யந்தே தானி தான்யேவ ததா பாவா: யுகாதிஷூ " என்பதும் போன்றவை. வேதத்திற்கு நித்யத்வம் என்பது - முன்பு உச்சரித்த க்ரமத்தை நினைத்து அதே க்ரமப்படி

மறுபடியும் உச்சரிக்கப்படுகையே. அக்ஷரங்கள் நித்யமென்பதன்று ; என்பது திருவுள்ளம்.

## மத்வதிகரணம் ( 1. 3. 8 )

### 92 (ஸூ) மத்வாதிஷ்வ ஸம்பவாதநதிகாரம் ஜைமினி: (30)

முன் அதிகரணத்தில் தேவதா ஸாமான்யத்திற்குப் பகவதுபாஸநாதிகாரம் பற்றி சிந்திக்கப்பட்டது. இந்த அதிகரணத்தில் வஸ்வாதி தேவதா - விசேஷங்களுக்கு மதுவித்யையென்னும் ப்ரஹ்ம வித்யையில் அதிகாரமுண்டென்று ஸ்தாபிக்கிறார்.

சாந்தோக்யத்தில் மதுவித்யையிலே ''அஸௌ வா ஆதித்யோ தேவ மது'' எனத் தொடங்கி, 'தத்யத் ப்ரதம மம்ருதம் தத் வஸவ உப ஜீவந்தி' என்று கூறி 'ஸ ஏததம்ருதம் வேத வஸூநா மேகோ பூத்வா அக்நிநைவ முகேந ஏத தேவாZம்ருதம் த்ருஷ்ட்வாத்ருப்யந்தி' முதலிய வாக்யங்களால் ருக்யஜுஸ்ஸாமாதி வேதங்களிலே சொல்லப்பட்ட கர்மாக்களால் ஏற்படும் ரஸத்துக்கு ஆதாரமாதலின், ஆதித்யனை தேவமது என்றும், அவனுடைய கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு - மேல் பாகங்களை முறையே வஸுக்கள், ருத்ரர்கள், ஆதித்யர்கள், மருத்துக்கள், ஸாத்யர்கள் போக்யமாக அனுபவிப்பதாகச் சொல்லி, அவர்கள் அனுபவிக்கும் ஆதித்யனின் அம்சங்களை உபாஸிக்கத் தக்கவையாகவும், ப்ராப்யங்களாகவும் உபதேசிக்கிறது. இத்தகைய மது வித்யையில் வஸுக்கள் போன்றவர்களுக்கு அதிகாரமுண்டா இல்லையா என்ற சங்கையில், அதிகாரமில்லையென்று பூர்வ பக்ஷம். ஏனெனில், வஸ்வாதிகளும் அனுபவிப்பவர்களாகப் பேசப்பட்டிருப்பதால், தங்களைத் தாங்களே உபா-ஸிக்கை பொருந்தாததலின், பலனான வஸுத்வம், முன்னரே அடையப் பட்டிருப்பதாலும் - அதிகாரமில்லையென்பதே பொருந்தும் என்று பூர்வ பக்ஷ ஸூத்ரங்கள் இரண்டும் கூறும்.

### ஸூ. மத்வாதிஷ்வஸம்பவாதநதிகாரம் ஜைமினி:

மது வித்யோபாஸநாதிகளிலே (தாமே) வஸ்வாதிகளே தம்மை உபாஸிப்பது என்பது *அஸம்பவாத்* - கர்மாவும் - கர்த்தாவுமாயிருக்கை ஸம்பவிக்காது ஆதலின், *அநதிகாரம்* - அதிகாரமில்லையென்று ஜைமினி சொல்லுகிறார்.

### 93 ஜ்யோதிஷி பாவாச்ச (31)

*ஜ்யோதிஷி* - பரப்ரஹ்மத்திடம், *பாவாச்ச* - தம் தேவா ஜ்யோதிஷாம் ஜ்யோதி: என்று பரப்ரஹ்மோபாஸனம் - தேவர்களின் உபாஸனம் தேவர் மனுஷ்யர் இருசாராருக்கும் பொதுவாயிருந்தும் - ஜ்யோதிஸ்ஸுக்களுக்கு

எல்லாம் ஜ்யோதிஸ்ஸான பரப்ரஹ்மத்தை தேவர்களே உபாஸிக்கிறார்கள் என்ற சிறப்பான வசனம் வஸ்வாதிகளுக்கு மது வித்யையிலே அதிகாரம் இல்லையெனக் காட்டுகிறது என்பது பூர்வபக்ஷம்.

## ஸித்தாந்த ஸூத்ரம்

## 94 (ஸூ) பாவந்து பாதராயணோzஸ்திஹி (32)

'து' சப்தம் ஜைமினி பக்ஷத்தை மறுதளிக்கிறது. பாவந்து - வஸ்வாதிகளுக்கு மதுவித்யாதிகளில் அதிகாரம் உண்டென்பதை பாதராயணர் கூறுகிறார். ஏனெனில் - அஸ்திஹி-வஸ்வாதிகளுக்குத்தானே உபாஸ்யத்வமும் ப்ராப்யத்வமும் உள்ளன. இப்போது வஸுக்களாயிருந்தாலும், கல்பாந்தரத்தில் வஸுத்வம் ப்ராப்யமாகலாம். ய ஏதாமேவம் ப்ரஹ்மோபநிஷதம் வேத என்று க்ருத்ஸ்ன (முழு) மதுவித்யைக்கும் ப்ரஹ்ம வித்யையெனப் பெயர் கூறுவதால் வஸ்வாதிகளைச் சரீரமாகக்கொண்ட பரமாத்மாவே உபாஸ்யம் - கேவலம் (தனிப்பட்ட) வஸ்வாதிகள் உபாஸ்யர்களாகார். ஆகையால் தன்னைச் சரீரமாகவுடைய பரமாத்மாவைத் தாங்கள் உபாஸித்தால் கல்பாந்தரத்தில் வஸுபதத்தையடைந்து அந்த தேஹத்தின் முடிவில் ப்ரஹ்மத்தை அடைவதிலும் விரோதமில்லை என்பது கருத்து.

## அபசூத்ராதிகரணம் (1-3-9)

## 95 (ஸூ) சுகஸ்ய ததநாதரச்ரவணாத் ததாத்ரவணாத் ஸூச்யதேஹி 33

மனிதரைத் தவிர்த்த தேவாதிகளுக்கும், வஸு முதலிய தேவ விசேஷங்களுக்கும் அர்த்தித்வமும் - சாமார்த்யமுமிருப்பதால் ப்ரஹ்ம வித்யையில் அதிகாரமுண்டென்று கூறப்பட்டது. அப்படி அர்த்தித்வமும் - சாமர்த்யமுமே வித்யையை அனுஷ்டிக்கும் அதிகாரத்திற்குக் காரணமென்றால், பிராஹ்மணர்களைப்போலவே மற்ற நான்காம் வர்ணத்தார்க்கும் அதிகாரமுண்டென்று ஏற்கலாமே - தேஹம் இந்த்ரியாதிகளின் திறன், என்னும் உபாஸன ஸாமர்த்யமும் - மோக்ஷம் பெறும் விருப்பமும் அவர்களுக்கும் கூடலாமே என்று ஏற்படும் சங்கையை இவ்வதிகரணத்தில் நீக்குகிறார் என்பது சங்கதி,

ப்ரஹ்ம வித்யையில் சூத்ரர்கட்கும் அதிகாரம் உண்டா இல்லையா என்ற சந்தேஹமேற்பட அதிகாரமுண்டென்று பூர்வ பக்ஷிகள் கூறுகின்றனர். ஏனென்றால், அர்த்தித்வமும் — ஸாமர்த்யமும் அவர்களுக்கும் ஸம்பவிக்கலாமாதலால் — அவர்களுக்கு அக்னி கிடையாதென்றாலும், ப்ரஹ்மத்தை மனத்தாலேயே உபாஸிக்கலாமாதலால், இதிஹாஸ புராணங்களைக் கேட்டதாலேயே ப்ரஹ்ம ஸ்வரூபாதி ஜ்ஞானம் ஏற்படலாமாதலின், நான்காம்

வர்ணத்திலுதித்த விதுரர் போன்றவர்கட்கு ப்ரஹ்ம நிஷ்டர் என்ற நிலை பாரதாதிகளிலே பிரசித்தமானதால், உபநிஷத்தில் ஸம்வர்க்க வித்யையில் ''ஆஜஹார இமாச் சூத்ர என்று சூத்ர சப்தத்தால் ஜான ச்ருதியை அழைத்து ரைக்வர் ப்ரஹ்ம வித்யையை உபதேசிக்கையால் சூத்ரனுக்கும் அதிகாரம் உண்டு என்று பூர்வபக்ஷம். அதை நிரஸனம் செய்கிறார்.

## (ஸூ) சுகஸ்ய ததநாதரச்ரவணாத் ததாத்ரவணாத் ஸூச்யதே ஹி

நான்காம் வர்ணத்தவர்க்கு ப்ரஹ்ம வித்யையில் அதிகாரமில்லை. உபாஸனம் என்பது மனோவ்யாபாரமாயினும், உபநயனம் செய்து அத்யயனத்தால் உணரப்பட்ட வேதாந்தத்தாலே வரும் ஜ்ஞானமே பகவதுபாஸனத்திற்கு உபாயமென்று சாஸ்த்ரஸித்தம். சதுர்த்தர்க்கோ உபநயனம் கூடாது. இதிஹாஸபுராணாதிகளும் வேதத்தின் விளக்கங்களே. அவை ஸ்வதந்த்ரமாக ப்ரஹ்மஜ்ஞானத்திற்கு உபாயமல்ல. விதுராதிகள் முன் ஜன்மத்தில் ப்ரஹ்மவித்யா நிஷ்டர்களாதலின், அந்த ஸம்ஸ்காரமே இப்பிறவியிலும், தொடர்ந்தது. ஸம்வர்க்க வித்யையில் 'சூத்ர' என்றழைத்ததும் சூத்ர ஜாதியைக் குறிப்பதல்ல. அது ப்ரஹ்மஜ்ஞானம் கிட்டவில்லையேயென்ற சோகத்தையவனிடம் ரைக்வர்கண்டே சூத்ர என்று கூறினாரேயன்றி வேறன்று.

***ததநாதரச்ரவணாத் :-*** அந்த ஹம்ஸ ரூபங்கொண்ட இரு ரிஷிகளின் அநாதரவான வாக்யத்தைக் கேட்டதால், ***ததாத்ரவணாத்***-ஜான ச்ருதியென்ற ராஜா ரைக்வரைத்தேடி ஓடிவந்தமையாலே, *அஸ்ய* இந்த ஜானச்ருதிக்கு, ***சுக்ஸூச்யதேஹி*** - சோகம் காணப்படுகிறதன்றோ - அதனால்தான் சோகமுள்ளவனே யென்ற பொருளில் 'சூத்ர' என்று ரைக்வர் அழைத்தார். ஜாதியைக் குறித்தன்று.

## 96 ஸூ. க்ஷத்ரியத்வ கதேச்ச (34)

ஸம்வர்க்க வித்யையின் தொடக்கத்தில் ஜாநச்ருதிர்ஹ பௌத்ராயண: பஹுதாயீ முதலிய வாக்யங்களாலே, சிறந்த கொடையாளி யென்றும், ஏராளமான அன்னத்தை உண்பித்தவனென்றும் க்ஷத்தாவையனுப்பி, பல, க்ராமங்களையும் வழங்கியவன் என்றும் கூறியிருப்பவற்றால் ஜானச்ருதி என்பவன் க்ஷத்ரியன் என்று புலப்படுவதால் - சூத்ரன் என்று சந்தேகிக்க வேண்டியதில்லை.

## 97 (ஸூ) உத்தரத்ர சைத்ரரதேன லிங்காத் (35)

***உத்தரத்ர*** - இவ்வித்யையின் மேல் பகுதியில் ப்ராஹ்மண க்ஷத்ரியர்களுக்கே ஸம்பந்தம் காணப்படுகிறது. அதஹ சௌநகம் காபேய மபிப்ர

தாரிணஞ்ச இத்யாதி வாக்யத்தில் அபிப்ரதாரீ என்று சைத்ரரதன் எனப்படும் க்ஷத்திரியன் சொல்லப்படுகிறுன். *சைத்ர ரதேந லிங்காத்* – காபேயம் என்பதுடன் தொடர்பால் (லிங்கத்தால்) அபிப்ரதாரி என்பவன் க்ஷத்ரியன் என்றும் சைத்ரரதனென்றும் தோன்றுகிறது. மற்ருேர் ப்ரகரணத்தில் காபேயனுடன் சம்பந்தமுள்ளவன் சைத்ரரதன் க்ஷத்திரியனேயென்று காணப்படுகிறது. (ஏதேநவை சைத்ர ரதம் காபேயா அயாஜயன், என்ற இடத்திலும்) "சைத்ரரதோநாம ஏக: க்ஷத்ரபதிரஜாயத (என்கிறவிடத்திலும் அவ்வாறே) ஆகவே இவ்வித்யையில் ப்ராஹ்மணரான ரைக்வரை விட்டு வேருன ஜானச்ருதியும் க்ஷத்ரியனுகவே இருக்கவேண்டுமென்று கருத்து.

## 98 (ஸூ) ஸம்ஸ்கார பராமர்சாத் ததபாவாபிலாபாச்ச [36]

வித்யோபதேச ப்ரகரணத்தில் - "உபத்வா நேஷ்யே" என்று உபநயனத்தைக் கூறுகையாலே, *ததபாவாபிலாபாச்ச* - "நசூத்ரே பாதகம் கிஞ்சித் நச ஸம்ஸ்காரமர்ஹதி" என்று சூத்ரனுக்கு உபநயனமில்லை என்று சொல்வதால் ஜாநச்ருதி சூத்ர ஜாதீயனல்லன்.

## 99 (ஸூ) ததபாவ நிர்த்தாரணேச ப்ரவ்ருத்தே [37]

நைதத் அப்ராஹ்மணோ வேத்து மர்ஹதி" என்று சூத்ரனில்லையென்ற நிச்சயம் ஏற்பட்ட பிறகே ப்ரஹ்மத்தை உபதேசிக்கையாலும் சதுர்த்தனுக்கு அதிகாரமில்லை.

## 100 (ஸூ) ச்ரவணாத்யயனார்த்த ப்ரதிஷேதாத் [37]

வேத ச்ரவணம் அத்யயனம் வேதார்த்த ரூபமான யஜ்ஞத்தின் அனுஷ்டானம் என்பவற்றை சூத்ரனுக்குத் தடுத்திருப்பதாலும் - அதிகாரமில்லை. என்பதையே 'தஸ்மாத் சூத்ரஸமீபே நாத்யேதவ்யம் முதலியவை சுட்டிக் காட்டுகின்றன.

## 101 ஸூ. ஸ்ம்ருதேச்ச [38]

அதஹாஸ்ய வேதமுப ச்ருண்வத: த்ரபு ஜதுப்யாம் ச்ரோத்ர பரிபூரணம் இத்யாதி ஸ்ம்ருதியாலும் சூத்ரனுக்கு ப்ரஹ்ம வித்யையில் அதிகாரமில்லை யென்று ஸித்தம், இப்படி அங்குஷ்ட ப்ரமிதாதிகரணத்தில் மனுஷ்யாதிகாரம் பற்றிய பேச்சால் - இடையில் மூன்று அதிகரணங்களில் தேவதாதிகளின் அதிகாரத்தைப் பிரஸ்தாபித்து ப்ரக்ருதமான அங்குஷ்ட ப்ரமிதனுக்குப் பரமாத் மத்வத்தை இரண்டு சூத்ரங்களாலே சாதிக்கிருர்.

## 102 ஸூ. கம்பனாத் [40]

"யதிதம் கிஞ்ச ஜகத் ஸர்வம் ப்ராண ஏஜதி நிஸ்ஸ்ருதம் பயாதஸ் யாக்னி ஸ்தபதி" இத்யாதியாலே ப்ராணனெனப்படும் அங்குஷ்ட ப்ரமிதனிடம் பயத்தாலேயே அக்னி, வாயு முதலிய உலகம் முழுதும் நடுங்குகிறது என்பதால் அங்குஷ்ட பிரமிதன் பரமாத்மாவே.

## 103 ஸூ. ஜ்யோதிர்தர்சனாத் [41]

இந்த ப்ரகரணத்தில் தான் நதத்ர ஸூர்யோபாதி நசந்த்ர தாரகம் நேமாவித்யுதோபாந்தி குதோzய மக்னி:/தஸ்யபாஸா ஸர்வமிதம் விபாதி என்று ஸூர்யாதிகளையும் மறைக்கும் சோதியின் தர்சனத்தாலேயும் அங்குஷ்ட ப்ரமிதன் பரமாத்மாவென்று தேறிற்று.

சப்தா தேவ ப்ரமித' எனத் தொடங்கி நான்கு சூத்ரங்களும் அங்குஷ்ட ப்ரமிதாதிகரணமே. அவற்றினிடையில் தேவதா, மது அபசூத்ராதிகரணங் களும் ப்ரஸங்காத் ப்ரவேசித்தன என்று காணவேண்டும்.

## 1. 3 9 அர்த்தாந்தரத்வ வ்யப தேசாதிகாணம்

முன்பு அங்குஷ்ட ப்ரமிதம் பரமாத்மா என்று சாதிக்கப்பட்டது, அதற்கு முன் தஹரவித்யை புத்தியிலிருப்பதால் அதற்கடுத்த ப்ரகரணத்திலுள்ளதும் தஹரவித்யைக்கு அங்கமுமான ஆகாசோ ஹவை நாமரூபயோர் நிர்வஹிதா என்னும் வாக்யத்தில் முக்தாத்மாவே பேசப்படுகிறுன் என்று சங்கித்து நிராகரிக் கிருர் இவ்வதிகரணத்தில் என்று ஸங்கதி.

சாந்தோக்யம் எட்டாம் அத்யாயத்தின் இறுதியில், ஆகாசோ ஹவை நாமரூபயோர் நிர்வஹிதா - தேயதந்தரா தத்ப்ரஹ்ம ததம்ருதம் இத்யாதியான வாக்யத்தில் ஆகாசம் எனப்படுபவன் முக்தாத்மாவா பரமாத்மாவா என்று சம்சயம். முக்தாத்மா என்று பூர்வ பக்ஷம். தூத்வா சரீர மக்ருதம் க்ருதாத்மா ப்ரஹ்மலோக மபி ஸம்பவானி என்று முக்தாத்மா ப்ரக்ருதனுகையாலே என்றதை நிரஸனம் செய்கிருர்.

## 104 ஸூ ஆகாசோzர்த்தாந்தரத்வாதிவ்யபதேசாத் [42]

ஆகாசம் எனப்படுவது பரமாத்மா, முக்தனன்று. ஏனெனில், அர்த் *தாந்தரத்வாதி வ்யபதேசாத்* பரமாத்மாவுக்கு அசாதாரணமான (சிறப்பான) நாமரூபங்களை நிர்வஹித்தலும் அவற்ருல் சம்பந்தப்படாமையும் கூறப்படுவதால். மேலும், நிருபாதிகமான ப்ரஹ்மத்வம், அம்ருதத்வம், ஆத்மத்வம் இவற்ருலும் ஆகாசமென்பது பரமாத்மாவே,

தத்வமஸி என்று ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்கும் ஐக்யம் சொல்கையால், நேஹ நாநாஸ்தியென்று பேதத்தைத் தடுப்பதால் ஜீவனைக்காட்டிலும், பரமாத்மாவிற்கு அர்த்தாந்தரத்வம் சொன்னது தகாது என்று சங்கை தோன்ற விடை கூறுகிறார்.

## 105 (ஸூ.) ஸுஷுப்த்யுத்க்ராந்த்யோ: பேதேந (43)

வ்யபதேசாத் என்ற பதத்தைக் கூட்டிக் கொள்ள வேண்டும். ப்ராஜ்ஞேனாத்மநாஸம்பரிஷ்வக்த; ப்ராஜ்ஞேனாத்மனாந் வாரூட: என்று ஸுஷுப்திதசையிலும், உத்க்ராந்தி தசையிலும் அத்யந்தாஜ்ஞனை ஜீவனைக்காட்டிலும். அதே சமயத்தில் ஸர்வஜ்ஞனை ஜீவனைக் குறிப்பிடுவதால் இரண்டும் வெவ்வேறான பொருளேயாம். பரமாத்மா அர்த்தாந்தர பூதமானவனே.

## 106 (ஸூ) பத்யாதி சப்தேப்ய: [44]

ஸர்வஸ்யாதிபதி: ஸர்வச்யேசான: ஸர்வச்ய வசீ. இத்யாதிகளில் தழுவப்படும் ப்ராஜ்ஞனை பதியென்றும் வசீ என்றும் ஈசான: என்றும் சொல்வதாலே ஆகாசம் பரமாத்மாவேயென்று சித்தமாயிற்று. ஐக்கியம் கூறியதும், பேதத்தைத் தடுத்ததும் ஸர்வஜகத்திற்கும் அந்தர்யாமி ஒருவனே ஆதலாலும், ப்ரஹ்ம சரீரம் இல்லாத வஸ்துவே உலகில் இல்லாமையாலும் பொருந்தும் என்று ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலான் என்கிற ச்ருதியிலே நன்கு கூறப்படுகிறது என்று திருவுள்ளம்.

***இந்த பதத்தில் பத்ததிகரணங்களால் கூறப்பட்ட கருத்துக்கள் :***

1. த்யுப்வாத்யாயதனம் ... விச்வமே பரமனுக்கு ஆத்மா என்பது
2. பூமாதிகரணம் ... எல்லையற்ற பெருமை.
3. அக்ஷராதிகரணம் ... நியமனமும், ஸர்வாதாரத்வமும்.
4. ஈக்ஷதிகர்ம வ்யபதேசம் ... முக்தர்களுக்கு போக்யமான ஸ்வபாவம்.
5. தஹராதிகரணம் ... தஹ்ரமான தன்னை ஆதாரமாகக் கொண்ட அனைத்தையும் கொண்டமை. (தஹ்ரஸ்வாதார ஸர்வத்வம்)
6. ப்ரமிதாதிகரணம் ... ஹ்ருதயத்தில் பரிமிதனுயிருத்து ஸர்வ நியந்தாவாதல்.
7. தேவதாதிகரணம் ... தேவதைகளால் உபாஸிக்கப்படுகை,

8. மத்வதிகரணம் ... வஸ்வாதி தேவதைகளால் ஸ்வசரீரக பரமாத்மா உபாஸிக்கப்படுகை.

9. அபசூத்ராதிகரணம் ... சூத்ராதிகளால் உபாஸிக்கத்தகாத தன்மை.

10. அர்த்தாந்தரத்வாதிவ்ய பதேசாதிகரணம் ... நாமரூபாதி ஏககர்த்ருத்வம்.

என்று பத்து கல்யாண குணங்களால் பூஷிதனான ச்ரிய:

பதிபுருஷோத்தமன் இந்த மூன்றும் பாதத்தால் விசாரித்து ஸ்தாபிக்கப்பட்டான் என்று ஸ்வாமி தேசிகன் அருளுகிறார்.

முதலத்யாயத்தில் - மூன்றும் பாதம் முற்றியது.

## முதல் அத்யாயம் - நான்காம் பாதம்.

## அஸ்மத் ஸர்வ குருப்யோ நம :

முன் பாதத்தில் ஸ்பஷ்ட ஜீவாதி லிங்கவாக்யங்கள் பரமாத்மாவையே குறிப்பனவென்று நிறுவப்பட்டது. இந்த 4ஆம் பாதத்தில் ஸ்பஷ்டதரமான ஜீவாதிலிங்கங்களையுடைய வாக்கியங்கள் விசாரிக்கப்படும்.

ஆகாசம் என்ற சொல் முக்தனைக் குறிக்காமல் அவ்வாக்கியத்தில் சொல்லப்படும் ப்ரஹ்ம லோகத்தைக் குறிப்பதென்று முன்னதிகரணத்தில் கூறியது போல இங்கும் அவ்யக்தாத் புருஷ: பர: என்ற இடத்தில் அவ்யக்தம் என்ற சொல்லும் ப்ரஹ்மாத்மகமல்லாத ப்ரதானத்தைக் குறிக்கலாமென்று சந்தேஹித்து ரூபகமாக வைத்து வர்ணிக்கும் வாக்யாந்தரத்தில் கூறப்பட்ட சரீரத்தைக் குறிப்பதாக ஸ்தாபிக்கப்படுகிறதென்று ஸங்கதி.

* * *

## ஆநுமானிகாதிகரணம் (1. 4. 1.)

.வல்லியில், "இந்த்ரியேப்ய: பராஹ்யர்த்தா: அர்த்தேப்யச்ச பரம்மன: ।
மனஸஸ்து பரா புத்தி: புத்தே ராத்மா மஹான் பர: ॥

மஹத: பரம் அவ்யக்தம் அவ்யக்தாத் புருஷ: பர: ।
புருஷாத் நபரம் கிஞ்சித் ஸாகாஷ்டாஸாபராகதி: ॥

-கிற இடத்தில் 'அவ்யக்தம்' என்பதற்கு சாங்கியர் கூறும் முறை பொருந்துவதாலும் புருஷாத் நபரம்' என்று இருபத்தைந்தாவதான ஜீவனை

விட வேருனவனைத் தடுப்பதாலும் - ப்ரதானமே அவ்யக்தமெனப்படுகிறது என்ற சங்கையை சூத்ரகாரர் அனுவதித்துக் கண்டிக்கிருர்.

## 107 (ஸூ.) ஆநுமானிக மப்யேகேஷாமிதிசேந்ந சரீர ரூபகவின் யஸ்த க்ருஹீதேர்த: தர்சயதிச (1)

***ஏகேஷாம்*** - கடர்களுடைய சாகையிலே - இந்த்ரியேப்ய: பராஹ்யர்த்தா: என்ற சாகையிலே, ஆனுமானிகம் அனுமானிக்கப்படும் அப்ரஹ்மாத்மக ப்ரதானமும் ஜகத்துக்குக் காரணமாக மஹத: பரம் அவ்யக்தம் எனப்பட்டது.

***இதிசேத் ந*** - என்பது தகாது. அப்ரஹ்மாத்மகமான ப்ரதானம் காரணம் என்று கூறப்படவில்லை. இந்த்ரியேப்ய: பராஹ்யர்த்தா: என்ற வாக்யத்திற்கு பூர்வ வாக்யமான -

ஆத்மானம் ரதினம் வித்தி சரீரம் ரதமேவச.
புத்திந்து ஸாரதிம் வித்தி மன; ப்ரக்ரஹமேவச
இந்த்ரியாணி ஹயானுஹு; விஷயாம் ஸ்தேஷு கோசரான்:

என்கிற இடத்தில் ஆத்மாவை ரதியாகவும் மனத்தைக் கடிவாளமாகவும் இந்த்ரியங்களைக் குதிரைகளாகவும் விஷயங்களைத் தேசங்களாகவும், உருவகித்திருக்கிறது. எதற்காகவென்ருல் பகவதுபாஸனம் ஸித்திக்க ஹேதுவான இந்த்ரிய ஜயம் ஸித்திக்கவே. அதை வசீகரிக்கும் போது மேன்மேல் அதிகங்களான இந்த்ரிய விஷயமனோபுத்தி சரீராத்ம ரூபமான ஆறு பொருட்களில் இந்த்ரியாதிகள் அவ்வோ சப்தங்களால் சொல்லப்படுகின்றன. ரதமாக உருவகிக்கப்பட்ட சரீரமாத்ரம் சரீரமெனும் சப்தத்தால் சொல்லப்படவில்லை. அவ்யக்தம் என்று சொல்லப்படுகிறது. சரீரமென்னும் உருவகமாக்கப்பட்ட ரதம் அவ்யக்த மென்ற சொல்லால் க்ரஹிக்கப்படுவதால். அவ்யக்தமென்பது சாங்கியர் கூறிய ப்ரதானம் என்று அர்த்தமாகாது. அவ்யக்தாத் புருஷ; பர: என்பதும் ஜீவனைச் சொல்லவில்லை. பரமபுருஷனே அந்தர்யாமியாயிருந்து உபாஸனத்தை நடத்தி வைக்கிருனென்று அவனே வசீகரிக்க வேண்டியவற்றுள் பேரெல்லை: பரமகாஷ்டை என்று கூறப்படுகிறது. அவனை வசீகரணம் செய்வது என்பது அவனிடம் சரணுகதி செய்வதே, இவ்வர்த்தத்தை ச்ருதியே காட்டுகிறது. " யச்சேத்வாங்மனஸீ ப்ராஜ்ஞ: " என்று.

அவ்யக்தமென்பதற்கு சரீரம் என்று எப்படிப் பொருள் வரும் என்ருல், அதற்கு விடை தருகிருர்,

## 108 (ஸூ-) ஸூக்ஷ்மந்து ததர்ஹத்வாத் (2.)

துசப்தம் ஏவ என்ற பொருளில் வந்தது.

**ஸூக்ஷ்மந்து** - அவ்யக்தம் தான், வேறு அவஸ்தை பெற்று சரீரமாகிறது **ததர்ஹத்வாத்** - அந்த சரீராவஸ்தமான ப்ரதானமே உபாஸனுனுஷ்டானத்திற்குத் தகுதியுள்ளதாகின்றது. அதனுல் காரண வாசக சப்தம் கார்யத்தைக் குறிக்கிறது.

ரூபகம் செய்யப்பட்ட ஆத்மாதிகள் - வசீகரிக்கத் தக்கவையில் சிறந்த இந்த்ரியம் - அர்த்தம் முதலியவற்ருல் க்ரஹிக்கப்பெற்ருல் - அவ்யக்தாத் புருஷ: பர: என்று புருஷனை ஏன் க்ரகிக்க வேண்டும் என்பதற்கு விடை கூறுகிருர்.

## 109 (ஸூ) ததீனத்வாதர்த்தவத் (3)

ஆத்மசரீராதிகள் அந்தர்யாமியான பரமபுருஷனுக்கு அதீனமாகையால் **அர்த்தவத்** - ப்ரயோஜன முள்ளதாகிறது. ஆகவே உபாஸனம் கைகூடுவதற்கு வசப்படுத்த வேண்டிய இந்த்ரியாதிகளுக்கு எல்லை நிலமாயும் பரம ப்ராப்யனுயும் இருக்கிருனென்று சொல் புருஷனைப்பற்றிக் கூறியதென்பது வேதாந்த தீபத்தின் விடை - ஸ்ரீபாஷ்யத்திலோ - ப்ரதானத்தை ஏற்பதும் மறுப்பதும் முரண்பட்டதாதலால் எப்படிக் கூடுமென்று சந்தேகித்து, ஸ்வதந்த்ரமாக ப்ரதானத்தை ஏற்கவில்லை. பின்னென்னெனில். பரமபுருஷன் ப்ரேரணையால் ஸ்ருஷ்ட்யாதிகளில் ப்ரவர்த்திப்பதால் ப்ரயோஜனமுள்ளது என்று விடை கூறப்படுகிறது.

## 110 (ஸூ) ஜ்ஞேயத்வாவசநாத் ச (4)

தந்த்ர ஸித்தப்ரக்ரியை இவ்வாக்யத்தில் ஸம்மதமானுல், அவ்யக்தம் ஜ்ஞேயம் என்று எண்ணவேண்டும். வ்யக்தம் அவ்யக்தம், ஜ்ஞேயன் இவை பற்றியறிவதால் என்றல்லவோ சாங்க்யர்களின் முறை. இந்த சாகையில் அவ்யக்தம் ஜ்ஞேயமாம் முமுக்ஷுவுக்கு என்று கூறவில்லை. ஸாங்க்ய ப்ரக்ரியைக்கு இங்கு ஸம்பந்தமேயில்லை.

## 111 (ஸூ) வததீதி சேந்ந, ப்ராஜ்ஞோஹி ப்ரகரணாத் (5)

அசப்தம் அஸ்பர்சம் எனத் தொடங்கி, மஹத; பரம் த்ருவம், நிசாய்யதம் ம்ருத்யு முகாத் ப்ரமுச்யதே - என்ற ப்ரதானம் ஜ்ஞேயம் என்று அடுத்தாற்போல் வேதம் கூறுகிறது, என்ருல் அன்றன்று, அசப்தம், அஸ்பர்சம்

முதலியவற்ருல் ப்ராஜ்ஞனை பரமபுருஷனே சொல்லப்படுகிருன். ப்ரதானமன்று ஸோzத்வந: பாரமாப்னோதி, தத்விஷ்ணோ: பரமம் பதம் என்று ப்ராஜ்ஞனுக் குரிய ப்ரகரணமாகையால்.

## 112 (ஸூ) த்ரயாணாமேவ சைவம் உபந்யாஸ; ப்ரச்னச்ச (6)

இந்த ப்ரகரணத்தில் யேயம் ப்ரேதே விசிகித்ஸா மனுஷ்யே எனத் தொடங்கி இறுதிவரை உபாஸ்யன், உபாஸகன், உபாஸனம் என்று மூன்று அர்த்தங்களும் இவ்வாறு அறியத்தக்கவை என்று உபன்யாசமும் வினவும் உள்ளன, ஆதலால், அப்ரஹ்மாத்மகமான ப்ரதானத்தை ஜ்ஞேயமென்று கூறவில்லை.

## 113 (ஸூ) மஹத்வச்ச [7]

புத்தே: ஆத்மா மஹான் பர: " என்றவிடத்தில் எப்படி மஹான் என்ற சொல்லால் ஸாங்க்யர் கூறும் மஹத் தத்வம் சொல்லப்படவில்லையோ-அப்படியே அவ்யக்தம் என்ற சொல்லால் சாங்கியரில் ப்ரதானம் கூறப்படவில்லை. சாங்கியர் கருத்தை யேற்ருல் "புத்தேராத்மா மஹான் பர:" என்றதில் புத்தி என்பதும் மஹத் தத்வத்தைச் சொல்வதால் மஹத் தத்வத்தைவிட அதே உயர்ந்தது என்று பொருள் வரும். ஆதலின், அது பொருந்தாது. ஆகவே மஹான் என்பது ஆத்மாவிற்கு விசேஷணம். ஆத்மா எல்லாவற்றையும் விட மஹத்தான பரன் என்பதாகத் திருவுள்ளம்.

## சமஸாதிகரணம் [143]

## 114 (ஸூ) சமஸவதவிசேஷாத் [8]

பரிசேஷக்ரமத்தாலும் ஸ்தானப்ரமாணத்தாலும், அவ்யக்தம் என்பது அவ்யக்தத்தின் (ப்ரதானத்தின்) கார்யமான சரீரத்தைச் சொல்வது என்று முன் கூறப்பட்டது, அதே காரணத்தால், அஜாமேகாம் என்ற இடத்திலும் அஜாசப்தம் அவ்யக்தத்தைக் குறிப்பதாகட்டும், என்ற பூர்வ பக்ஷத்தைக் கூறி அப்ரஹ்மாத்மகமான ப்ரதானம் அதன் பொருளன்று என்று இவ்வதிகரணத்தில் ஸ்தாபிக்கிருர்,

ச்வேதாச்வதரத்தில் " அஜாமேகாம் லோஹித சுக்லக்ருஷ்ணாம் பஹ்வீ: ப்ரஜா: ஸ்ருஜமானாம் ஸரூபா:" "இத்யாதி மந்த்ரத்தில் 'அஜா' என்ற சொல்லால் சாங்க்யர்கள் கூறும் ப்ரக்ருதியே சொல்லப்படுகிறதா அல்லது ப்ரஹ்மாத்மகமானப்ரக்ருதியா? என்று சம்சயம். ப்ரக்ருதியேயென்று பூர்வ பக்ஷம். ஏனெனில், அஜாமென்பதால், உத்பத்தியில்லாமை கூறப்படுவதாலும் ஏராளமான ப்ரஜைகளுக்குத்தானே ஸ்ருஷ்டிகர்த்தா என்று கூறியதாலும் என்ற இந்த பூர்வபக்ஷத்தை நிரஸனம் செய்கிருர்.

இந்த அஜாசப்தம் சாங்க்யர்கள் கூறும் ப்ரதானத்தைக் குறிப்பதன்று என்ற வாக்யத்தை வருவித்துக் கொள்ளவேண்டும். பின்னர், ***சமஸவத் அவிசேஷாத்***—“அர்வாக்பிலச்சமஸ:” ஊர்த்வ புத்ன: என்ற மந்த்ரத்தில் சமஸத்துக்கு—பக்ஷிப்பதற்கு சாதனம் என்ற காரணத்தால் சமஸ பதம் சிரஸ்ஸைச் சொல்வதுபோல் அஜாமேகாம் என்றதில் அஜாம் என்ற சப்தம் அப்ரஹ்மாத்மக ப்ரதானத்தைச் சொல்வதென்கையில் விசேஷ காரணம் இல்லாமையால், அது பொருந்தாது. ஸ்வதந்த்ரமாக ஸ்ருஷ்டிப்பது என்று ஓர் விசேஷணமுமில்லை. ப்ரஹ்மாத்மிகையானுல் ப்ரக்ருதி-ஸ்ருஷ்டி ஹேது வாய் அஜா என்று கூறப்படலாம் என்று மேலே காட்டப்படும். யஜ்ஞத்தில் ப்ரஸித்தமான சமஸம் என்னும் பாத்திரம் மேல் த்வாரமும் கொண்டு கீழே பருத்து இருக்கும். சிரஸ்ஸென்னும் சமஸமோ என்றால் கீழே பிலம் (த்வாரம்) கொண்டு மேலே பருத்திருக்கும் என்று அர்த்தம் கண்டு கொள்ளத்தக்கது.

ப்ரஹ்மாத்மிகையான அஜையைச் சொல்கையில் விசேஷ ஹேதுவை அருள்கிறார்.

## 115 (ஸூ) ஜ்யோதிருபக்ரமாது ததாஹ்யதீயதே ஏகே [ 9 ]

***ஜ்யோதிருபக்ரமாது*** — ஜ்யோதி: — ப்ரஹ்மம் — அதை காரணமாகக் கொண்டதே இந்த அஜை.

***ததாஹி அதீயதே ஏகே*** - தைத்திரீயர்கள் - ப்ரஹ்மத்தைக் காரணமாகக் கொண்டதால் இதை ப்ரஹ்மாத்மிகையென்று அல்லவோ ஓதுகிறார்கள். அதாவது - அணோரணீயான் மஹதோ மஹீயான் என்று பரப்ரஹ்மத்தை உபபாதித்து - ஸப்த ப்ராணா: ப்ரபவந்தி தஸ்மாத் முதலிய வாக்யங்களால், ப்ராணன், அக்னி, சமுத்ரம், பர்வதங்கள் முதலிய ஸகல ஜகத்தும் ப்ரஹ்மத்தில் இருந்தே தோன்றுகின்றனவாதலின், ப்ரஹ்மாத்மகமென்றே அனுஸந்திக்க வேண்டுமென்று விதிக்கும்போது, அஜாமேகாம் லோஹித சுக்ல க்ருஷ்ணாம் என்று விளக்கப்படும் அஜை ப்ரஹ்மாத்மிகையென்று ஸித்திக்கையால் அந்த தைத்திரீய மந்த்ரம் போலவே - சிறிது வேறுபாடுள்ள ச்வேதாச்வதர மந்த்ரத்தில் கூறப்படும் அஜையும் ப்ரஹ்மாத்மிகையென்றே நிச்சயிக்கப்படுகிறது.

அப்படியாயின், ஒரே வஸ்துவுக்கு அஜாத்வமும், ஜ்யோதிருபக்ரமாத்வம் (ப்ரஹ்மகாரணத்வமும்) எப்படிப் பொருந்துமென்றால் பரிஹாரம் அருளுகிறார்.

## 116 (ஸூ) கல்பநோ பதேசாச்ச மத்வாதிவத் அவிரோத: [ 10 ]

***கல்பனு*** - ஸ்ருஷ்டி: “அஸ்மான் மாயீ ஸ்ருஜதே விச்வமேதத்” என்று ஸ்ருஷ்டியை உபதேசிக்கையால் - ப்ரளய ஸமயத்தில் இந்த ப்ரக்ருதியானது

பரமபுருஷனுக்கு சரீரமாய் ஸூக்ஷ்ம ரூபமாயுள்ளது. அந்த அவஸ்தையைக் கருதியே ப்ரக்ருதி அஜா எனப்படுகிறது. ஸ்ருஷ்டி ஸமயத்திலோ ஸூக்ஷ்மமான ப்ரக்ருதியை சரீரமாகக்கொண்ட ப்ரஹ்மத்திலிருந்து ஸ்தூலாவஸ்தை உண்டாகிறது. அதையெண்ணியே ஜ்யோதிருபக்ரமாத்வத்தை வைத்து விரோதமேதுமில்லை. ***மத்வாதிவத்*** - மது வித்யையிலே கார்யாவஸ்தையில் 'அஸௌ வாதித்யோ தேவமது' என்று வஸ்வாதிகளின்போக்யமான ரஸத்துக்கு ஆதாரமானபடியால் மதுவாகக் கல்பனமும் - அதே ஆதித்யனுக்கு 'அத தத ஊர்த்வ - உதேதி அனேனைவோதேதா நாஸ்தமேதா'' என்று முதலில் காரணவஸ்தையிலே நாமரூபங்களை விட்டமையால் ஸூக்ஷ்ம ரூபமாக இருப்பும் எப்படி முரணனவையல்லவோ அப்படியேயிங்கும் இரண்டு தன்மைகள் ஏற்படுவதில் முரணில்லை என்பதாம்.

## ஸங்க்யோ பஸங்க்ரஹாதிகரணம் (4)

முன் அதிகரணத்தில் ஸாங்க்யர் கூறிய அப்ரஹ்மாத்மக அவ்யக்தத்தை விளக்கும் அஜாமேகாம் என்ற ச்ருதியில் ஏற்பட்ட பூர்வபக்ஷம் நிரஸிக்கப் பட்டது. இதில் சாங்க்யர்கூறிய தத்வங்களின் சங்க்யையை (எண்ணிக்கையை)க் கொண்டு ச்ருத்யர்த்தத்தில் ஏற்படும் பூர்வபக்ஷம் கண்டிக்கப்படுகிறது என்று ஸங்கதி.

வாஜஸனேயகத்தில் - யஸ்மின் பஞ்ச பஞ்ச ஜனா: ஆகாசச்ச ப்ரதிஷ்டித: 'தமேவம் மன்ய ஆத்மானம் வித்வான் ப்ரஹ்மாம்ருதோऽம்ருதம்' என்னும் மந்த்ரத்தில், சாங்க்யர் கூறிய இருபத்தைந்து தத்வங்கள் கூறப் படுகின்றனவா இல்லையா எனச் சந்தேஹம். அதுவே கூறப்படுகிறதென்று பூர்வ பக்ஷம், பஞ்ச பஞ்ச ஜனு: என்று ஐந்து ஜனங்களால் ஆரம்பிக்கப் பட்ட கார்யங்கள் ஐந்து என்று விசேஷிப்பதால் ($5 \times 5 = 25$) 25 தத்வங்கள் தோன்றுகின்றன. மோக்ஷப்ரகரணத்தாலே அந்த தத்வங்கள் ஸாங்க்ய தந்த்ரோக்தங்களென்று தோன்றுகின்றது. தமேவம் மன்ய ஆத்மானம் வித்வான் ப்ரஹ்மாம்ருதோऽம்ருதம் என்றதும் இருபத்தைந்தாவது தத்வமான ஆத்மாவை ப்ரஹ்மமென்றறிந்தவன் முக்தனுவானென்கிறது. என்னும் பக்ஷத்தைக் கண்டிக்கிருர்.

## 117 (௩௦) நஸங்க்யோ பஸங்க்ரஹாதபி நாநாபாவாத் அதிரேகாச்ச (11)

***ஸங்க்யோபஸங்க்ரஹாதபி ந***- இருபத்தைந்து எண்ணிக்கையை ஏற்ருலும், இந்த தத்வங்கள் அப்ரஹ்மாத்மங்களல்ல - ***நாநாபாவாத்*** யஸ்மின் என்று குறிப்பிடப்பட்ட ப்ரஹ்மம் அந்த தத்வங்களுக்கு ஆதாரமானபடியாலே, அப்ரஹ்மாத்மகமான தத்வங்களைக் காட்டிலும் இந்த தத்வங்களுக்கு ப்ரஹ்மாத்மகத்வத்தாலே பேதம் தோன்றுவதால், ***அதிரேகாச்ச*** - யத்

சப்தத்தால் சொல்லப்படும் ப்ரஹ்மமும் ஆகாசமும் வேருயிருப்பதால், (அதிகமாயிருப்பதால்) தத்வங்கள் இருபத்தேழு ஆகின்றன. ஸூத்ரத்தில் அபி சப்தத்தால் ஸங்க்யையை அங்கீகரிக்கவில்லையென்று ஏற்படுகிறது. ஆத்மாவுக்கும் ப்ரஹ்மத்துக்கும் ஐக்யமும், ய ஆத்மனிதிஷ்டன் இத்யாதி ச்ருதியோடு முரண்பட்டதென்று முன்பே கூறப்பட்டது. 'பஞ்ச ஜனங்கள் என்பது கண் முதலிய இந்த்ரியங்கள் - அவை ஐந்து என்பதே பஞ்ச பஞ்ச ஜனு: என்பதன் பொருள் - ஸப்த ஸப்தர்ஷய: என்பதுபோல் - என்பது திருவுள்ளம்.

## 118 (ஸூ) ப்ராணுதயோ வாக்ய சேஷாத் [ 12 ]

ப்ராணஸ்ய ப்ராணமுத சக்ஷுஷ: சக்ஷு: ச்ரோத்ரஸ்ய ச்ரோத்ரம் அன்னஸ்யாந்நம் - மனஸோ மன: யேவிது: என்ற வாக்ய சேஷத்தாலே ப்ராணன் முதலியவை ப்ராண சக்ஷுஸ் ச்ரோத்ர மனஸ்ஸுக்களே பஞ்ச பஞ்ச ஜனு: எனப்படுகின்றன. ஜனுத் - ஜனங்கள் என்று வ்யுத்பத்தி யாலே இந்த்ரியங்கள் கூறப்படுகின்றன என்று கருத்து. அன்னஸ்யான்னம் என்கிற வாக்யமில்லாமையால் பஞ்ச ஜனங்கள் ஐந்து என்று எப்படி அறியப் படுகிறது என்ற சங்கையைப் பரிஹரிக்கின்ருர்.

## 119 (ஸூ) ஜ்யோதிஷைகேஷாம் அஸத்யன்னே [ 13 ]

***ஏகேஷாம்*** - காண்வர்களின் வாக்ய சேஷத்தில், ***அன்னே அஸதி***- அன்னம் என்ற பாடம் இல்லாவிட்டாலும் - தம் தேவா: ஜ்யோதிஷாம் ஜ்யோதி: என்று தொடக்கத்தில் ஆரும் வேற்றுமையான ஜ்யோதிஸ் சப்தம் ப்ரஹ்மத்தைக் குறித்தால் ப்ரகாசகங்களுக்கும் ப்ரகாசகங்கள் ப்ரஹ்மமே என்று தோன்றுகிறது. அந்த ப்ரகாசகங்கள் என்பன எவை என்ருல், பஞ்ச, பஞ்சஜனு: என்று பொதுவாகச் சொன்ன பஞ்சப்ரகாசகங்களை ப்ராணஸ்ய ப்ராணம் முதலியவற்றிலே விசேஷிக்கிறது. ப்ராணஸ்ய என்று த்வகிந்த்ரியம் சொல்லப்படுகிறது. அன்னஸ்ய என்று மூக்கும் (க்ராணேந்த்ரியமும்) ரஸனேந்த்ரியமும் சேர்த்து கூறப்படுகின்றன. ஆகையால், ஐந்து என்பதற்குத் தடையில்லை எனத் திருவுள்ளம். ஆகவே யஸ்மின் பஞ்ச பஞ்சஜனு: என்ற மந்த்ரத்தில், இந்த்ரியங்களுக்கும் ஆகாசாதி பூதங்களுக்கும் ப்ரஹ்மாச்ரயத்வம் கூறப்படுவது ஸாங்க்யரின் கருத்தன்று.

## காரணத்வாதிகரணம்

## 120 (ஸூ) காரணத்வேந சாகாசாதிஷு யதாவ்யபதிஷ்டோக்தே: [ 14 ]

இப்படி மூன்றதிகரணங்களால் சாங்கியர் கூறியதன் சாயையை அனுஸரித்த வாக்யங்கள் பரமாத்மாவையே போதிப்பவையென்று ஸ்தாபித்த

துடன், அவர்கள் - அப்ரஹ்மாத்மக ப்ரதானத்தையே போதிப்பதாகக் கூறும் - அவ்யாக்ருதம் முதலிய சொற்களுக்கும் பரமாத்மாவே பொருள் என்று ஈக்ஷத்யதிகரணுதிகளில் சொன்ன அர்த்தத்தை இங்கு சிங்க நோக்குமுறையில் காட்டி ஸ்தாபிக்கிருர்.

ஜகத்திற்குக் காரணத்தைக் கூறும் "தத்தேதந்தர்ஹி அஸதேவேதம்" இத்யாதி வாக்யங்கள் ப்ரதானத்தைக் காரணமாகக் கூறுபவையா - அன்றி ப்ரஹ்மத்தைக் காரணமாகக் கூறுபவையாயென சம்சயம் - ப்ரதான காரண-வாதபரங்கதளே - ஏனெனில், ஸதேவ ஸோம்யேத மக்ர ஆஸீத், என்று சில இடங்களில் 'ஸத்' காரணமெனப்படுகிறது. சில இடங்களில், அஸதே வேதமக்ரே என்று 'அஸத்' காரணமெனப்படுகிறது. அவ்வாறே 'தத்தே-தந்தர்ஹி அவ்யாக்ருத மாஸீத்' என்று அவ்யாக்ருதம் காரணமெனப்படுகிறது. அவ்யாக்ருதம் என்பது ப்ரதானமே. ஆதலின், ப்ரதானம் காரணமாகையால், ஸகல வாக்யங்களும் ப்ரதானத்தையே காரணமென்கின்றன என்ற பூர்வ பக்ஷத்தை நிராகரிக்கிருர்.

**காரணத்வேநச**—ஆகாசம் முதலிய பதங்கொண்ட வாக்யங்களில்—தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மன ஆகாசஸ் ஸம்பூத: முதலிய எல்லா வாக்யங் களிலும் **யதாவ்ய பதீஷ்டஸ்யைவ காரணத்வேந உக்தே:** ஸர்வஜ்ஞன். ஸர்வ சக்தி என்றெல்லாம் முன் ஈக்ஷத்யதிகரணுதிகளிலே நிரூபிக்கப்பட்ட பரம புருஷனே காரணமென்று சொல்வதால் -அவனுக்குக் காரணத்வ நிலையில் தேவாதி நாமரூபங்களில்லாமையால்—அஸத், அவ்யாக்ருதமெனப்படுகிருன். ஆதலின், எல்லாகாரணவாதி வாக்யங்களும் பரப்ரஹ்மத்தையே காரணமாகக் கூறுவன என்று கருத்து. அப்படியாகில், அஸத்வா இதமக்ர ஆஸீத் என்பதற்கு என்ன பொருள் என்பதைக் கூறுகிருர்—அடுத்து.

## 121 (ஸூ) ஸமாகர்ஷாத் (15)

ஸோகாமயத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி, பஹுபவன ஸங்கல்பத் துடன் ஜகத்தை ஸ்ருஷ்டி செய்யும் ஸர்வஜ்ஞனை பரப்ரஹ்மத்தையே "அஸத்வா இதம்" என்ற வாக்யத்தில் ஆகர்ஷித்துக் கொள்வதால்—ஸூக்ஷ்ம சிதசித் விசிஷ்டனை ப்ரஹ்மத்துக்குக் காரணுவஸ்தையில் நாமரூம ஸம்பந்தமில்லாமையால் இதைப்பின்பற்றி அஸத்தென்று ப்ரஹ்-மத்தைச் சொல்கிறது. தத்தேதந்தர்ஹி அவ்யாக்ருதமாஸீத் என்றும், ப்ருஹதாரண்யகவாக்யத்திலும், ஸ ஏஷ இஹப்ரவிஷ்ட: ஆநகாக்ரேப்ய: பச்யன் சக்ஷு: முதலிய முன் பின் வாக்யங்களை ஆராயும் விஷயத்தில் ஸர்வஜ்ஞுய்—ஸர்வ சக்தியுக்தனுயுள்ள பரப்ரஹ்மமே அவ்யாக்ருத சரீரமாய்க்கொண்டு – ஜகத்தை ஸ்ருஷ்டிக்கையால் —அவ்யாக்ருதமென்று ப்ரதான சரீரகமான பரப்ரஹ்மமே கூறப்படுகிறது என்று ஸித்தமாயிற்று.

## ஜகத் வாசித்வாதிகரணம்

## 121 (ஸூ) ஜகத் வாசித்வாத் (16)

இப்படி முன் அதிகரணத்தில் வேருகக் கூற முடியாத ப்ரகரண பலத்தால் அப்ரஹ்மாத்மக ப்ரதான காரணத்வத்தை நிரஸனம் செய்து, "யஸ்ய சைதத்கர்ம" என்று கர்மவான் என்னும் சிறப்பான லிங்கத்தைத் துணைகொண்டு முன் அதிகரண ந்யாயத்தின்படி ஸமாகர்ஷிக்கப்பட்ட ஜீவனே ப்ரதானத்தின் அதிஷ்டாதாவாதலின் பரனுகட்டும் என்று சங்கித்து அவனுக்கும் காரணத்வமில்லையென்று நிரூபிக்கிருரென்று சங்கதி.

முன்பு அவ்யாக்ருத சப்தத்திற்கு ப்ரக்ருதி என்ற பொருளை விலக்கி பரமாத்மா என்று பொருள் தீர்மானிக்கப்பட்டது. தற்போது கர்ம சப்தத்திற்குப் புண்ய பாப ரூபமான கர்மா என்ற பொருளை விலக்கி— படைக்கப்படும் ஜகத் என்ற பொருள் நிறுவப்படுகிறது. என்று மற்ருேர் ஸங்கதி.

வாஜஸனேயகத்தில் - கௌஷீதகீ ப்ராஹ்மணத்தில் - ப்ரஹ்ம தே ப்ருவாணி எனத் தொடங்கி "யோவை பாலாகே ஏதேஷாம் புருஷாணும் கர்த்தா யஸ்ய சைதத் கர்ம ஸவை வேதிதவ்ய:" என்னும் வாக்கியத்தில் வேதிதவ்யனுகக் கூறப்பட்டவன், ஸாங்க்யர் கூறும் புருஷனுபரமாத்மாவா என்று சம்சயம். ப்ரக்ருதி வியுக்தனுன புருஷனே வேதிதவ்யன் 'யஸ்ய சைதத்கர்ம' என்று வேதித்வயனுன புருஷனுக்குப் புண்ய பாபரூப கர்ம ஸம்பந்தம் சொல்வதால் என்கிற பூர்வ பக்ஷத்தைக் கண்டிக்கிருர்.

(ஸூ) ***ஜகத்வாசித்வாத்*** - பரமபுருஷனே வேதிதவ்யன் - அறியத் தக்கவன் என்று வருவித்துக்கொள்ளவேண்டும். ஏனெனில், ஏதத் கர்ம என்று ஏதத் சப்தத்தோடு ஒரே வேற்றுமையிலுள்ள கர்ம சப்தம் - க்ரியதே இதி கர்ம என்ற வ்யுத்பத்தியால் ஜகத்தைச் சொல்வதால், இது புண்யர புண்ய ரூபியான கர்மாவைக் குறிப்பதானுல், ஏதத் என்ற சப்தம் வீணுகும் என்று கருத்து.

## 122 (ஸூ) ஜீவமுக்ய ப்ராணலிங்காந்நேதிசேத் தத்வ்யாக்யாதம். (17)

ஏவமேவைஷ ப்ரஜ்ஞாநாத்மா ஏதைராத்மபிர் புங்க்தே என்று கூறப்படும் போக்தா என்னும் ஜீவனுக்குரிய லிங்கத்தாலேயும், அதாஸ்மின் ப்ராண ஏவை கதா பவதி என்று கூறப்பட்ட முக்யமான ப்ராண லிங்கத்தாலும் வேதிதவ்யன் பரமாத்மா அல்லன் என்ருல், ***தத்வ்யாக்யாதம்*** - ப்ரதர்த்தன

வித்யையில் அது விரித்துரைக்கப்பட்டது. ப்ரகரணத்தை முன்பின் ஆராய்வதால் பரமாத்மபரம் இவ்வாக்யமென்று நிச்சயித்தால் ஜீவாதிகளைக் குறிப்பிடும் சொற்களும் - ஜீவாதிகளைச் சரீரமாய்க் கொண்ட பரமாத்மாவையே போதிப்பவை என்று ப்ரதர்தன வித்யாந்யாயம் இங்கு நோக்கத்தக்கது.

தௌஹ ஸுப்தம் புருஷமாஜக்மது: என்று தொடங்கி உறங்கும் மனிதனிடம் நெருங்கி பிரம்பால் அடித்து எழுப்பி சரீரம், இந்த்ரியம் பிராணன் இவற்றைவிட வேறான ஜீவனிருப்பதை விளக்குவது இந்த வாக்கியம் என்றும் சங்கைக்கு உத்தரமருளுகிறார் :-

## 123 (ஸூ) அந்யார்த்தந்து ஜைமினி: ப்ரச்ன வ்யாக்யானுப்யாம் அபிசைவமேகே (18)

து என்ற சொல் சங்கையை மாற்றுகிறது. ஜீவனைக் குறிப்பது ஜீவனை விட்டு வேறான ப்ரஹ்மமிருப்பதை விளக்குவதற்கானது. கேள்வியாலும் பதிலாலும் அவ்வாறே புலப்படுகிறது.

***கேள்வி:***—பாலாகியே! இந்த மனிதன் எங்கு சயனித்திருந்தான்? என்று உறங்கிய மனிதனுக்கு ஆதாரமென்ன? என்று பரமாத்மாவைப்பற்றி வினவினார் அஜாத சத்ருவென்னும் ராஜா. பதிலறியாத பாலாகியிடம் அஜாத சத்ருவே விடையைக் கூறுகிறார். 'அதாஸ்மின் ப்ராண ஏகதாபவதி' என்று ஸர்வப்ராணிகளும் உயிர்வாழக் காரணமானபடியாலே 'ப்ராணன்' எனப்படும் பரமாத்மாவிடமே ஜீவன் ஸுஷுப்தி செய்கிறான் என்று கருத்து. இந்த வினாவிடைகளாலே ஜீவனைக் குறிப்பது ப்ரஹ்மத்தை விளக்கவே என்று ஜைமினி முனிவர் கூறுகிறார். ஸ்ரீவ்யாஸ முனிவர்க்கும் இதுவே திருவுள்ளம்.

***அபிசைவமேகே*** - வாஜஸனேயிகள் இவ் வினா விடைகளைப் பரமமாத் பரமாக ஓதுகிறார்கள். 'க்வைஷ ஏதத் பாலாகே' இத்யாதியாக - ய ஏஷோऽந்தர்ஹ்ருதய ஆகாச: தஸ்மின் சேதே என்பது வரை தஹராகாசம் பரமாத்மா என்று முன்னரே நிச்சயிக்கப்பட்டுள்ளது.

## 124 (ஸூ) வாக்யாந்வயாத் (19)

முன் அதிகரணத்தில் ஸாங்க்யனால் லிங்கமாக ஒப்புக்கொள்ளப்பட்ட கர்ம சப்தம் புண்யபாப ரூப கர்மாக்களையும், ஜகத்தையும், குறிப்பதால் பத்தனான ஜீவனுக்குப் பரத்வம் கிடையாதென்று நிலை நாட்டப்பட்டது. இந்த அதிகரணத்தில், மைத்ரேயீ ப்ராஹ்மண ப்ரகரணத்தில் ஆத்ம சப்தத்தால் குறிக்கப்படுவதாகிற சிறப்பான லிங்கத்தாலும், "ஸர்வம் தம் பராதாத் யோऽந்யத்ராத்மனஸ் ஸர்வம் வேத" என்னும் ச்ருதியில்

ஜீவனைக் காட்டிலும் வேறான தத்வம் தடுக்கப்படுவதாலும், கணவன், மனைவி புதல்வனென்னும் ஸம்பந்தம் ஜீவனுக்கே சிறப்பான தாதலாலும் முக்த ஜீவனே மைத்ரேயீ ப்ராஹ்மணத்தில் பேசப்படுகிறான் என்ற சங்கையால் ஸங்கதி.

ப்ருஹதாரண்யகத்தில் மைத்ரேயீ ப்ராஹ்மணத்தில் ''நவா அரே பத்யு: காமாய பதி: ப்ரியோ பவதி—ஆத்மனஸ்து காமாய பதி: ப்ரியோ பவதி' என்று தொடங்கி, நவா அரே ஸர்வஸ்ய காமாய ஸர்வம் ப்ரியம் பவதி' என்று கூறி ஆத்மனஸ்து காமாய ஸர்வம் ப்ரியம் பவதி, என்றபின்- ''ஆத்மா வாரேத்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:'' என்று கூறப்பட்டுள்ளது. இதில் காணத்தக்கவனாகக் குறிப்பிட்ட ஆத்மா ஸாங்க்யர் கூறும் புருஷனா, பரமாத்மாவா என்று சங்கை, புருஷன் தான்- ஏனென்றால், கணவன் - மனைவி, புதல்வன், நண்பன், பசுக்கள் முதலிய ப்ரிய ஸம்பந்தியான ஜீவனே காணத் தக்கவனென்று சொல்வதால்— பரமாத்மாவல்லன் என்று பூர்வ பக்ஷம், இதற்கு விடை,

## (ஸூ-௭) வாக்யான்வயாத்

காணத்தக்கவனென்று, குறித்தது பரமாத்மாவே—என்ற சொல் வருவித்துக்கொள்ளத்தக்கது. அது ஏனென்றால், மைத்ரேயீ-ப்ராஹ்மணத்தில் எல்லா வாக்யங்களுக்கும் பரமாத்மாவிடமே அன்வயம் (பொருத்தம்) ஏற்படுவதால் —அதெப்படியென்றால், நவா அரே பத்யு: காமாய பதி: ப்ரியோ பவதி எனத் தொடங்கி, ஆத்மாவாரே த்ரஷ்டவ்ய: என்று கூறி அதன் மேலும்—ஏவம் வாரே மஹதோ பூதஸ்ய நி:ச்வஸிதமேதத் யத்ருக் வேத: என்னும் வாக்யத்தாலே ஸர்வ காரணத்வம் சொல்வதால் அந்த ஜகத் காரணத்வம் —'ஜகத்வ்யாபாரவர்ஜம்' என்ற சூத்திரப்படி முக்தாத்மாவுக்குக் கூட சம்பவிக்காது ஆதலின், ஸர்வஜ்ஞத்வாதிகளைக் கொண்ட பரமாத்மாவுக்கே சிறப்பானதென்று தீர்மானிப்பதால், முதலிலிருந்து கடைசிவரை எல்லாம் பரமாத்மாவையே குறிப்பதால், ஒரே வாக்யமாகப் பொருத்திக்கூற வேண்டியிருப்பதால், ஒவ்வோர் வாக்கியத்திலும் ஆத்ம சப்தம் மைத்ரேயிக்கு அம்ருதத்வத்தைச் சாதிப்பவனாகக் காண வேண்டியவனென்று உபதேசிக்கப் பட்ட பரமாத்மாவையே போதிக்குமென்பதால்தான் வாக்கியங்கட்கு அன்வயம் (பொருத்தம்) ஏற்படும்.

'நவா அரே' என்ற ச்ருதியின் பொருளோவென்றால், அந்தந்த ஜீவன்களின் கர்மானுகுணமாக பரமபுருஷன் தன் ஸங்கல்பத்தால் பத்யாதிகளைப் பத்னீ முதலியவர்களுக்குப் பிரியமாக்குகிறான். கணவன் முதலியோரிடம் உள்ள மனைவி மீதான அன்பு என்பது பகவானின்

ஸங்கல்பத்தாலேற்படுவ்தேயன்றி வேறன்று என்று தாத்பர்யம். ஆத்மன: காமாய - பரமாத்மாவின் ஸங்கல்பம் ஸித்திப்பதற்காகவே (தங்கள் காமம் நிறைவேற என்பது பொருளன்று, இவ்வாறு ஆத்ம சப்தத்திற்குப் பொருள் கூறுவதாலேயே வாக்யம் பொருந்துவதாகிறது. ஆத்ம சப்தத்திற்கு ஜீவாத்மபரமாகப் பொருள் கொண்டும் வேறு விதமாக ஸ்ரீ பாஷ்யத்தில் வாக்யத்திற்கு அன்வயம் (பொருத்தம்) காட்டப்படுகிறது.

விஜ்ஞான கன ஏவ ஏதேப்யோ பூதேப்ய: ஸமுத்தாய தான்யேவா னுவிநச்யதி என்னும் வாக்கியத்தில் ஜீவலிங்கமான விஜ்ஞான கன சப்தத் திற்குப் பிற மதம் கொண்டு நிர்வாஹத்தையருளிச் செய்கிறார்.

**125 (ஸூ) ப்ரதிஜ்ஞாஸித்தேர் லிங்கம் ஆச்மரத்ய: (20)**

ஏக விஜ்ஞானேன ஸர்வ விஜ்ஞானப் ப்ரதிஜ்ஞை சித்தி பெற கூறப் போகும் செய்தியே லிங்கம் - அதாவது ஜீவன் பரமாத்மாவின் கார்யமா- கையாலே பரமாத்மாவை விட வேறுபடாதவன் என்கிற ஹேதுவால் ஜீவனைச் சொல்லும் பதம் பரமாத்மாவைக் குறிக்கும் என்று ஆச்மரத்யா- சார்யர் திருவுள்ளம். ஜீவவாசகமான ஜ்ஞானகனம் என்னும் பதமும் அவ்வாறேயென்று கருத்து. இது சங்கரமதத்துக்கு ஆதாரம்.

**126 (ஸூ) உத்க்ரமிஷ்யத ஏவம் பாவாத்தயௌடுலோமி (21)**

பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேன ரூபேண பிநிஷ்பத்யதே என்று சரீரத்தை விட்டுச் செல்லும் ஜீவனுக்கு, ஏவம்பாவாத் - முக்தியில் ஐக்கியம் கூறப்படுவதால், ஜீவசப்தம் பரமாத்மாவைக் குறிக்குமென்று ஔடுலோமி- யென்னுமாசார்யர் அருளிச் செய்கிறார்.

**127 (ஸூ) அவஸ்த்தேரிதி காசக்ருத்ஸ்ன: (22)**

ய ஆத்மனிதிஷ்டன் ஆத்மனோऽந்தர: முதலியவற்றால் ஜீவாத்மாவுக்கும் ஆத்மாவாகப் பரமாத்மாவின் ஸ்திதியைக் கூறுவதால், விஜ்ஞாதாரமரே, விஜ்ஞானகன: என்னும் ச்ருதிகளில் விஜ்ஞானகன: முதலிய சப்தங்கள் பரமாத்மாவில் முடிவதால் பரமாத்ம வாசகங்கள்தான். எப்படி தேவன், மனுஷ்யன் முதலான சப்தங்கள் ஜீவாத்மாவைக் குறிக்கின்றனவோ அவ்வாறே சரீர வாசக சப்தங்கள் சர்வ சரீரகனான பரமாத்மாவைக் குறிப்பவையென்று காசக்ருத்ஸ்னரின் திருவுள்ளம்.

**128 (ஸூ) ப்ரக்ருதிச்ச ப்ரதிஜ்ஞா த்ருஷ்டாந்தானுபரோதாத் (23)**

முன் ஸூத்திரத்தில் பரமாத்மா ஜீவர்களின் நியாமகனாக இருப்பதாய்க் கூறியதால் ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்கும் சப்த ஸாமானாதிகரண்யம்

சொன்னதைக் கொண்டு ஸேச்வர மீமாம்ஸகன் கூறுகிறுன். ராஜாவே ராஜ்யமென்றுல் அந்த ஸாமாஞதிகரண்யம் ( ஐக்கியம் ) உபசார வழக்காகவே தேறுமன்றி அபேதமாகாது. ராஜ்யத்திற்கு ராஜா உபாதான காரணமல்லன். அதே போல் ஜகத்துக்குப் ப்ரஹ்மம் உபாதான காரணமாகாது. நிமித்த காரணமேயாகும் என்கிறுன். இதற்கு விடை கூறலே ஸங்கதி.

பரப்ரஹ்மம் ஜகத்துக்கு நிமித்த மாத்ரமா? உபாதான காரணமுமா என்று சம்சயம். ஸேச்வர மீமாம்ஸகன் நிமித்த காரணம் மட்டுமே யென் கிறுன். ஏனெனில், குடம் முதலியவற்றிற்கு மண் முதலியவை உபாதானமாயும் குயவர் முதலானேர் நிமித்தங்களாயும் வெவ்வேருகக் காணப்படுகின்றன, ‘‘அஸ்மான்மாயீ ஸ்ருஜதே விச்வ மேதத்’’ என்று மாயையென்னும் ப்ரக்ருதி உபாதானமாயும் ஈச்வரன் நிமித்தமாயும் ச்ருதி சொல்வதால் நிமித்தபூதனுன ஈச்வரன் உபாதானமல்லன் என்கின்றனர். இதனை நிரஸிக்கிருர்.

*ப்ரக்ருதச்ச* - நிமித்தமான ப்ரஹ்மமே உபாதானமுமாகிறது. ஏனெனில் ***ப்ரதிஜ்ஞா த்ருஷ்டாந்தாநுபரோதாத*** - ஏகவிஜ்ஞானத்தால் ஸர்வமும் அறியப் பட்டுவிடும் என்ற ப்ரதிஜ்ஞைக்கும், மண் ( ம்ருத் ) முதலிய த்ருஷ்டாந்தங் களுக்கும் முரண் வாராமைக்காக. ப்ரஹ்மம் நிமித்தம் மட்டுமென்றுல், நிமித்த மான குயவனை யறிவதால் குடம் பற்றிய அறிவு வாராதது போல, ப்ரஹ்ம ஜ்ஞானத்தால் கார்யமான ஜகத்தின் ஜ்ஞானம் சித்திக்காது. உபாதானமும் ப்ரஹ்மம் என்றுல், மண் பற்றிய ஜ்ஞானத்தால் - ‘‘நேற்றிருந்த மண்ணே இந்தக் குடமாயிற்று’’ என்று கார்யமான குடம் முதலியவற்றின் அறிவு ஏற்படுவது போல் ஜகத்தின் உபாதாநமான ப்ரஹ்மத்தின் ஜ்ஞானத்தாலேயே கார்யமான ஜகத்தின் ஜ்ஞானம் வரலாம். சாஸ்திரத்தால் மட்டுமேயறியக் கூடிய பரமபுருஷன் கார்யம் காரணம் என்ற இரு நிலைகளிலுமிருக்கிருன் என்று ச்ருதி சொல்வதால்-நிமித்தத்வமும், உபாதானத்வமும் முரண்பட்டவையன்று. அல்பஜ்ஞனும், அல்ப சக்திகளான குயவன் நிமித்தமாக மட்டும் காணப் - படுவதால், அவனை உபாதானம் என்பது ப்ரத்யக்ஷத்திற்கு முரணுகும். சாஸ்த்திரத்தால் மட்டும் அறியக் கூடிய விஷயத்தில் யுக்தி விரோதம் சொல்லலாகாது.

விகாரங்கள் சித், அசித் என்னும் வஸ்துக்களையே சார்ந்தவையாதலின் காரியாவஸ்தையிலுள்ள சரீரியான அந்தர்யாமிக்கு விகாரமில்லை என்னும் ச்ருதி முரணுனதன்று. சிதசித்வஸ்து சரீரகமானப்ரஹ்மத்துக்கு உபாதாநத்வ நிலையிலும் அபுருஷார்த்தமான விகாரங்களில்லை என்று காட்டவே - அஸ்மான் மாயீ ஸ்ருஜதே விச்வமேதத் - என்று ப்ரக்ருதியையும் புருஷனையும் வெவ் வேருகக் கூறுகிறது.

ஆதலின், ப்ரஹ்மமே நிமித்தமும் உபாதானமுமாகும். பின் வைசேஷிகர் கூறும் நிமித்த மாத்ரமென்ற பக்ஷத்தைக் கண்டித்து அபின்ன நிமித்-தோபாதானத்வத்தை நிலை நாட்டும் முறை காட்டப்படுகிறது.

வைசேஷிகர்கள் கூறுவதாவது: நிமித்தத்வமும் உபாதானத்வமும் ஒருவனுக்கே கூடாது. அவ்விரண்டும் வெவ்வேறிடங்களிலேயேயிருக்க வேண்டும், என்று நியமம் இருப்பதால், அதனுல்தான் நிமித்த காரணமென்பது ஸமவாயி காரணத்தைக் காட்டிலும் வேறுனதென்றே நையாயிகர்கள் லக்ஷணம் கூறுகின்றனர். ஸமவாயி, அஸமவாயி காரணமில்லாத காரணமே நிமித்தமென்பர். ஆகவே நிமித்தமான ப்ரஹ்மத்துக்கு உபாதானத்வம் லக்ஷணத்திற்கு முரணுகும். மேலும் குடம் போன்றவற்றிற்கு நிமித்த காரணம் தண்டம் முதலியவை, உபாதானம் மண் முதலியவை, இவற்றிற்கு பேதம் மிகவும் ப்ரசித்தமானது. ஆதலின், ப்ரக்யக்ஷத்திற்கே விரோதம். அதனுலேயே ச்ருதிகளிலும் அபின்ன நிமித்தோபாதாநத்வம் சித்திக்காது. 'ஆதித்யோ யூப:' என்பதுபோல ப்ரத்யக்ஷத்திற்கு விரோதம் ஏற்படின், ச்ருதிகளுக்கு அவற்றில் கருத்தெனல் தகாது.

ப்ரஹ்மம் நிமித்தமன்று, உபாதானமாயிருப்பதால், மண் முதலியவை போல் ப்ரஹ்மம் உபாதாநமன்று, நிமித்தமாயிருப்பதால், தண்டம் முதலியவை போல் என்று இரண்டு அனுமானங்களால் நிமித்தத்வமும்-உபாதானத்வமும் வெவ்வேறிடத்திலிருப்பவையென்று நிச்சயிக்கப்படுகிறது. ஆதலின், அனுமானத்திற்கும் விரோதம் - ச்ருதியோ – 'மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத் மாயினம் து மஹேச்வரம்' என்று உபாதானமாயும் நிமித்தமாயுமுள்ள ப்ரக்ருதிக்கும், ஈச்வரனுக்கும் பேதத்தை நன்கு காட்டுகிறது. ஆக இத்தகைய விரோதங்களால் நிமித்தமான ப்ரஹ்மம் உபாதானமாகாது என்பது பூர்வ பக்ஷம். இதற்கு விடை:—

நிமித்தோபாதானங்களுக்கு ப்ரத்யக்ஷானுமானங்கள் இரண்டும் பேதத்தையே சாதிக்கின்றன என்று கூறியது தவறு. குடம் போன்றவற்றின் நிமித்தமான தண்டம் போன்றவை தத்தம் ரூபம் முதலியவற்றிற்கு உபாதானமாகவும் இருக்கக் காண்கிறோம். அது ப்ரத்யக்ஷ ஸித்தமாகையால் ப்ரத்யக்ஷ விரோதமில்லை. அதனுலேயே அனுமானமும் நிமித்தோ பாதனங்களுக்கு பேதத்தைச் சாதிக்கமாட்டாது. ஆகவே, நையாயிகர்கள் உபாதான காரண பேதமுள்ள காரணம் நிமித்தம் என்று கூறியது உசிதமன்று. இந்த லக்ஷணத்தில் - ஸமவாயி காரண பின்னமென்கையில் ஏதேனுமொரு ஸமவாயி காரணத்தைக் காட்டிலும் பேதமா அன்றி அனைத்து ஸமவாயி காரணங்களின் பேதம் கூறப்படுகிறதா என்று விகல்பித்து, முதல் பக்ஷத்தில் ஜகத்தின் உபாதானமான பிரஹ்மத்தினிடம் ஏதேனும் உபாதான பேதம்

ஸுலபமாகையால் உன் நோக்கம் நிறைவேருது. இரண்டாம் பக்ஷத்தில் குடத்தின் நிமித்தமான தண்டத்தில் தன் ரூபாதிகளுக்கான உபாதானத்தில் இருந்து பேதம் வராததால் லக்ஷணத்திற்கு அவ்யாப்தி தோஷம் வரும். ஆகவே நிமித்த லக்ஷணம் கூறியது பொருந்தாது.

நாங்கள் அப்படிக் கூறவில்லே ; அதன் உபாதானத்தைவிட அதன் நிமித்தத்திற்கு பேதம் என்றே கூறுகிருேம். தண்டாதிகளில் குடம் முதலிய வற்றில் உபாதானமான மண் முதலியவற்றிலிருந்து பேதம் வருவதால் அவ்யாப்தி தோஷம் வராது. ப்ரஹ்மத்திலும் இந்த லக்ஷணம் இல்லேயென்ருல் இதுவும் கூடாது. ஏனெனில், த்வம்சம் (அழிவு) என்னும் கார்யம் நிமித்தத் தால் உண்டாவது ஆகையால், அதன் உபாதானம் ஆகாததால், த்வம்ஸ நிமித்தமான தண்டத்தில் அதன் உபாதானத்தை விட பேதம் என்பது ப்ரசித்தம் அல்லாததால், லக்ஷணம் அப்ரஸித்தமாகிறது. மேலும் காலம், இடம் இவற்றின் ஸம்யோகத்திற்கு (சேர்க்கைக்கு) காலம் நிமித்தமாயும் உபாதானமாயுமிருப்பதால் அவ்யாப்தி தோஷமும் வருகிறது.

இந்த தோஷம் வராமலிருக்க லக்ஷணத்தை மாற்றியமைக்கிருேம். அதாவது, உபாதான காரணத்வமில்லாத காரணத்வம் நிமித்தத்வம் என் கிருேம் என்ருலும், காரணதாபேதம் என்பது ஸர்வ காரணதாபேதம் ஆகிறது. அது காரணதாவச்சேதக பேதம் எனப்படும். இங்கு அவச்சேதக தர்மம் இரண்டு உள்ளன. காலமும் குடமும் சேரும் இடத்தில் (கால கட ஸம்யோக ஸ்தலத்தில்) ஸமவாய ஸம்பந்தத்தால் கார்யத்தைக் குறித்து - தாதாத்ம்ய ஸம்பந்தத்தால் த்ரவ்யத்வம் என்ற ரூபத்தால் கார்ய காரண பாவத்தை நாம் ஏற்பதால், காலத்திலிருக்கும் உபாதான தாவச் சேதகம்த்ரவ்யத்வம். கார்யத் வாவச் சின்னமானதைக் குறித்து காலத்வத்தை முன்னிட்டுக் காலம் காரண மாகையால், காலத்வம் நிமித்ததாவச்சேதகம் ஆக இப்படி காலத்தில் அவச் சேதக பேதத்தால் லக்ஷணமிருப்பதால் அவ்யாப்தி தோஷம் வராது. அதனுல் தான் குடத்திற்கு நிமித்தமான தண்டாதிகளிலும் அவ்யாப்தி வரவில்லே. அதிலும் தனது ரூபம் முதலியவற்றிற்கு உபாதானதாவச் சேதகம் த்ரவ்யத்வம் குடத்திற்கு நிமித்ததாவச் சேதகம் தண்டத்வம். இவ்விரண்டும் வெவ் வேறானவையாதலில், ததவச் சின்னேபாதானத்வ நிமித்தத்வங்கள் வேருகையால் - தண்டத்தின் நிமித்த காரணத்வத்திற்கு அனுபபத்தியில்லே.

மேலும், உபாதானதாவச்சேதகதர்மாநவச்சின்ன காரணத்வம் நிமித்தத்வம் என்று ஏற்கையில், த்வம்ஸ நிமித்தமான தண்டாதிகளுக்கு நிமித்த காரணத்வத்திற்கு அநுபபத்தியில்லே. தண்டத்வமும் உபாதானதா நவச்சேதகமாக இருப்பதால் என்று கூறுவாயேயானுல்,

ப்ரஹ்மத்திலும் உபாதானத்வ நிமித்தத்வங்களுக்கு விரோதமில்லை. சூக்ஷ்ம சிதசித் சரீரகம் - ப்ரஹ்மம் - உபாதானம் ஆகையால், சூக்ஷ்ம சிதசித்சரீரகத்வம் உபாதாந த வச்சேதகம் - சங்கல்பாதிகளுடைய ரூபத்திலே அதுவே நிமித்தம். ஆகையால், ஸர்வஜ்ஞத்வம் நிமித்ததாவச்சேதகம். இத்தகைய பேதத்தால் காரணத்வம் வெவ்வேறுனது. ஆகையால், உபாதாந நாலச் சேதகமான ஸூக்ஷ்ம சிதசித் சரீர கத்வம் என்னும் தர்மம் கலவாத காரணத்வமே நிமித்த லக்ஷணம். அது பிரஹ்மத்திடம் பொருந்துவதால் அதற்கு அபின்ன நிமித்தோ பாதானத்வம் கூறுவது முரணற்றது.

இங்கு கார்யமும் காரணமும் மிகுந்த பேதமுள்ளவையெனும் வைசேஷிகர்களின் மதத்தை நிராகரித்து, அவற்றின் ஐக்யத்தை நிலைநாட்டவும், அதன் மூலமாக ப்ரஹ்மம் அனைத்திற்கும் உபாதானம் என்று நிலைநாட்டவும் ஏகவிஜ்ஞானத்தால் ஸர்வமும் ஜ்ஞாதமாகும் என்கிற ப்ரதிஜ்ஞை சிறிது விளக்கப்படுகிறது.

தமாதேசம ப்ராக்ஷ்யோ யேநாச்ருதம் ச்ருதம் பவதி என்ற இடத்தில் இங்கு கூறப்பட்ட ஏகவிஜ்ஞாநத்தால் ஸர்வ விஜ்ஞான ப்ரதிஜ்ஞையும் ப்ரஹ்மம் ஸர்வத்திற்கும் உபாதானமென்பதற்கு எப்படி ப்ரமாணமாகும்? என்றால் - எவ்விடத்திலும் நிமித்த காரண ஜ்ஞானத்தால் கார்ய ஜ்ஞானம் வருவதில்லை. குடம் முதலியவற்றின் நிமித்தங்களான தண்டம் முதலியவற்றை அறிவதால் அதைவிட விலக்ஷணமான குடம் முதலியவற்றின் ஜ்ஞானம் உண்டாகாததாலே, உபாதானத்தின் ஜ்ஞானம் வந்தால் உபாதேயமான கார்யத்தின் ஜ்ஞானம் வரக்கூடும். நேற்று பார்த்த மண் தான் இந்தக் குடம், வாணுய் முதலியவையாயிற்று என்று கார்ய காரணங்கள் ஒரே த்ரவ்யம் என்ற தீர்மானம் வருவதால், அவற்றிற்கு ஒரே ஜ்ஞானத்திற்கு விஷயம் என்ற தன்மை நிச்சயிக்கப்படுகிறது. ஆதலின், முன் மண் ஜ்ஞானமிருந்தால் குடம் முதலியவை அதுவே என்று என்று ப்ரத்ய பிஜ்ஞை - நினைவு - வரக் காண்பதால் அத்தகைய நினைவனைத்தும் முன் அனுபவத்தைச் சார்ந்தே வருவதால் இங்கு உபாதான ஜ்ஞானத்தால் உபாதேய ஜ்ஞானம் வரும் என்று உலகப் ப்ரசித்தியைக் காட்ட ''யதாஸோம்ய ஏகேநம்ருத் பிண்டேன - ஸர்வம் ம்ருண்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத் என்று திருஷ்டாந்தம் காட்டப்பட்டது.

வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம் என்கிற ச்ருதியில் வாக்பூர்வகமான - ஹான உபாதானுதி - ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் ஸித்திப்பதற்காக குடம், வாணுய் முதலிய நாமதேயம் - அதற்கு நிமித்தமான குடத்தன்மை (கடத்வம்) முதலிய அவஸ்தைகள், இவை வெவ்வேறுயிருப்பினும் - அவஸ்தைகளையுடைய த்ரவ்யமொன்றே என்னும்

ஜ்ஞானம் லோகஸித்தமென்று விளங்குவதால் இது போலவே ஸூக்ஷ்ம சிதசித்விஷ்டம் ப்ரஹ்ம உபாதானம், ஸ்தூல சிதசித்விசிஷ்டம் ப்ரஹ்ம உபாதேயம் (கார்யம்) ஆகவே கார்யமும் காரணமும் ஒரேத்ரவ்யமாதலின், காரணாவஸ்தையில் சத் என்று சொல்லப்படுவதே இப்போது ஜகத்தின் வடிவில் ஸ்தூலாவஸ்தை கொண்டுள்ளது, என்னும் ஜ்ஞானம் உபாதானமாகிய ப்ரஹ்மஜ்ஞான மூலகமாகையால் ப்ரபஞ்சமென்னும் கார்யத்தைப் பற்றிய ஜ்ஞானத்திற்றி ஹேதுவான ஜ்ஞானத்திற்கு விஷயமாதல் உபாதான த்ரவ்யத்திலேயே ஸம்பவிப்பதால் ப்ரஹ்மம்- உபாதாநம் என்பது ஸித்தமாகிறது.

## இவ்விடம் பூர்வபக்ஷமாவது :

உபாதானத்திற்கும் உபாதேயத்திற்கும் பேதமில்லையெனில், அப்போது ஸர்வ வஸ்து என்பது இல்லாதபடியால் ஸர்வ வஸ்து இல்லாத்தாலே ஸர்வ விஜ்ஞான ப்ரதிஜ்ஞானமேயில்லாமல் போகட்டும். மேலும், அபேதத்தில் கார்ய காரண விஜ்ஞானங்கள் ஏகவிஷயமாகையால் தன் ஜ்ஞானத்திற்குத் தன் ஜ்ஞானமே ஹேதுவென்று கூறியதாகிறது. அதனுல் ஆத்மாச்ரயதோஷம் வருகிறது. உபாதானோபாதேயங்களுக்கு அபேதத்தைப் பாதிப்பவை பல அம்சங்கள் - வெவ்வேறு காலத்தவை - தோற்றத்தில் வேறுபாடு. பயன் வேறுபாடு. நாமங்களில் வேறுபாடு. இவற்ருல் பேதம் அங்கீகரித்தாலும், ஸர்வ விஜ்ஞானப்ரதிஜ்ஞை வரமாட்டாது. வஸ்த்ர ஜ்ஞானத்திற்கு கூட ஜ்ஞானம் ஹேதுவாகாது. அதுபோலவே ஒன்றைப் பற்றிய ஜ்ஞானம் மற்றொன்றின் ஜ்ஞானத்திற்கு ஹேதுவாகாது. ஆதலால், ப்ரதானமான ப்ரஹ்மம் ஜ்ஞாதமானுல் அறியவேண்டிய ஹேதுவுமில்லாததால் ப்ரஹ்மத்தைத் தவிர்த்த எல்லாம் அறிந்தது போலவே தான் என்பதே ஸர்வ விஜ்ஞான ப்ரதிஜ்ஞைக்கு விஷயம். இதுவே உசிதமானது என்று பூர்வபக்ஷம்.

## இங்கு கூறப்படும் சில கருத்துக்கள் :

உண்மையில் உபாதானமும் உபாதேயமும் அபின்னமாயிருந்தாலும், முன்பு கார்ய காரணங்களை பின்னங்களாகக் காட்ட சாதகமான முன் பின் காலத்தவை முதலிய ஆகார பேதத்தால் வரும் வஸ்து பேதத்தை விலக்க ஏக விஜ்ஞானத்தாலே ஸர்வ விஜ்ஞானப்ரதிஜ்ஞை முதலில் அவசியமாகும். அதில் முன் நிலையிலுள்ள் தன் ஜ்ஞானம் பின் நிலையிலுள்ள தன் ஜ்ஞானத்திற்கு ஹேதுவாய் இருக்கையில் முணிரல்லை. ஏனெனில், விசேஷ்யம் ஒன்றே-யாயினும், இரண்டு காலத்திய ஜ்ஞானங்களிலும் சூக்ஷ்மாவஸ்தையும் - ஸ்தூலா வஸ்தையுமென்று ப்ரகாரம் வெவ்வேருனவை ஆதலின், இரு ஜ்ஞானங்களுக்கும் பேதம் ஸித்தமாகிறது. ஆதலின், ஆத்மாச்ரய தோஷத்திற்கு ப்ரஸக்தியில்லை,

காரணமொன்றேயானுலும், கார்யப் பொருட்கள் வெவ்வேறு விலக்ஷணமாய் இருப்பதால், 'ஸர்வம் என்னும் சொல்லின் பொருள் சம்பவிப்பதால்' ஸர்வங் மகளின் அபவாதத்தையும் அடிப்படையாகக் கொண்ட ஸர்வ விஜ்ஞான ப்ரதிஜ்ஞைக்கு அநுபபத்தியில்லே.

இப்படியாகில் வஸ்துக்களின் பேதத்தை ஸ்தாபிக்கும் முன் கூறிய காலம், ஆகாரம் முதலிய பேதங்களுக்கு என்ன போக்கு? என்ருல், அவை வஸ்துக்களின் முன் பின் அவஸ்தைகளேப் பிரிக்குமேயன்றி வஸ்துக்களேப் பின்னமாக்கமாட்டா. அப்படி சாதிக்குமென்ருல் தேவதத்தன் முதலானுர்க்கு பாலத்வம் யுவத்வம் முதலிய அவஸ்தைகளேயிட்டு காலம், ஆகாரம் முதலிய பேதமிருப்பினும் தேவதத்தாதி பேதம் காணப்படுவதில்லேயே. அது மட்டும் அன்றி - யஸ்ய ப்ருதிவீ சரீரம், யஸ்யாவ்யக்தம் சரீரம், யஸ்யாத்மா சரீரம் என்று ச்ருதிகளால் கார்ய காரணுவஸ்தையிலும் ப்ரஹ்மத்துக்கு சிதசித் சரீரகத்வம் தோன்றுவதால் - நிர்விகாரமான பரப்ரஹ்மத்துக்கும் சிதசிந்நியமன ரூபமான சிறப்பான பேதம் என்னும் இரு அவஸ்தைகள் இருப்பதால் கார்ய ஞ்ஞான ஹேதுவான ஜ்ஞானத்திற்கு விஷயமாதல் விசிஷ்ட ப்ரஹ்மத்திட மிருப்பதால் ஸூக்ஷ்ம சித சித் விசிஷ்டமான ப்ரஹ்மம் காரணம் என்று தேறுகிறது.

***(ச்லோகம்)***

ஆகந்து காப்ருக்சித்த தர்மோ zவஸ்தே தி கீர்த்யதே -<br>
விசேஷ்யே zபிச வைசிஷ்ட்ய பேதோ zவஸ்தாந்தராயதே ll

(புதிதாய் இணேபிரியாததோர் தர்மம் வந்து சேருவதை அவஸ்தை யென்கின்றனர். விசேஷ்யமான பொருளில் ஒரு தர்மத்தையுடைமையென்று பேதம் வேறு அவஸ்தையாகக் கருதப்படுகிறது என்பதாம்.)

❋ ❋ ❋

பின் ஸதேவ ஸோம்யேத மக்ர ஆஸீத் - ப்ரஹ்மவனம், யதோவா இமானி முதலிய வாக்யங்கள். ப்ரஹ்மஸ்வரூபம் உபாதானமென்கின்றன. அப்படியாகில், விசிஷ்ட ப்ரஹ்மம் உபாதானமென்பது ப்ரமாணம் இல்லாமை யால் ஸித்திக்காது. விசிஷ்டம் உபாதானமாயின், விகாரத்தைத் தழுவுவ தென்னும் உபாதானத்வம் விகாரமற்ற ப்ரஹ்மத்திற்குக் கூடாததாதலால், ப்ராப்தாப்ராப்த விவேக ந்யாயத்தாவே விசேஷணத்திற்கே அது கூடுமாதலின், ப்ரஹ்மம் உபாதான காரணம் ஆகமாட்டாது, விசிஷ்டம் உபாதானம் என் கையில், விசேஷணம் - விசேஷ்யம் இரண்டும் உபாதானம் என்பதே நோக்கம் என்ருல், விசேஷணத்துக்குப் போலே விசேஷ்யமான ப்ரஹ்மத்திற்கு விகார

முண்டென்று ஏற்க நேரிடும். ஆதலின், விசேஷண விசிஷ்டமென்று கூறல் வீண். சித், அசித், ஈச்வரன் மூன்றும் சேர்ந்தே ஜகத்தென்னும் கார்யம் தொடங்குகிறது என்ருல் பல நிற நூல்களால் நெய்யப்படும் வஸ்த்ரம் பல நிறம் கொண்டு திகழ்வது போல் ஜகத்தும் மூன்று குணங்களேயுடையதாய் இருக்கும். ஈயமும், தாமிரமும் கலந்து ஆகிய பித்தளே போல மூன்றையும் விட்டு வேருன புதிய குணமுடையதாக வேனும் ஜகத் இருக்கவேண்டும். மேலும்,

விசிஷ்டத்துக்கு உபாதானத்வம் என்பது ச்ருதியிலுள்ளதா? கற்பனேயா? ச்ருதியில் உள்ளதெனில் பொருந்தாது. காரண வாக்யத்திலுள்ள-ஸத்-ப்ரஹ்மம் முதலிய சொற்கள் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை மட்டும் போதிக்கவல்ல இடுகுறிப் பெயரானவை.

விசிஷ்டத்தை விளக்க வல்லனவல்ல கல்பனே என்பதற்கும் ஹேது வில்லாமையால் பொருந்தாது மேலும், "ப்ரஹ்மவனம், ப்ரஹ்ம ஸவ்ருக்ஷ ஆஸீத்" "ததாத்மானம் ஸ்வயமகுருத," "யத்பூதயோனிம் பரிபச்யந்தி தீரா" முதலிய ச்ருதிகள் ப்ரஹ்மஸ்வரூபமே பாதானமென்கின்றன. ஆகவே, விசிஷ்டம் உபாதானம் என்னும் பக்ஷத்தில் - விகாரவத்வமும், ப்ரமாணமின்மையும், உள்ளமையால் - ப்ரஹ் ஸ்வரூபமே உபாதானம் என்று கூறி, நிர்விகாரம் எனக் கூறி வரும் ச்ருதிகளுடன் விரோதத்தைப் பரிஹரிக்க - ப்ரஹ்மத்திடம் அத்யஸ்தமான ஜகத் - மித்யையாவது என்று ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பது பூர்வபக்ஷம்,

இங்கு விடை கூறப்படுகிறது. விசிஷ்ட ப்ரஹ்மமே உபாதானம். அது விசேஷண விசேஷ்யங்களே விட்டு வேருனதல்ல. இதற்கு ப்ரமாணேபபத்தி மேலே கூறப்படுகிறது. முதலில், விசேஷ்யமான ப்ரஹ்ம ஸ்வரூபத்திற்கு விகாரம் வரும் என்பதற்கு விடை கூறுவோம், ஸ்ருஷ்டிக்கு முன்னல், யஸ்யா வ்யக்தம் சரீரம். யஸ்யாக்ஷரம் சரீரம் என்னும் ச்ருதிகளால் அவ்யக்தம், அக்ஷரமெனப்படும் சேதனமும் அசேதனமும், நாமரூப விபாகமற்ற ஸூக்ஷ்ம மான நிலேயிருந்தன. அவை பகவானுக்குச் சரீரங்களாய்க் கூறப்பட்டுள்ளன. இப்படி சரீரமாக வர்ணிப்பது விசிஷ்ட ப்ரஹ்மத்தில் வருங்காலத்தில் கார்யா வஸ்தைக்குப் பயன்படும் முந்தைய நிலேயை யடைதலாகிறது. சரீரம் என்பதால் விசேஷணமான அசேதனம் முந்தையதான ஸூக்ஷ்மாவஸ்தையை விட்டு ஸ்தூல நிலேயை யடைதலென்னும் ஸ்வரூப மாறுபாட்டால் கார்யத்வம். அப்படியே விசேணமாயுள்ள சேதனன் எப்போதும் நிரவயவன் என்பதால் அவனுக்கு ஸ்வரூபமாறுபாடென்னும் கார்யத்வம் பொருந்தாது. ஆதலின், அவனுக்கு அஸாதாரண ஸ்வரூபத்தை நிருபிப்பதான தர்ம பூதஜ்ஞானத்தில் உண்டான ஸங்கோச விகாஸங்கள் என்னும் மாறுபாட்டை முன்னிட்டு ஜ்ஞான

விகாஸ த்வாராவாக கார்யத்வம் கூறுகிறோம். முன்னுல் ஸங்குசிதமான (சுருங்கியிருந்த) ஜ்ஞானம் இப்போது விகாஸ நிலை (மலரும் விரிவான நிலை) அடைவதே, ஜீவனுக்கு ஸ்வபாவ மாறுபாடாகிய கார்யத்வம். மண்குடமாயிற்று என்பதுபோல் ஆத்மா ஜ்ஞாதாவானுன் என்ற வழக்கு சமமானது. ஆதலின் இதுவே பொருத்தமானது. இப்படி ஸ்வருபத்தாலோ ஸ்வபாவத்தாலோ ஏற்படும் விகாரங்கள் சேதனத்திலும், அசேதனத்தில் நேரிடையாக நிற்பதால் தோஷஹேதுவாயினும், ப்ரஹ்மத்தில் பாம்பரையாகவே இவையிருப்பதால் தோஷமாவதில்லை. குழந்தையாயிருந்தவன் யுவாவானுன் என்கையில்- விசேஷ்யமான ஆத்மாவில் ஒரு விகாரமும் இன்றி விசேஷணமான சரீரத்திலேயே பாலத்வம், யுவத்வம் முதலிய விகாரங்கள் தோன்றுவதால் சரீரியான ஆத்மாவையே பாலன் - யுவா என்றழைக்கிறோம். ஆயினும், இந்த விகாரங்கள் ஆத்மாவுக்கல்ல - சரீரத்திற்கே, அஃதுபோல் பரம்பரையாக விகாரத்தைச் சார்வதென்பது தோஷமாகாது. விசிஷ்டத்தையே, உபாதானம் கார்யம் என்கையில் ஒரு தவறுமில்லை. இப்படியாகில் - ப்ரஹ்மத்திற்குக் கார்யத்வம் எப்படி? பரம்பரையில் அவஸ்தையைத் தழுவி உபாதானத்வம் சொன்னுல் குயவனுக்கும் குடத்திற்கு உபாதானம் என்ற நிலை வரலாமே, என்ருல் - அதற்கு விடை கூறுகிறோம்.

ப்ரஹ்மம் தன் சரீரமான சித், அசித் மூலம் அவஸ்தைகளைச் சார்ந்ததால் உபாதாநம் என்ற பெயர் சரியானதே. இதுபோல், ப்ரஹ்மத்தில் நேரிடையாகவே இரண்டு அவஸ்தைகள் உள்ளன. அவை 1. சூக்ஷ்ம சித், - அசித்துக்களை நியமனம் செய்தல் - 2. ஸ்தூல சித் அசித்துக்களை நியமனம் செய்தல் என்பவை. ஆதலால், தனக்கே சிறப்பாய் உரியதான தர்மமாம் நியமனம் என்னும் விகாரத்தால் ப்ரஹ்மத்திற்கும் கார்யத்வம் கூறலாம், பரம்பரயா விகாரத்தைச் சார்வதாகக் கூறினுல் குயவனுக்கும் - குடத்திற்கான உபாதானத்வம் என்று குற்றம் கூறப்பட்டது. அது இணைபிரியாத நிலை. அஃதில்லாமை என்ற வேறுபாடு கொண்டு களையத் தக்கது. ப்ரஹ்மத்திடம் சேதனுசேதனங்கள் இணை பிரியாத நிலை (அப்ருதக் ஸித்த ஸம்பந்தம்) கொண்டுள்ளனவாதலின் அதன் ப்ரகாரங்கள் ஆகின்றன. குயவனிடம் மண்ணுடன் இணைபிரியாத நிலையில்லையென்று பேதம்.

இப்படியாகில் உபாதானத்வம் என்பது முக்கியப் பொருளில் இல்லை. கௌணம்தான் என்று சொல்லக்கூடாது. தேவதத்தன் யாகம் செய்கிருனென்ருல் தேஹத்தின் மூலம் காயசோஷணுதிகள், அதன் அவயவங்களைக் கொண்டு மந்த்ரங்களை உச்சரித்தல், ஸங்கல்பாதிகள், (அத்வாரகங்கள் - மனதால் செய்வன) இவற்றை முன்னிட்டு அவனுக்கு யாக கர்த்தா என்ற நிலையும், பல போக்தா என்ற நிலையும் வருவது போலவே எம்பெருமான், நான்

பலவகைப் பொருளாகப் போகிறேன் (பஹுஸ்யாம்) என்று ஸங்கல்பிக்கும் ப்ரமாணத்தால் - மேலே கூறப்படும் எல்லா அவஸ்தைகளும் பரமாத்வாவையே சார்ந்திருப்பது தெரிவதால் - அசேதனங்களின் ஸ்வரூப விகாரங்களும், சேதனங்களின் ஸ்வபாவ மாறுபாடுகளும், ஈச்வரனின் இவற்றை நியமனம் செய்வதான நேரான நிலையும் ஆக இம்மூன்றும் பரமாத்மாவையே சார்ந்தவை யாதலின், கௌணம் என்ற பேச்சிற்கே இடமில்லை.

அடுத்து விசிஷ்டத்திற்கு விசிஷ்டம் உபாதானம் என்றால் ஸ்வரூபஸ்வபாவாதிகள் கலந்து ஸாங்கர்யம் என்ற தோஷம் கூறப்பட்டதும் பொருந்தாது. எப்படியென்றால் பல நிறமுள்ள நூல்களால் நெய்யப்பட்டுள்ள வஸ்த்ரத்தில் வெள்ளை நிறப் பகுதிக்கு வெள்ளை நூலும் சிவப்புப் பகுதிக்குச் சிவப்பு நூலும் காரணம் என்று பிரித்துக் கூறுவதால் கலப்பு என்பதில்லை. அதுபோலவே பிரஹ்மத்திடமும் தோஷம் இல்லை. விசிஷ்டத்திற்கு விசிஷ்டம் காரணம் என்றாலும் - பொருத்தம் நோக்கி சிதம்சம் சிதம்சத்திற்கும், அசிதம்சம் - அசிதம்சத்திற்கும் ப்ரஹ்மாம்சம் - ப்ரஹ்மாம்சத்திற்கும் உபாதானம் என்று ஏற்பதால் ஸ்வரூபமோ - ஸ்வபாவமோ கலப்பு (கைங்கர்யம்) அடையாது.

இப்படியானால் ப்ரஹ்மத்திற்கே ப்ரஹ்மம் காரணம் என்றதாகிறது. அது எப்படிப் பொருந்தும்? அத்துடன் அது ப்ரபஞ்சத்திற்கு உபாதானமென்பது எப்படி? என்றால் கூறுவோம். ப்ரஹ்மம், தன் சரீரமான ஸூக்ஷ்மாவஸ்தையிலுள்ள சித் அசித்துக்களின் மூலம் ஸ்தூலமான சித் அசித் எனப்படும் ப்ரபஞ்சத்திற்கு உபாதானம் என்பது ஸம்பவிக்கக்கூடியதே. தேவதத்தன் செல்கிறான் என்றால் சரீரத்தின் மூலமாகவும் அவனது ஆத்மா செல்கிறது. என்ற பொருள் ஏற்படுவது போலே சித்-அசித்துக்களை மூலமாகக் கொண்டு அவஸ்தைகளை ப்ரஹ்மம் பெறுவதும் ஸுலபமேயாதலின், ப்ரபஞ்சத்திற்கு அவன் உபாதானம் என்பதும் பொருந்தும். இப்படி பரம்பரையாக அவஸ்தாச்ரயத்வத்தை மட்டும் கொண்டு ப்ரஹ்மத்திற்கு உபாதானத்வம் கௌணம் தானே என்று சந்தேகிக்க வேண்டுவதில்லை. தேவதத்தன் செல்கிறான் என்னுமிடத்தில் - அவனது ஆத்மா சரீரத்வாராவாகத்தான் போகிறது என்றாலும் அந்த வழக்கை உபசார வழக்காகக் கொள்ளாமல் முக்கிய வழக்காகவே கொள்கிறோம். தண்ணீரைக் கொண்டு வருகிறான் என்னுமிடத்தில் தண்ணீரை நேராகக் கொண்டு வராமல் ஓர் குடம் (பாத்திரம்) மூலமாகக் கொண்டு வந்தாலும் - அந்த வழக்கை கௌணமென்பாரில்லை. அது போல ப்ரஹ்மம் ஜகத்திற்கு உபாதானமும் நிமித்தமுமாகும் என்று தேறுகிறது.

பின் காரண வாக்யங்கள் விசிஷ்டத்தை எப்படிக் கூறும் என்ற சங்கை மிஞ்சுகிறது. அதற்கு விடையிறுப்போம்.

யஸ்ய ப்ருதிவீ சரீரம், யஸ்யாத்மா சரீரம் என்னும் ச்ருதிகளின் பலத்தால் கார்யாவஸ்தையிலும், காரணவஸ்தையிலும், சித்தும், அசித்தும் ப்ரஹ்ம சரீரங்கள் என்பது வெளிப்படை, சரீரத்தைச் சொல்லும் சொற்கள் சரீரத்தையுடைய ஆத்மாவைச் சொல்லும் என்பது, ப்ராஹ்மணன் அக்னியை ஆதானம் செய்யவேண்டும். தேவதத்தன் சொல்கிறுன் என்றிப்படி வேத லோக வழக்குகளால் தோன்றுகிறது. காரண வாக்யத்திலுள்ள ஸத், ப்ரஹ்ம, ஆத்மா முதலிய சொற்கள் விசிஷ்டத்தையே குறிப்பவை என்பதும், ஸதேவ ஸோம்யேதம் அக்ர ஆஸீத் ப்ரஹ்ம வா இத மேகமேவாக்ர ஆஸீத்- என்னுமிடங்களில் ப்ரபஞ்சத்தைக் குறிக்கும் இதம் என்ற சொல்லோடு, ஸத் ப்ராஹ்மாதி பதங்களை விசேஷண விசேஷ்யமாக (ஸமானுதிகரணமாக)க் குறிப்பிடுவதால் தீர்மானிக்கப்படுகின்றது. அதனுலேயே "யதோவா இமாநி பூதானி ஜாயந்தே" என்னுமிடத்தில் முன் கூறிய காரண வாக்யத்தால் அறியலான 'விசிஷ்டமான' பொருளை 'யத்' என்னும் சொல் குறிப்பிடுகிறது. அதனுல் உபாதானத்வம் என்பது விசிஷ்டத்திடமேயுள்ளது.

மேலும், ஸதேவ என்னும் காரணவாக்யத்தில், ப்ரபஞ்சத்திற்கு ஆதிகாலத்தில் இருப்பைக் காட்டும் 'ஸத்' என்ற சப்தம் - ப்ரஹ்ம ஸ்வரூபத்தை மட்டும் சொல்லவில்லை. பஹுஸ்யாம் என்று பலவிதமாக மாறப்போகிறேன் என்ற அவன் ஸங்கல்பத்தைச் சொல்வதால் எதிர்காலத்தில் பலவுருவங்களில் ஏற்படவிருக்கும் இருப்பை விரோதிக்கும் ஒரே ஒரு ப்ரஹ்மம் விளக்கப்படுகிறது. இதனுல் 'இதம்' எனப்படும் ஸ்தூலாவஸ்தையிலுள்ள ப்ரஹ்மமே ஆதியில் நாமரூப விபாகமற்ற ஸூக்ஷ்மாவஸ்தையுடன் கூடிய சித சித்துக்களைச் சரீரமாகக் கொண்டதாய் இருந்தது. அதுவே ஸத் என்ற சொல்லின் பொருள் என்பது கருத்து.

'ப்ரஹ்மவனம் ப்ரஹ்ம ஸவ்ருக்ஷ ஆஸீத்' என்ற வாக்யமும் காரண வாக்யப்படி விசிஷ்ட ப்ரஹ்மம் உபாதானமென்பதையே காட்டுவது. மேலும், தத்தேதந்தர்ஹி அவ்யாக்ருதமாஸீத் நந்நாம ரூபாப்யாம் வ்யாக்ரியத என்னும் இடத்தில், அவ்யாக்ருதம் என்று ப்ரஹ்ம ஸ்வரூபம் மட்டும் சொல்லப்படவில்லை. ப்ரஹ்மாதி சப்தம் போலே ப்ரஹ்ம ரூபத்தில் அது ரூடம் (இடுகுறி) அல்லவாதலின் தந் நாம ரூபாப்யாம் வ்யாக்ரியத என்ற பின் வாக்யத்தால் அவ்யாக்ருதம் என்பது காரணப் பெயராய்த் தெரிவதால், 'இதம்' என்றதன் பொருளான சிதசின்மிச்ரமான ப்ரபஞ்சத்திற்கு ப்ரளய காலத்தில் நாம ரூபவ்யாகரண நிவ்ருத்தி மட்டுமே கருதப்படுகிறது. அப்படி ப்ரத்யக்ஷ ஸித்தமான 'இதம்' சப்தப் பொருளான ப்ரபஞ்சத்திற்கு ஒருகால் ஸூக்ஷ்மாவஸ்தை ஏற்பட்டுவிடுவதால் வ்யஷ்டி ஸமஷ்டி ரூபமான விகாரமின்மை சொல்லப்பட்டது.

இப்படியிருக்கும் விஷயத்தில் ப்ரளயதசையிலும் ஸூக்ஷ்மமான சிதசித் வஸ்துவிற்கு இருப்பு சொல்லப்படுகிறது. அந்த தசையில் இருப்பு மட்டும் தோன்றுவதால் ப்ரஹ்மத்திற்கு ஏது ப்ரஸக்தி என்றால், ''தம: ஏகீபவதி'' முதலியவற்றால் புலப்படும் ஸூக்ஷ்ம தமஸ்ஸிற்கும், யஸ்ய தம: சரீரம் என்று ப்ரமாணத்தாலே ப்ரஹ்ம சரீரத்வம் தோன்றுவதாலும் வேறு காரண வாக்யத்தில், ''ப்ரஹ்மவா இதமக்ர ஆஸீத்'' என்று ப்ரஹ்மத்தின் ஸ்திதி கூறப்படுவதாலும், அவ்யாக்ருதம் என்பது அவ்யாக்ருத சிதசித்விசிஷ்ட ப்ரஹ்மத்தைக் கூறுவதென, தீர்மானிக்கப்பட்டுள்ளது. இது போலவே, அஸதேவேதமக்ர ஆஸீத்' என்றவிடத்தில் பாவாந்தரம் அபாவம் என்று கூறுவோர் சித்தாந்தப்படி ஸ்தூலாவஸ்தையின் நாசத்தைக் குறிக்கும் 'அஸத்' சப்தத்தால் ஸூக்ஷ்மாகார விசிஷ்டசிதசித்வஸ்து சரீரக ப்ரஹ்மம் கூறப்படுகிறது. கேவலமான ப்ரஹ்மம் அன்று. ப்ரஹ்மத்தின் அஸத்வ விரோதத்தால், அவர்கள் விருப்பப்படி ப்ரபஞ்ச ப்ராகபாவம் தான் அஸத் சப்தார்த்தம் என்பது பொருந்தாது. ததஸதேவ ஸந் மனோzகுருத ஸ்யாமிதி, ததாத்மானம் ஸ்வயமகுருத என்று அஸத்துக்கு ஸங்கல்ப பூர்வகம் ஸ்ருஷ்டி ஸாமர்த்யம் கூறும் வாக்யத்துடன் முரண்படுவதால், இந்த அர்த்தம்- ''அஸத்வ்யப தேசாந்நேதி சேந்ந - தர்மாந்தரேண வாக்ய சேஷாத்'' என்ற ஸூத்ரத்தில் நிச்சயிக்கப்பட்டது. 'ததாத்மானம்ஸ்வய மகுருத என்னுமிடத்தில் ஆத்ம சப்தமும் ப்ரஹ்ம ஸ்வரூப மாத்ரத்தைக் கூறுவது அன்று. இந்த சப்தம் அஸத்வா இத மக்ர ஆஸீத் என்னும் ப்ரகரணத்தால் ஸமானமாக இருப்பதால் அஸத் என்னும் ஸூக்ஷ்மத்ரவ்ய விசிஷ்டத்தையே குறிக்கும். ப்ரஹ்மம் தன்னைக் குறித்தே தானுபாதானம் என்று உபநிஷத்தின் கருத்து தோன்றுகிறது. ஆகவே, ''ஹந்தாஹமிமா: திஸ்ரோ தேவதா: அனேன ஜீவேநாத்மனானுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணி'' என்றவிடத்தில் வ்யாகரணம் செய்யப்படும் நாமரூபங்கள் தன்னிடமே முற்றுப் பெறுவதற்காக அனுப்ரவேசமும் வ்யாகரணத்திற்காகக் கூறப்படுகிறது. அப்படி அனுப்ரவேசம் செய்யாவிட்டால் பித்ருக்கள் முதலியவர்கள் போல அனுப்ரவேசம் பண்ணாமலே நாமரூபவ்யாகரணம் ப்ரஸக்தமாகும். தத்ஸ்ருஷ்ட்வா எனத் தொடங்கி ஸச்ச த்யச்சாபவத் என்பது வரை அனுப்ரவேச பலமாக ஸத்-த்யத் என்ற தன்மை கூறப்படுகிறது. அதனாலேயே, தனதக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி - ததாத்மானம் ஸ்வயமகுருத' என்று முதலில் தனக்கே பஹுத்வ ஸங்கல்பமும், காரயித்ருத்வமும் கூறப்படுகிறது. ஸ்யாம் என்று தன்மையிடமும் (உத்தம புருஷனும்) உள்ளது. ஆகவே, விசிஷ்டமான ப்ரஹ்மமே உபாதானமும் உபாதேயமுமாகும் என்று தேறுகிறது.

## இனி ப்ரக்ருதாதிகரணத்தை நோக்குவோம்.

### 129 (ஸூ.) அபித்யோபதேசாச்ச (25)

ஸோऽகாமயத பஹுஸ்யாம், ததைக்ஷத பஹுஸ்யாம் என்று ப்ரஹ்மம் தானே ஜகத்தின் வடிவில் மாறுவதாக ஸங்கல்பத்தை உபதேசிப்பதாலும் அதுவே நிமித்தமும் உபாதானமும்.

### 130 (ஸூ.) ஸாக்ஷாச்சோபயாம்நாநாத் (25)

கிம் ஸ்வித் வனம் க உ ஸ வ்ருக்ஷஆஸீத் என்று ஜகத்துக்கு உபாதானம் எது? நிமித்தம் எது? என்று கேட்டு விடையாக ப்ரஹ்ம வனம், ப்ரஹ்ம ஸவ்ருக்ஷ ஆஸீத் - ப்ரஹ்மாத்யதிஷ்டத் புவனானி தாரயன் என்று ப்ரஹ்மமே உபாதானமும் நிமித்தமும் என்று நேரிடையாகவே கூறப்பட்டிருப்பதால் ப்ரஹ்மமே இரண்டுமாகும்.

### 131 (ஸூ) ஆத்மக்ருதே: (26)

ததாத்மானம் ஸ்வயமகுருத என்று ஜகத் ஸ்ருஷ்டிகர்த்தாவான தனக்கே ஜகத்தின் வடிவத்தில் (மாறுவதான) செயலை உபதேசிக்கையாலும் ப்ரஹ்மமே இரண்டுமாகும்.

ப்ரஹ்மம் தன்னைத்தானே ஜகத்தாகப் பண்ணினால் அபஹத பாப்மத்வ ஸர்வஜ்ஞத்வாதிகள் முரண்படாவோ? ஜகத்து அஜ்ஞமாய் துக்கியாகவன்றோ உள்ளது என்ற சங்கையைத் தீர்க்க விடையருளுகிறார்.

### 132 (ஸூ) பரிணாமாத் (27)

ப்ரஹ்மம் அஜ்ஞானத்தால் ஜகத்தாகப் பரிணமிக்கிறதென்னும் சங்கர மதத்தில் இந்த தோஷம் ஏற்படும். நாமரூப விபாகமற்ற ஸூக்ஷ்ம சேதநா சேதநாத்மக ப்ரஹ்மமாகப் பரிணாமம் பெறுகிறதென்றல்லவா - வேதங்களில் கூறப்படுகிறது - தத்தேதந்தர்ஹி அவ்யாக்ருதமாஸீத் தந்நாம ரூபாப்யாம் வ்யாக்ரியத இது முதலிய ச்ருதிகளால் அபுருஷார்த்தமும் விகாரமும் சரீரங்களான சிதசித்கதங்கள் - ஸர்வாவஸ்தைகளிலும் சரீரியான ப்ரஹ்மம் அபஹத பாப்மத்வம் - ஸர்வஜ்ஞத்வம் முதலியவற்றோடு சேர்ந்தேயிருக்கும். சித சித்துக்கள் சரீரமென்பதும், ப்ரஹ்மம் சரீரீ என்பதும் - யஸ்ய ப்ருதிவீ சரீரம் எனத் தொடங்கி யஸ்யாவ்யக்தம் சரீரம், யஸ்யாக்ஷரம் சரீரம் யஸ்ய ம்ருத்யுச் சரீரம் - ஏஷ ஸர்வ பூதாந்தராத்மா அபஹத பாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண: - முதலிய நூற்றுக்கணக்கான ச்ருதிகளிலே

பறைசாற்றப்பட்டுள்ளது. ஆகவே இத்தகைய பரிணாமம் ச்ருதி ஸித்தம் ஆகையால் குறையேதுமற்றது.

## 133 (ஸூ.) யோநிச்ச ஹி கீயதே (28)

யத்பூதயோனிம் பரிபச்யந்தி தீரா: முதலியவற்றில் பரமபுருஷன் ஜகத்துக்கு காரணமென்று கூறப்படுகிறுன். யோநி சப்தம் உபாதான காரணம் என்ற பொருளைத் தருவது. 'ஹி' என்ற சொல் ஹேதுப் பொருளைக் காட்டும். எக்காரணத்தால் யோனி என்று ப்ரஹ்மம் கூறப்படுகிறதோ அதே காரணத்தால் அது நிமித்தமும் உபாதானமும் என்று சித்திக்கிறது.

## ஸர்வ வ்யாக்யாநாதிகரணம் (9)

## 134 (ஸூ) ஏதேந ஸர்வே வ்யாக்யாதா வ்யாக்யாதா: (29)

சாஸ்த்ராரம்பத்தில் ஜன்மாத்யதிகரணத்தில் தொடங்கிய நிமித்தோபாதாநத்வம் ப்ருக்ருத்யதிகரணத்திலே உறுதி செய்யப்பட்டது. இனி ஹிரண்யகர்பஸ் ஸமவர்த்ததாக்ரே பூதஸ்ய ஜாத: பதிரேக ஆஸீத், நஸந் நசாஸத் சிவ ஏவ கேவல: இத்யாதிகளில் முன் கூறிய அதிகரணப் பொருட்களையே ஊஹித்தறிய வேண்டுமென்பது ஸங்கதி.

ஏதேந முன்பு காட்டப்பட்ட வாக்யங்களிலே முன் சூத்ரங்களாலே கூறப்பட்ட ந்யாய கலாபத்தாலே, *ஸர்வே* - இதுவரை காட்டப்படாத '' ஹிரண்யகர்ப: ஸமவர்த்ததாக்ரே '' இத்யாதி வாக்யங்களும் ***வ்யாக்யாதா:*** ச்ரிய: பதியான பரமபுருஷ காரணத்வ பரங்களாக வ்யாக்யாதங்கள். இங்கு சொல்லிரட்டிப்பு அத்யாயத்தின் பூர்த்தியைக் காட்டுவதற்காகவாம்.

ஸகல காரண வாக்யங்களுக்கும் ச்ரிய: பதியே பொருள் என்பது எவ்விதம் என்ருல் இந்த சாஸ்த்ரத்தில் ஸதேவ ஸோம்யேத மக்ர ஆஸீத் ப்ரஹ்மவா இதமக்ர ஆஸீத் - ஸர்வாணி ஹவா இமானி பூதானி - ஆகாசாதேவஸமுத்பத்யந்தேதத்தேதந்தர்ஹி - அவ்யாக்ருதமாஸீத் அஸதேவேதமக்ர ஆஸீத் - ஏகோஹவை நாராயண ஆஸீத் - நப்ரஹ்மா நேசாந: முதலிய காரண வாக்யங்கள். இதுவரையில் எடுத்தாளப்பட்டன. உதாஹரிக்கப்படாத வாக்யங்களாவன: ஹிரண்ய கர்ப்ப: ஸமவர்த்ததாக்ரே, ப்ரஜாபதி: ப்ரஜா அஸ்ருஜத - நஸந் நசாஸத் சிவ ஏவ கேவல: விச்வாதிகோருத்ரோமஹர்ஷி: ஹிரண்ய கர்ப்பம் ஜனயாமாஸ பூர்வம். நகிரிந்த்ர த்வதுத்தர: அக்னிரக்ரே ப்ரதமோ தேவதானும், முதலியவை,

இவ்வாக்யங்களில், ஸதேவ என்று ஏவகாரத்தாலே ஒவ்வோர் வஸ்துவிற்கும் காரணத்வம் போதிதமாகையால் - சமுச்சயமாகக் காரணத்வம் கூறுவது அயுக்தமாதலின் - காரணத்வத்தையும் - உபாஸ்யத்வத்தையும் போதிக்கும் வாக்கியங்களில் உள்ள ஸாமான்ய சப்தங்கள் அருகே விசேஷ சப்தமிருப்பதால் சாக பசு ந்யாயப்படி அதையே குறிக்குமென்பதாக ஸித்தம். இதில், யதோவா, இமானி என்ற அனுவாதவாக்யங்கள் – ஸதேவ என்னும் முன் வாக்யத்தில் முடிவு பெறுவதாயினும், முன் வாக்யங்கள் (புரோவாதங்கள்) பலவாதலின், அவற்றிலுள்ள சாமான்ய சப்தங்களும் அநேகம் அர்த்தங்களைக் காட்ட வல்லவையாதலின், ஒரேயர்த்தத்தை உறுதிப்படுத்த முடியாதபடியால் விசேஷச் சொற்களுக்கே அர்த்த விசேஷ போதகத்வம் சொல்லவேண்டும். ப்ரதானம் முதலிய அசேதனங்களுக்கு காரணத்வத்திற்கு அவச்யமான ஸர்வஜ்ஞத்வமில்லாததாலும் – ப்ராப்யத்வமும், உபாஸ்யத்வமும், கூடாமையாலும் அசித்தைக் குறிக்கும் சொற்களுக்கு வேறு பொருள் கூறுவது பொருந்தாது.

சேதன விசேஷங்களைக் குறிக்கும் - ஹிரண்யகர்ப்பன், சிவன், இந்திரன் முதலிய சொற்களின் பொருளான பிரஸித்தமான இந்திராதிகள் - கார்யராயும் கர்மவச்யராயும், இருப்பதாக ச்ருதிகள் சாதிப்பதால் ஸர்வ - காரணத்வம் பொருந்தாது. ஆதலின், அச்சொற்களும் அர்த்த விசேஷத்தைப் போதிக்கா. பின்னென்னெனில், லக்ஷ்மீபதிக்கே உரியபுருஷ - நாராயண – விஷ்ணு வாஸுதேவ ந்ருஸிம்ஹ பகவான் முதலிய சொற்களின் பொருளான நாராயணனுக்கு ஓரோரிடத்தில் கார்யத்வமும், கர்மவச்யத்வமும் ச்ருதமாய் இருப்பதால் - உத்பத்தியென்பது 'அஜாயமானோ பஹுதா விஜாயதே என்ற' படியே அவதாரரூபமாதலாலும், ஸர்வ காரணத்வம் கூடுமென்பதால் ஸர்வ வேதாந்தங்களும் நாராயணனையே போதிப்பவையென்று சித்தித்தது.

இவ்வாறு ஸாமான்ய சப்தத்திற்குத் தக்க விசேஷார்த்தத்தில் பர்யவஸானம் (முடிவு) கூருவிடில், காரண வாக்யத்திலுள்ள ஸத், ப்ரஹ்ம, ஆத்மா, முதலிய பதங்கள், வெவ்வேறு பொருளுள்ளனவாதலின், முரண்பட்ட பொருளாகிவிடும். மேலும் புருஷ ஸூக்தம், கடவல்லி, முண்டகோபநிஷத், ஸுபாலோபநிஷத், மஹோபநிஷத், அந்தர்யாமி ப்ராஹ்மணம். தைத்திரீயோபநிஷத், ப்ரஹ்மபிந்தூபநிஷத் முதலிய அனேக வேதாந்தங்களுக்கு ஸ்ரிய: பதியே முக்கியதத்துவமாதலின், பூயஸாம் ப்லீயஸ்த்வம் (மிகுதியுள்ளதற்கே வலிமை) என்ற நியாயப்படி சர்வச்ருதிகளும் ஸ்ரிய: பதியையே போதிப்பன்வாகின்றன. மேலும் வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம் ஆதித்யவர்ணம் தமஸ: பரத்தாத் - தமேவம் வித்வானம்ருத இஹபவதி நாந்ய: பந்தா அயனாய வித்யதே என்னும் ச்ருதியால், பிறதேவதைகளைத் தடுத்து

ஶ்ரிய: பதியை உபாஸித்தாலே மோக்ஷம் எனப்படுகிறது. ஆதலின், ப்ரஹ்ம சப்தப் பொருளும் - ப்ரஹ்மணத்வமெனப்படுவதும் மோக்ஷப்ரதத்வம் எனப் தால் - அது பலரிடமிருப்பதாயின் ஒருவர்க்கொருவர் முரண்பாடு ஏற்படும் ஆதலின் – அப்ராமண்யம் ஏற்படும். ஆகவே ஒருவனே மோக்ஷப்ரதன் என்று இசைந்திடவேண்டும். இவ்வாருயின், பிரஹ்ம விதாப்னோதி, பரம், அத - பராயயா ததக்ஷரமதிகம்யதே - ஜ்ஞாத்வா சிவம் சாந்தமத்யந்த மேதி. ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாயை: முதலான ஸகலபரவித்யாகத மான சிவ சம்பு நாராயணாதி சப்தங்களுக்கு ஒரே பொருளே நாராயணனு வாகம் பேசுகிறது. விச்வம் நாராயணம் தேவம் ...ஸோக்ஷர: பரம: ஸ்வராட் ) என்ற அந்தந்த உபநிஷத்தில் பிரசித்தமான ப்ரஹ்ம அக்ஷர தேவ சம்பு சிவ, பரம்ஜ்யோதி, பரமாத்ம பரம ஸ்வராட் ” ஆகிய சொற்களை விசேஷமாய்க் குறித்து நாராயண சப்தத்துடன் ஸமானாதிகரண மாகக் குறிப்பிடுவதால் – எல்லா வேதாந்தங்களும் நாராயணனையே பரதேவதையாகப் போதிக்கின்றன என்று ஸித்திக்கிறது ஸப்ரஹ்மா சசிவ: ஸேந்த்ர: முதலிய வாக்யங்களால் ப்ரதர்தனவித்யையில் கூறியபடி சிவாதி சரீரக ஶ்ரீமந்–நாராயணன் என்றே விளக்கப்படுகிறது, ஆதலால் ஸர்வோப நிஷத்துக்களுக்கும் நாராயணனே பொருளாகின்ருன்.

“ ஹிரண்யகர்ப்பஸ் ஸமவர்த்ததாக்ரே ” என்று கூறியிருப்பதால் ஏன் ஹிரண்யகர்ப்பனையே உபாஸ்யனாக வேதாந்தங்கள் கூறுவதாக் கொள்ள லாகாது ? என்ருல் ஏகோ ஹவை நாராயண ஆஸீத் - நப்ரஹ்மா நேசாந: ஸப்ரஜாபதிரேக: புஷ்காபர்ணே ஸமவத் இத்யாதியிலும், நாராயணாத் ப்ரஹ்மன் ஜாயதே - யோப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் – முதலியவற்ருலும் ப்ரஹ்மன் திருமாலின் நாபி கமலத்தில் உண்டாவதாலும், மறைவு உள்ளவன்– ஆதலாலும் பாப சம்பந்தமுள்ளவனாக வேதம் பேசுவதாலும் – அபஹதாப்மா என்பதுபோல் பாபமற்றவன் என்ற பெயரில்லாமையாலும், ஹேயப்ரதிபட த்வம் என்பது பொருந்தாது. ஆகவே அவனுக்கு உபாஸ்யத்வம் கிடையாது. ஹிரண்யகர்ப்பன் என்பதற்கே அழகிய பரமாகாசத்தில் வீற்றிருக்கும் ஶ்ரிய: பதி என்பது பொருள் - அம்பஸ்யபாரே என்ற அனுவாகத்தில் திருப்பாற் கடலில் சயனித்திருப்பதான அசாதாரணலிங்கம் காண்கையால் அங்கு ப்ரஜாபதி:-சரதி கர்ப்பே அந்த: என்று நாராயணபரமாகவே ப்ரயோகம் இருப்பதால் அவனே பொருள் என்று சித்தம்.

## சிவபாரம்ய வாதம்

வேதாந்தங்கள் யாவும் சிவனையே பரன் என்று கூறுவதாகவே தெரிகிறது. விச்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி: ஹிரண்யகர்பம் ஜனயாமாஸ பூர்வம் காரணந்து தயேய: ஸர்வைச்வர்ய ஸம்பன்ன: சர்வேச்வரச் சம்பு:

ஆகாசமத்யே த்யேய:, நஸந் நசாஸத் சிவ ஏவ கேவல: ஸர்வவ்யாபீச பகவான் தஸ்மாத் ஸர்வகந்த: சிவ: விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம் ஈசம்தம் ஜ்ஞாத்வா / யதா சர்மவ தாகாசம் வேஷ்டயிஷ்யந்திமானவ:-ததா சிவம விஜ்ஞாய துக்கஸ்யாந்தோ பவிஷ்யதி / அனந்தம வ்யக்த மசிந்தத்யரூபம் சிவம் ப்ரசாந்தமம்ருதம் ப்ரஹ்மயோநிம் - உமா ஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும்த்ரிலோசனம் நீலகண்டம் ப்ரசாந்தம் – ஸப்ரஹ்மா ஸசிவஸ்ஸேந்த்ர: ஸோऽக்ஷர: பரம: ஸ்வராட்: இத்யாதி ச்ருதிகளை அனுஸரித்து ஸர்வ வேதாந்தங்களும் சிவ பரமே யென்று ஏன் கூறக்கூடாது? என்பது பூர்வபக்ஷம் அதற்கு விடையாக நம் பூர்வர் கூறுவது:- மஹோபநிஷத்தில் – ஏகோஹவை நாராயண ஆஸீத் நப்ரஹ்மா நேசான:, ஸ முனிர்பூத்வா ஸமசிந்தயத், த ஏதே வ்யஜாயந்த விச்வே ஹிரண்யகர்ப்போ அக்னீர்யமவருண ருத்ரேந்த்ரா: விஷ்ணுஸ்ததாஸீத் ஹரிரேவநிஷ்கள:—

ஸுபாலோபநிஷத்தில், லலாடாத் க்ரோதஜோ ருத்ரோ ஜாயதே என்னும் மஹோபநிஷத்தில், நாராயணன் மற்றோர் ஸங்கல்பத்தை செய்ததும், முக்கண்ணனும் சூலபாணியுமான புருஷன் தோன்றினன் என்றும் நாராயணோப நிஷத்தில் நாராயணனிடமிருந்து ருத்ரன் தோன்றினன் என்றும், சதபதத்தில் அஷ்டமூர்த்தி ப்ராஹ்மணத்தில் ஸம்வத்ஸரமென்றும் ப்ரஜாபதி யென்றும் கூறப்படும். ப்ரஹ்மன் உஷஸ் என்ற பத்னியுடன் கூடி ஓர் குமாரனைப் பெற்றான். அக்குமாரன் பிறந்ததும் அழவே, ப்ரஹ்மன் சிரமப்பட்டு ஒரு வருஷம் தவம் செய்ததால் நீ பிறந்தாய் - ஏன் அழுகிறாய் என்று கேட்க, அக்குமாரன் என் பாபங்கள் விலக எனக்கு நல்லதோர் நாமகரணம் செய்திடும் என்று கேட்க, நீ ருத்ரனவாய் - உனக்கு ரூபம் அக்னியாகும் என்றார். பின்னும் அக்குமாரன் வேண்டுகோள்படி, பவன், சர்வன், ஈசானன், பசுபதி, உக்ரன், பீமன், மஹாதேவன் என்றெல்லாம் நாமகரணம் செய்திட்டார் என்ற வரலாறு உள்ளது. இதனாலும், சைலாலி ப்ராஹ்மணத்தில் கூறப்படும் கருத்துக்களாலும் சிவன் படைக்கப்படுபவன், அழிவுள்ளவன் - கர்மவச்யன் - ப்ரஹ்மாவின் புதல்வன், பாபம் நீங்காதவன் - ப்ரஜாபதியால் அருளப்பட்ட நாமத்துடன், அஷ்ட மூர்த்திகளையுடையவன் - தேவதைகளின் வரத்தால் பசுபதியானவன். விஷ்ணுவால் தாங்கப்படுபவன். முதலிய நிலைகள் பரம காரணத்வ விரோதியான சிஹ்னங்கள். இங்கு ப்ரஹ்மா நாராயணனாத்மகன் ஆகையால் ருத்ரன், நாராயணனால் படைக்கப்பட்டவன் என்று கூறும் ச்ருதிகளோடு விரோதமில்லை.

மேலும் பூர்வபக்ஷத்தில் கூறிய விச்வாதிக: முதலிய ச்ருதிகளும் பூர்வ பக்ஷியின் கருத்தைக் காட்டமாட்டா. அதற்கு முன்னுள்ள ஸநோதேவ: என்று ப்ரஸித்தமான பொருளைப்பரிசீலனை செய்தால், ருத்ரனுக்குக்

கார்யத்வம், கர்மவச்யத்வம் முதலியன கூறப்பட்டிருப்பதாலும், காரண மென்று ப்ரஸித்தி இல்லாமையாலும் இங்குள்ள ருத்ர சப்தம் ஸம்ஸாரம் என்னும் மஹாரோகத்தை நீக்குபவன் என்ற காரணம் பற்றி 'ருத்ரோ பஹு சிரா பப்ரு:' என்றபடி ஸ்ரீமந் நாராயணனையே குறிக்கவல்லதாகும். அடுத்து விச்வாதிகோருத்ரோ ஹிரண்ய கர்ப்பம் ஜனயாமாஸ என்னும் வாக்யமும் ச்வேதாச்வதரத்திலுள்ளது. ஆரம்பத்தில் எது காரணம் - ப்ரஹ்ம எனத் தொடங்கி அபஹதபாப்மத்வாதி, ஸர்வாந்தர்யாமித்வ, அகில ஜகத் காரணத்வ, மோக்ஷப்ரதத்வாதிகளை நினைவுபடுத்துவதால், ருத்ரனுக்கு ப்ரஹ்ம ஜகத்வமும், யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம், நாராயணாத் ப்ரஹ்மாஜாயதே இத்யாதி ச்ருதிகளில் ப்ரஸித்தமாதலாலும் ருத்ரசப்தம் ஸ்ரிய: பதியையே குறிப்பதாகும். ச்வேதாச்வதரத்தில் வேது கண்டம் வரை பற்பல உபநிஷத்துக்களிலும் ப்ரஸித்தமான நாராயணனின் அஸாதாரண மான சிஹ்னங்களே காணப்படுவதால் ச்வேதாச்வதரம் ஸ்ரீமந் நாராயண பரமே; இப்படி பலபல ப்ரமாணங்களும், நாராயண பரத்வத்தையே காட்டு கின்றன. அப்படியாகில், உமாஸாஹித்யாதி லிங்கங்கள் சிவனுக்கேயுரியவை எப்படி சமாளிக்கக் கூடியவை என்றால்.

ப்ரதர்த்தனவித்யையை அனுஸரித்து, உமாஸஹாயத்வாதி லிங்கங் களுக்கு ப்ரஸித்த ருத்ராந்தர்யாமி ஸ்ரீமந் நாராயண உபாஸன பரத்வம் ஏற்கவேண்டும். இப்படி வழி கூறுவிட்டால் கைவல்யோபநிஷத்தில் நாராயணனே மோக்ஷ ஸாதனமெனக் கூறி - மற்றோர்க்கு மோக்ஷ சாதனத்வ மில்லை என்று கூறியதாலும், அத்ப்யஸ்ஸம்பூத: என்றவிடத்தில் லக்ஷ்மீபதியின் உபாஸனம் தவிர ஏனையவற்றிற்கும் மோக்ஷ சாதனத்வம் இல்லையென்றதாலும் ஒன்றுக்கொன்று விரோதம் வரும்.

## அதன்மேல் வேறு பூர்வபக்ஷம்

நீங்கள் கூறிய ப்ரதர்தனவித்யைப்படி நாராயண உபாஸன பரங்களான வாக்யங்கட்கு நாராயணாந்தர்யாமியான ருத்ரோபாஸனமே தாத்பர்யம் சொன்னால் நீவிர் கூறிய தோஷம் சாந்தமாகிவிடும். ஆதலின், இதுவே உசிதம் என்ற பூர்வபக்ஷத்திற்கு விடை கூறப்படுகிறது. நாராயணாந்தர்யாமி ருத்ரன் என்றால் - பிரஸித்தமான ருத்ரர்களில் ஒருவரா? அல்லது வேறுபட்டவரா? ப்ரசித்த ருத்ரன்தான் என்றால், நாராயணாத்த்வாத சாதித்யா ருத்ராவஸவஸ்ஸர்வாணி ச்சந்தாம்ஸி நாராயணாதேவ ஸமுத்பத்யந்தே நாராயணே ப்ரலீயந்தே முதலிய வாக்கியங்களால் கார்யத்வமும் கர்ம வச்யத்வமும் ச்ருதி ஸித்தங்களானமையால் - ஸர்வகாரணத்வம் பொருந் தாமையால் காரணத்வ வ்யாப்தமான (இணை பிரியாத) ஸர்வாந்தர் யாமித்வமும் கூடாததலின் நாராயணாந்தர்யாமித்வமும் பொருந்தாது.

ஸர்வ வேதாந்தங்களிலும் ப்ரயோகிக்கப்படும் சம்பு, சிவன், ருத்ரன் என்னும் சொற்களும் - உமாஸஹாயன் போன்ற அசாதாரண (சிறப்பான) தர்மத்தைக் காட்டும் சொற்களும் முன் கூறிய நியாயப்படி ஸாக்ஷாத் நாராயணனையே பொருளாகக் குறிப்பதாலும், ருத்ராந்தர்யாமி நாராயணனென்றும், (நீவிர் கூறியபடி) வேறுவித நிர்வாஹம் ஏற்படுவதால் பிரஸித்தமல்லாத வேறு ருத்ரன் என்று பொருளைப் போதிக்கா, ஆதலால் இரண்டாவது பக்ஷமும் (ப்ரஸித்தமல்லா வேறு ருத்ரன் என்று) தகாது.

ஆமாம், முன் சொன்ன ந்யாயப்படி ப்ரஸித்தமாயோ அல்லது அப்ரஸித்தமாயோவுள்ள ருத்ரனைத் தவிர்த்து நாராயணன் ஸித்திக்காது என்றால் என்ன என்று. அடுத்த வினு:- ப்ரஸித்தமான ருத்ரன், சதுர்முகன், இந்திரன் இவர்களுக்கும் கார்யத்வத்தாலும், கர்மவச்யத்வத்தாலும் அகில ஜகத் காரணத்வம் தகாதென்று சித்தமானபடியால் இவர்களைவிட வேறான ஒன்று காரணம் என்று கூறவேண்டும். அது எதுவாயிருக்கலாமென்று சம்சயம் தோன்ற, ஸஹஸ்ர சீர்ஷாபுருஷ: முதலிய வாக்யங்களில், ஸர்வ காரணன் யாரென்று அடையாளங்காட்டி, புருஷன் எனப்படும் மோக்ஷ ஸாதன வித்யைகளால் அறியப்படும் நிலையைத் தெளிவுபடுத்தி, அந்த மஹா புருஷனுக்கே அத்ப்ய: ஸம்பூத: என்கிறவிடத்தில் தானே தோன்றிய ச்ரியப் பதித்வத்தைக் காட்டியதால் அம் மஹாபுருஷனுக்கே பின்னும் ஸஹஸ்ர சீர்ஷம் தேவம் என்று ஒரு விசேஷணமுமின்றியே தேவன் என்ற சொல் உரியதாகவும்- அதே வித்யையில் வேத்யர்களான சம்பு சிவாதி சப்தங்களின் பொருளும் அவனேயென்று காட்டியதால் - நாராயணனை ஜகத்காரணனெனவும் ஸித்தம். நாராயணன் இரு தரப்பினராலும் ஏற்கப்பட்டிருப்பதால் - ஹேய குணங்கள் கலவாத அவனைவிட்டுவிட யாருக்கும் சங்கையே உதிக்கமுடியாது.

இல்லை, ருத்ரனுக்குக் கார்யத்வம் இருப்பதால் காரணத்வம் பொருந்தாதாதலின், காரண ருத்ரனுக ஸதாசிவனை ஏற்றுக்கொள்கிறோம் என்றால், ஹிரண்ய கர்ப்பஸ் ஸமவர்த்ததாக்ரே, அக்நிரக்ரே ப்ரதமோ. தேவதாநாம். நகிரிந்த்ரத்வதுத்தர: என்றித்தகைய ச்ருதிகள் அவ்வோ புராணங்களில் புகழப்பட்டிருப்பதால் - கார்யத்வம் - கர்மவச்யத்வம் இருப்பினும், காரணத்வம் சொல்வதற்காக வேறுபட்ட தேவதைகளான - ஸதாஹிரண்யகர்ப்பன், ஸதாக்னி, ஸதேந்த்தரன் முதலிய தேவதைகளைக் காரணமாகக் கூறுகின்றனவென்றால் எப்படியோ அப்படியே சதாசிவம் என்று ஒன்றைப் புதிதாகக் கல்பனை செய்வதும் பொருந்தாது.

*கேள்வி :* காரணத்வ வ்யாப்தமான ஸர்வாந்தர்யாமித்வம் நாராயணனுக்கே - சிவபெருமானுக்கில்லை யென்று சொல்லவொண்ணாது.

1. ஸர்வானன சிரோக்ரீவ: ஸர்வ பூதகுஹாசய:

ஸர்வவ்யாபீச பகவான் தஸ்மாத் ஸர்வகதச் சிவ:

2. விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம் ஈசம் தம் ஜ்ஞாத்வா சிவம் என்றும்.

3. யோவை ருத்ரஸ்ஸ பகவான் யச்சப்ரஹ்மா என்னும் அந்தர் யாமித்வம் சிவபிரானுக்கும் கூறலாமே.

*விடை :* மேற்கூறிய வாக்யங்களில் நாராயணனின் பரத்வம்—சிறப்பே தெளிவாகிறது. ஸர்வானன சிரோக்ரீவ: என்ற ச்ருதியில் அந்தர்யாமி-யானவனுக்கே ஸஹஸ்ர சீர்ஷத்வம் கூறி - பகவானென்று கூறுவதால் ''ஏவ மேஷ மஹாசப்தோ மைத்ரேய பகவாநிதி என்று பகவான் எனும் சொல் ஸ்ரீமந் நாராயணனையே குறிக்குமென்பதாலும், இங்குள்ள சிவ சப்தமும் பல தடவை வந்தாலும், ஆகாசாதிகரண ந்யாயத்தால் இடுகுறியைவிட்டு யோக வ்யுத்பத்தியால் நாராயணனையே குறிப்பதாகும். இந்நிலையில் அவன் அசுத்தமான ஸமஸ்த வஸ்துக்களுடனும் ஸம்பந்தித்திருந்தாலும் 6 குணங்களை (ஜ்ஞான சக்த்யாதிகள்) யுடையவன் என்ற பகவத் சப்தவாச்யனா யிருப்பதால் — சிவன் — மங்களமானவன் — சுத்தன் என்று பொருள்: இப்படிப் பொருள் கூருவிட்டால் ஷ ச்லோகத்தில் ஸர்வகத: என்பது கூறியது கூறல் என்ற குற்றத்தைப் பெறும். அது வீணனதுமாகும்; தேநேதம் பூர்ணம் புருஷேன ஸர்வம், அதபுருஷோ ஹவை நாராயணோz காமயத என்று ஸந்தேகமற்ற பலச்ருதி ஸம்ருதிகளால் ஸஹஸ்ர சீர்ஷ மஹாபுருஷனான நாராயணனே ஸர்வாந்தர்யாமியாவான். யோவை ருத்ரஸ்ஸ பகவான் என்று இரண்டையும் விசேஷண விசேஷ்யங்களாகச் சொல்லுகையில் பகவச் சப்தம் நாராயண பரமென்றே ஏவ மேவைஷ, இத்யாதி ஸ்ம்ருதிகளிலும் ப்ரசித்த மாதலின் - அவனே ஸர்வாந்தர்யாமீ என்று ஸித்தம்.

*கேள்வி :*— ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரா: தேஸர்வே ஸம்ப்ரஸூயந்தே என்று விஷ்ணுவுக்கும் உத்பத்தி கூறப்பட்டிருப்பதால் காரணத்வம் பொருந்தாததால் வேறு ஒருவனை ஏன் காரணமெனக் கூடாது.

*விடை :* ப்ரஹ்மனையும்-ஈசனையும் படைத்த நாராயணனே மத்ஸ்யாதி ரூபனாய் அவதரித்ததனுல்—அஜாயமானோ பஹுதா விஜாயதே என்றும் ரக்ஷார்த்தம் ஸர்வ பூதாநாம் விஷ்ணுத்வ முப ஜஜ்ஞிவான் என்றும்

சொல்லுகிறபடியால், நதஸ்ய ப்ராக்ருதா மூர்த்தி: மாம்ஸ மேதோஸ்தி- ஸம்பவா என்றபடியும் அப்ராக்ருத திவ்ய மங்கள விக்ரஹ விசிஷ்டனுய் விஷ்ணுவே அவதரித்தானென்பதால் அபஹதபாப்மாவான நாராயணனே பரமாத்மாவென்பதில் அனுபபத்தி கிடையாது. தனிப்பட்ட கல்பனையுமில்லை. மேலும் காரணத்வம், உபாஸ்யத்வம் இவற்றைக்காட்டும் வாக்யங்களிலுள்ள ஸத், ப்ரஹ்ம, அக்ஷரம், ருத்ரன், சம்பு, சிவன், ஹிரண்யகர்ப்பன் முதலிய சொற்களுக்கும் ஸப்ரஹ்மா ஸசிவ: ஸேந்த்ர: ஸோக்ஷர: பரமஸ் ஸ்வராட் என்று நாராயணனே பொருளென்று ஸ்தாபிக்கப்பட்டது-

இவ்வாறு பரவசிவன் காரணமாயும் அந்தர்யாமியாயும் பரம புருஷனுயும் இருக்கட்டும் என்பதற்குப் பல நூறு ப்ரமாணங்களைக் காட்டி கண்டனம் செய்து ஸ்ரீமந் நாராயணனே பரதத்வம் என்று இவ்வதிகரணத்தில் ஸ்தாபிக்கப்படுகிறது.

இந்தப் பாதத்தின் அதிகரணர்த்தங்களை ஸ்வாமி தேசிகன் அருளும் ச்லோகத்தின் கருத்துப்படி —

1. அனுமாதிகாதிகரணத்தில் - ஸாங்க்யர் கூறும் ப்ரக்ரியா ப்ரகாரங்களும்.

2. சமஸாதிகரணத்தில் - அவர்கள் ஏற்கும் ஸ்ருஷ்டிக்ரமமும்.

3. ஸங்க்யோபஸங்க்ரஹாதிகரணத்தில் - அந்த எண்ணிக்கை அமைப்பும்.

4. காரணத்வாதிகரணத்தில் - அவர்கள் கூறும் அவ்யாக்ருதத்துடன் ஐக்கியமும்.

5. ஜகத்வாசித்வாதிகரணத்தில் - தன் பாபம்பற்றிய வசனமும்.

6. வாக்யான்வயாதிகரணத்தில் - கர்மபலமான தோஷ ஸம்பந்தமும்.

7. ப்ரக்ருத்யதிகரணத்தில் - உபாதானத்திற்கும் நிமித்தத்திற்கும் கூறிய பேதமும்.

8. ஸர்வ வ்யாக்யானுதிகரணத்தில் ப்ரஹ்மா, ருத்ரன் முதலியவர்கட்குக் கூறும் காரணத்வமும் — ஆக எட்டு - பூர்வபக்ஷியின் யுக்த்யாபாஸ மூலகமான கூற்றுக்களால் முன் மூன்று பாதங்களின் கருத்துக்கள் தாக்கப்படவே - [illegible] அர்த்தங்களைக் காட்டி ச்ருதி தாத்பர்யங்களை வெளிப்படுத்தி [illegible] ரக்ஷித்தருளினர் என்பது திருவுள்ளம்.

முதல் அத்தியாயம் முற்றிற்று.